# சங்க இலக்கியம் காட்டும் ஊர்கள்

சென்னைப் பல்கலைக்கழக

முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக

அளிக்கப்பெற்ற ஆய்வேடு

ஆய்வாளர்

**பொன். ரமேஷ் குமார்**

மேற்பார்வையாளர்

**முனைவர் அரங்க இராமலிங்கம்**

பேராசிரியர்

தமிழ் மொழித்துறை

சென்னைப் பல்கலைக்கழகம்

சென்னை 600 005



**தமிழ் மொழித்துறை**

சென்னைப் பல்கலைக்கழகம்

பரிதிமாற்கலைஞர் வளாகம்

சென்னை - 600 005

ஜூலை - 2011

**முனைவர் அரங்க. இராமலிங்கம்**

பேராசிரியர்

தமிழ் மொழித்துறை

சென்னைப் பல்கலைக்கழகம்

சென்னை - 600 005

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

**‘சங்க இலக்கியம் காட்டும் ஊர்கள்’** என்னும் தலைப்பிலான இவ்வாய்வேடு (2008-2011) சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் மொழித்துறையில் முனைவர் பட்டத்திற்காக என் மேற்பார்வையில் ஆய்வாளர் **பொன். ரமேஷ் குமார்** அவர்களால் எழுதி அளிக்கப்பெற்றது என்றும் இவ்வாய்வேடு இதற்கு முன் வேறெந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

4-7-2011

**(அரங்க. இராமலிங்கம்)**

மேற்பார்வையாளர்

இடம்: சென்னை - 600 005

நாள்: 04-07-2011

PROFESSOR
DEPT. OF TAMIL LANGUAGE
UNIVERSITY OF MADRAS
CHENNAI - 600 005.

**பொன். ரமேஷ் குமார்**

முனைவர்பட்ட ஆய்வாளர்

தமிழ் மொழித்துறை

சென்னைப் பல்கலைக்கழகம்

சென்னை - 600 005

# ஆய்வாளர் உறுதிமொழி

**'சங்க இலக்கியம் காட்டும் ஊர்கள்'** என்னும் தலைப்பில் இவ்வாய்வேடு (2008-2011) சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் மொழித்துறையில் முனைவர் பட்டத்திற்காக எழுதப்பட்ட இவ்வாய்வேடு முனைவர் அரங்க. இராமலிங்கம் அவர்களின் மேற்பார்வையின்கீழ் என் முயற்சியில் உருவானது என்றும் இதற்குமுன் வேறெந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

இடம்: சென்னை - 600 005

நாள்: 04-07-2011

**(பொன். ரமேஷ் குமார்)**

ஆய்வாளர்

## நன்றியுரை

"சங்க இலக்கியம் காட்டும் ஊர்கள்" எனும் பொருண்மையில் ஆய்வு செய்வதற்கும் பல்கலைக்கழக விடுதியில் தங்கிப் பயிலுவதற்கும் அனுமதி வழங்கிய சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு நன்றியைத் தெரிவிப்பதில் மகிழ்கின்றேன்.

பேராசிரியர் அரங்க. இராமலிங்கம் அவர்கள் நெறியாளர் என்ற நிலையில் மட்டும் நின்று விடாமல் உற்றத் துணையாகயிருந்து ஊக்கமளித்து என்னைப் பல்வேறு பரிமாணங்களில் பயணிக்க செய்த நேயமிக்க பண்பாளர். அவருடன் பழகிய-பழகுகின்ற நாட்கள் அது எனக்கான இன்னொரு உலகம். பேராசிரியர் அவர்களுக்கு நன்றி தெரிவிப்பதில் பெரு மகிழ்வு கொள்கிறேன்.

சென்னைப் பல்கலைக்கழகத்தில் நான் முதுகலைப் படிப்பைத் தொடங்கிய நாள் முதல் இன்று வரை என்னை ஆற்றுப்படுத்திக்கொண்டிருக்கின்ற பேராசிரியர் வ. ஜெயதேவன் அவர்களுக்கு நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். எனக்குப் பள்ளிக்கல்வி, இளங்கலை, முதுகலை, ஆய்வியல் நிறைஞர் ஆகிய வகுப்புகளில் கல்விகற்றுக் கொடுத்த பேராசிரியர்களுக்கு இந்நேரத்தில் நன்றியை நவில்கின்றேன்.

முனைவர் பட்ட ஆய்வுக்காலத்தில் பல்லாற்றானும் உதவிப்புரிந்த முனைவர் மு. சற்குணவதி, முனைவர் ஒப்பிலா. மதிவாணன் மற்றும் தமிழ் மொழித்துறை, இலக்கியத்துறை பேராசிரியர்களுக்கும் நான் என்றும் நன்றியுடையேன்.

பேராசிரியர் அரங்க. இராமலிங்கம் அவர்களிடம் ஆராய்ச்சியாளராகச் சேர்வதற்கு அறிமுகப்படுத்திய முனைவர் ப. முருகன், ஆய்வேடு உருவாக்கத்தில் மிகுந்த உதவிப்புரிந்த முனைவர் இரகுராமன், இரா. புகழேந்தி, இரா. கார்த்திகேயன், பெ. ராஜகோபால், முனைவர் கன்னியம் அ. சதீஷ், எ. கலிவரதன், க. தமிழ், ஜா. கிரிஜா, ஜா. கீதா, இந்துமதி, க. வெங்கடேசன், விக்ரம், உதயக்குமார், சுதாகர், முனைவர் உத்தம் குமார், முனைவர் பீமாராவ், முனைவர் சி. இளங்கோ, பி.பொன்னுசாமி, வெ. ராம்ராஜ், மு. தேவராஜ், மோகனா, சா. பாத்திமா, தீபாராணி, பி. மாலதி, சுந்தரமூர்த்தி, என் வளர்ச்சியில் தொய்வில்லாமல் ஊக்கமளித்து வரும் த. உதயகுமார், IOB,

முனைவர் ஜெ. சுமதி, க. தவமணி, துளசிபாலன் ஆகியோருக்கு நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

ஆய்விற்குத் தேவையான உதவியினையும் நூல்களையும் அளித்து உதவிய சென்னைப் பல்கலைக்கழக நூலகம், ரோஜா முத்தையா ஆராய்ச்சி நூலகம், கன்னிமாரா நூலகம் மற்றும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூல் நிலையம் ஆகியவற்றின் பொறுப்பாளர்களுக்கு எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னை வளர்த்து உருவாக்கிய என் பெற்றோர் பொன். பொன்னுரங்கம் - பொன். சாந்தி, என் சிற்றன்னை திருமதி. பரிமளா முனுசாமி, என் சகோதரர்கள் பொன். மனோகரன், பொன். கருணாகரன், பொன். ராஜ்குமார், சகோதரிகள் பொன். பைரவி, மு. சீதாலட்சுமி ஆகியவர்களுக்கு நன்றி தெரிவிப்பதைவிட என்னை நான் இவர்களுக்கு சமர்ப்பணம் செய்வதே முறையாகும். என் வளர்ச்சியில் என்றும் ஊக்கமளித்து வரும் என் மடிப்பாக்கம் கிராம மக்களுக்கு நான் என்றும் கடமைப்பட்டவன்.

இந்த ஆய்வேட்டை இன்முகத்தோடு அழகிய முறையில் தட்டச்சு செய்து உதவிய அண்ணன் இல. கணேசன், ஆய்வேட்டை வடிவமைத்த டுடேகிராபிக்ஸ் பாபு ஆகியோர்க்கும் என் நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

## சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| இ.ப.க.த. | - | இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் பெருமன்றம் |
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| என்.சி.பி.எச். | - | நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட் |
| ஐங்கு. | - | ஐங்குறுநூறு |
| கலித். | - | கலித்தொகை |
| கழகம். | - | திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் |
| குறிஞ்சி. | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிலப். | - | சிலப்பதிகாரம் |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| திருமுருகு. | - | திருமுருகாற்றுப்படை |
| தொ.ஆ. | - | தொகுப்பாசிரியர் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நற். | - | நற்றிணை |
| நெடு. | - | நெடுநல்வாடை |
| ப. | - | பக்கம் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பக். | - | பக்கங்கள் |
| பட். | - | பட்டினப்பாலை |
| பதிற்று. | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| பு.பெ.பெ.ஊ. | - | புலவரால் பெயர் பெற்ற ஊர் |
| புறம். | - | புறநானூறு |

| | | |
|---|---|---|
| பெருங். | - | பெருங்கதை |
| பெரும். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருந. | - | பொருநராற்றுப்படை |
| ம.பெ.பெ.ஊ. | - | மன்னனால் பெயர் பெற்ற ஊர் |
| மணி . | - | மணிமேகலை |
| மதுரைக். | - | மதுரைக்காஞ்சி |
| மலை. | - | மலைபடுகடாம் |
| முல்லை. | - | முல்லைப்பாட்டு |
| மு.கு.நூ. | - | முன்னர்க் குறிப்பிட்ட நூல் |
| மொ.ஆ. | - | மொழிபெயர்ப்பு ஆசிரியர் |
| AER. | - | Annual Epigraphical Report |
| Ed. | - | Editor |
| ibid., | - | Ibidem, in the same place |
| No. | - | Number |
| Op.cit., | - | opera citato; in the same work |
| P. | - | Page |
| S.I.I. | - | South Indian Inscriptions |
| S.I.T.I. | - | South Indian Temple Inscriptions |

# பொருளடக்கம்

சங்ககாலத் தமிழ்ச் சமூகத்தின் வரலாற்று ஆவணம் சங்க இலக்கியம். அது ஒரு பண்பாட்டுப் பெட்டகம். ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோர் பலரைப்பெற்ற அறிவுக் கருவூலம். சங்க இலக்கியங்கள் ஒரு பொற்கால இலக்கியம் என்று போற்றப்படும் இந்நிலையில், அவ்விலக்கியங்கள் ஒரு முழுத்தன்மையைப் பெற்று விளங்குகின்றதென்றால் அதற்குச் சங்க இலக்கியம் தொடர்பான பல ஆய்வுகள் துணை நிற்கின்றன. சங்க இலக்கியத்தின் வழி அறியப்பெறும் பல்வேறு சிறப்புக் கூறுகளில் சிற்றூர், பேரூர், நகரம் என வருகின்ற ஊரப்பெயர்கள் குறிப்பிடத்தக்கதாகும்.

மனித இனம் ஓரிடத்தில் நிலைத்து வாழத் தொடங்கிய காலத்திலேயே இடப்பெயர்களும் தோற்றுவிக்கப் பெற்றிருத்தல் வேண்டும்.[1] சங்க இலக்கியத்தில் காணப்படும் ஊர்ப்பெயரமைப்பு முறைகள் அவ்வம் மக்களின் வாழ்விடம், வாழ்க்கைமுறை போன்ற பண்பாட்டுக் கூறுகளைப் பொறுத்து அமைகின்றன.

மனிதன் கூடி வாழ்பவன். எனவேதான் மனிதனைச் சமூக விலங்கு என்றழைக்கின்றோம். தம்மைச் சார்ந்தாரோடு கூடி வாழ்ந்து இன்பம் துய்க்கப்பாடுபடும் மனிதன், அதற்குப் பகையாய் உள்ள அனைத்தையும் விட்டு விலகிச்சென்று, அதற்குத் துணையாக உள்ளவற்றை தன் முயற்சியாலேயே அமைத்துக் கொள்ள விழைகின்றான். இதன் காரணமாக அவன் வாழ்வதற்கேற்ற இடத்தையும், தொழில் புரிவதற்கேற்ற இடத்தையும் தக்க சூழ்நிலையமைப்பைக் கொண்டுத் தேர்ந்தெடுத்துக் கொள்கிறான். இவ்வாறு அவன் தேர்ந்தெடுக்கும் இடங்கள் பெரும்பாலும் ஆற்றங்கரையோரமாக அமைந்திருப்பதைக் காணலாம். தாம் தேர்ந்தெடுத்தப் பகுதியைப் பிறர் கண்டறிந்து வரவும், தம் இருப்பிடத்தைப் பிறர்க்குக் குறித்துச்சுட்டவும் எதேனும் ஓர் அமைப்பில் ஒரு பெயரிட்டு அழைக்க ஆசைப்படுகின்றான். இதனால் எழுகின்ற பெயரே ஊர்ப்பெயராகும். இப்பெயர் மனிதன் விருப்பத்திற்கு ஏற்ப அமைய நேரிட்டாலும், சூழலுக்கு ஏற்ப அமைவதைக் காண முடிகின்றது. இப்பெயர்கள் காரணப்பெயர்களாகவே அமைந்து விடுகின்றன. இடுகுறிப்பெயர்கள் மிகக் குறைவாகவே காணப்படுகின்றன.

சங்க இலக்கியத்தில் சுட்டப்பெறும் ஊர்ப்பெயர்கள் காரணமின்றித் தோன்றாமல் தமக்கென மிகப் பழைய மரபைப் பெற்றிருக்கின்றன. "எங்கே வரலாறு மௌனம் சாதிக்கத் தொடங்குகின்றதோ அங்கே இடப்பெயர்களும் ஊர்ப்பெயர்களும் தம் வாய் திறந்து பேசத்தொடங்கும்."[2] சங்க இலக்கியம் சுட்டும் இடப்பெயர்களும் ஊர்ப்பெயர்களும் தம் வாய் திறந்து பேச ஊர்ப்பெயராய்வு நல்ல வழி வகுக்கிறது.

மனிதப் பண்பாட்டையும், நாகரிகத்தையும் ஆராய்ந்து வெளிப்படுத்துவதில் வரலாற்றுக்கும், தொல்பொருளாய்வுக்கும் என்ன பங்கு உண்டோ அதே அளவு ஊர்ப்பெயராய்வுக்கும் உண்டு. இவ் ஊர்ப்பெயராய்வு இன்றைய மொழியியல் துறைக்குப் பெரிதும் உதவும். இத்துடன் கிளைமொழி ஆய்வுக்கும் பெரிதும் பயன்படும். நம் மொழியில் பிறமொழித் தாக்கம் எவ்வாறு வளர்ந்து வந்தது என்பதற்கும், அகராதிக் கலையை வளர்ப்பதற்கும் இவ்வாய்வு பயன்படும். மேலும், சமூகவியல், மானிடவியல், நாட்டுப்புறவியல், இயற்கையியல் முதலான பல துறைகளுக்கும் இவ்வாய்வுப் பயன்படும் என்பதால் இப்பொருண்மை தேர்வுச் செய்யப்பெற்றது.

சங்க இலக்கியப் பாடல்களில் ஊர்ப்பெயர்களின் பொருள் விளங்குமாறு நேர்முகமாகவும் மறைமுகமாகவும் புலவர்கள் பாடியிருக்கிறார்கள். மேலும், ஊரப்பெயரால் பெயர்பெறும் புலவர்களையும், ஊரோடு தொடர்ந்த பெயர் கொண்ட புலவர்களையும் சங்க இலக்கியத்தில் காண முடிகின்றது. இத்தகையச் சங்க இலக்கியத்திற்கு இலக்கண நூலாகத்திகழும் தொல்காப்பியம் மக்கள் வாழுமிடத்தை 'ஊர்' என்றே குறிப்பிட்டுள்ளது. எனவே, இவ்வூர்களின் அடையாளங்களைக் கண்டும், இவ்வூர்களின் சிறப்புகளைப் பதிவு செய்தும், இவ்வூர்களின் தற்கால நிலையை ஆராய்வதாக இவ்வாய்வு அமைகின்றது.

**ஆய்வு நோக்கம்**

ஒரு நாட்டின் பழங்கால வரலாற்றையோ, பண்பாட்டையோ அறிந்து கொள்ள இலக்கியங்கள், ஆவணங்கள், பழங்கதைகள், பிற நினைவுச் சின்னங்கள் மிகுதியும் துணை புரிகின்றன. அதே அளவு ஊர்ப்பெயர்களும் துணை புரிகின்றன எனலாம். சங்க இலக்கியத்தில் சுட்டப்பெறும் ஊர்ப்பெயர்களில் அக்கால மக்களின் அனுபவம்

பொதிந்துள்ளது. எனவே, இப்பெயர்கள் மனிதனின் மொழி மரபையும், பண்பாட்டையும் வளர்க்கின்றன. இதனடிப்படையில் சங்க இலக்கியம் காட்டும் ஊர்களை இனங் காணுவது அவசியம் என்ற நோக்கில் இவ்வாய்வு அமைகின்றது.

## ஆய்வு அணுகுமுறை

இவ்வாய்வில் ஊர்ப்பெயர்களைத் திரட்டுதல், எழுத்துச் சான்றுகளைத் திரட்டுதல், அடையாளங்காணுதல் (Identification), பொருள் கூறும்முறை (Interpretation) ஆகிய படிநிலைகளில் அமைந்த ஆய்வு முறைகள் பின்பற்றப்பட்டுள்ளன. இவ்வாய்வேட்டில் பகுப்பாய்வு அணுகுமுறையும் வரலாற்று அணுகுமுறையும் கையாளப்பட்டுள்ளன.

## ஆய்வு எல்லை

சங்க இலக்கியங்களான பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பெற்றுள்ளன.

## ஆய்வு மூலங்கள்

'சங்க இலக்கியம் காட்டும் ஊர்கள்' எனும் இவ்வாய்விற்கான மூலங்கள் இரு நிலைகளைக் கொண்டதாக அமைகின்றன. முதலாவதாக, ஊர்ப்பெயர்கள் தொடர்பான அடிப்படை விளக்கம் மற்றும் பதிவுச்செய்தல் என்ற நிலையில் அமைந்த நூல்கள் மற்றும் கள ஆய்வில் திரட்டப்பட்டத் தரவுகள் முதன்மை மூலங்களாகவும் (Primary Source), ஊர்ப்பெயர்களைப் பதிவு செய்து விளக்கம் காணும் முறையில் அமைந்த மாவட்ட கையேடுகள் (District Mannal and Gazetteer), இதழ்கள், கலைக் களஞ்சியங்கள், ஆய்வேடுகள் ஆகியன இரண்டாம் நிலைத் தரவுகளாகவும் (Secondary Sources) அமைகின்றன.

## ஆய்வு முன் முயற்சிகள்

'ஊர்ப்பெயர்கள்' குறித்ததாக அமையும் இவ்வாய்விற்கான முன் முயற்சிகளாக மேற்கொள்ளப்பெற்ற ஆய்வுகள் முழுமையான நிலையில் அமையவில்லை. குறிப்பாகச் சங்க இலக்கியத்தில் சுட்டப்பெறும் ஊர்ப்பெயர்கள்

தொடர்பாக வெளியான நூல்கள் மற்றும் ஆய்வுகள் சங்க இலக்கியம் சுட்டும் ஊரப்பெயர்களை முழுமையாக ஆராயவில்லை. இருப்பினும் இதுவரை வெளியான நூல்கள், ஆய்வுகள் ஆய்விற்கு முன் மாதிரியாகக் கொள்ளப்படுகின்றன.

சேதுப்பிள்ளை ரா.பி. - ஊரும் பேரும் (1956).

Nachimuthu, K. – Place names of Coimbatore district (Ph.D., Dissertation) Kerala University (1973).

நாச்சிமுத்து. கி. - தமிழ் இடப்பெயராய்வு (1983).

நாகராசன். கரு. - செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்கள் (1983).

சந்திரசேகரன். மெய். - தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள் (1984).

ஆளவந்தார். ஆர். - இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் (1984).

புனிதா.த. - பத்துப்பாட்டில் நகர வருணனை (எம்.பில். ஆய்வேடு) காஞ்சி மாமுனிவர் பட்ட மேற்படிப்பு மையம், புதுச்சேரி (2000).

மணிமாறன் பா. அ.ம. - மதுரை மாவட்ட ஊர்ப்பெயர்கள் (2004).

துர்காதேவி.கி. - சங்கத் தமிழக நகரங்கள் (பிஎச்.டி. ஆய்வேடு) தமிழ் இலக்கியத்துறை, சென்னைப் பல்கலைக்கழகம் (2006).

கம்பீரன். த. - திருவண்ணாமலை மாவட்ட ஊர்ப்பெயர்கள் (பிஎச்.டி.ஆய்வேடு) தமிழ் மொழித்துறை, சென்னைப் பல்கலைக்கழகம் (2006).

சென்னியப்பன். இரா.சி - பெரியார் மாவட்டம் ஊரும் பேரும் (2007)

### இயல் பாகுபாடு

முன்னுரை, முடிவுரை நீங்கலாக இவ்வாய்வு நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது.

**முன்னுரை**

ஆய்வேட்டின் இப்பகுதியில் ஆய்வுப்பொருள் தெரிவும் தேவையும், ஆய்வு நோக்கம், ஆய்வு அணுகுமுறை, ஆய்வு எல்லை, ஆய்வு மூலங்கள், ஆய்வு முன்முயற்சிகள் ஆகியவை விளக்கப்பெறுகின்றன.

**இயல் ஒன்று: சேர நாட்டு ஊர்கள்**

சேரர்-சொல்லும் பொருளும், சேர நாட்டின் சங்ககால எல்லை மற்றும் தற்கால எல்லை விளக்கப்படுகின்றன. சங்க காலத்தில் மேற்கு நாடாகிய சேர நாடு, குடபுலம் என்று வழங்கப்பட்டது. சேரநாட்டின் வளமும் அரசர்களின் வரலாறும் கூறுகின்ற தனித்தொகுப்பாகப் பதிற்றுப்பத்து விளங்குகின்றது. வஞ்சியைத் தலைநகராகக் கொண்டு சேர நாடு விளங்கியது. தொண்டியும் முசிறியும் துறைமுக நகரங்கள். தற்போது , சேலம், கோயம்புத்தூர், நீலகிரி, ஈரோடு, தர்மபுரி, நாமக்கல், கரூர், திருப்பூர், கிருஷ்ணகிரி போன்ற மாவட்டங்கள் சேர நாடாகும். சங்க இலக்கியம் சுட்டும் சேர நாட்டின் ஊரப்பெயர்கள், அவற்றின் சிறப்பு, தற்கால நிலை, சேரநாட்டின் புலவர்கள் போன்ற செய்திகளை ஆராய்வதாக இவ்வியல் அமைகின்றது.

**இயல் இரண்டு: சோழ நாட்டு ஊர்கள்**

சோழ நாடு தமிழகத்தின் கிழக்குப் பகுதியிலமைந்த நாடாகும். சங்க காலத்தில் சோழநாடு ‘குணபுலம்’ என்று வழங்கப்பட்டது. இதன் தலைநகரம் உறந்தை; துறைமுகம் புகார். தற்போது தஞ்சாவூர், திருச்சி, புதுக்கோட்டை, நாகை, திருவாரூர், பெரம்பலூர் போன்ற மாவட்டங்கள் சோழ நாட்டின் ஆட்சிப் பகுதிகளாகும்.

சோழ நாட்டின் எல்லை, சங்க இலக்கியத்தில் காணலாகும் சோழ நாட்டின் ஊர்கள், அவ்வூர்களின் இன்றைய நிலை, அவ்வூர்களின் சிறப்பு, சோழநாட்டுப் புலவர்களின் சிறப்பு போன்ற செய்திகள் இவ்வியலில் விளக்கப்பெறுகின்றன.

**இயல் மூன்று: பாண்டிய நாட்டு ஊர்கள்**

தமிழ் நாட்டின் தென் பகுதியில் அமைந்த நாடு பாண்டிய நாடு. இதனைத் 'தென்புலம்' என வழங்கினர். பாண்டிய நாட்டின் தலைநகரம் மதுரை; துறைமுகம் கொற்கை, இன்று மதுரை, திருநெல்வேலி, இராமநாதபுரம், தூத்துக்குடி, சிவகங்கை, திண்டுக்கல், கன்னியாகுமரி போன்ற மாவட்டங்கள் பாண்டிய நாட்டின் ஆட்சிப் பகுதிகளாகும். சங்க இலக்கியத்தில் காணலாகும் பாண்டிய நாட்டின் ஊரப்பெயர்கள், அவ்வூர்ப்பெயர்களின் சிறப்பு, அவ்வூர்ப்பெயர்களின் இன்றைய நிலை, பாண்டிய நாட்டுப் புலவர்களின் சிறப்பு போன்ற செய்திகள் இவ்வியலில் விளக்கப்படுகின்றன.

**இயல் நான்கு: தொண்டை நாடு மற்றும் தமிழக எல்லைக்கு அப்பாற்பட்ட ஊர்கள்**

சேர சோழ பாண்டிய நாடுகளே அன்றித் தொண்டை நாடும் சங்க காலத்தில் சிறந்து விளங்கியது. இப்பகுதியை ஆண்ட மன்னர்கள் தொண்டைமான் என்ற பெயரால் அழைக்கப்பெற்றனர். தொண்டை நாட்டின் தலைநகரம் காஞ்சிபுரம். தொண்டை நாட்டின் எல்லைகளாக இன்று காஞ்சிபுரம், திருவள்ளூர், சென்னை, வேலூர், திருவண்ணாமலை, விழுப்புரம் போன்ற மாவட்டங்கள் தொண்டைநாட்டின் ஆட்சிப்பகுதிகளாக விளங்குகின்றன. மேலும், தமிழர்கள் சங்க காலத்தில் வணிகம் காரணமாகப் பிற நாட்டினரோடு தொடர்பு வைத்திருந்தனர். தொடர்ப்பின் காரணமாகத் தமிழக எல்லைக்கு அப்பாற்பட்ட சில ஊர்கள் சங்க இலக்கியத்தில் காணப்பெறுகின்றன. எனவே, சங்க இலக்கியத்தில் அறியப்பெறும் தொண்டை நாடு மற்றும் தமிழக எல்லைக்கு அப்பாற்பட்ட ஊர்கள், அவ்வூர்களின் சிறப்பு, தொண்டை நாட்டுப் புலவர்களின் மாட்சிமை போன்ற செய்திகள் இவ்வியலில் ஆராயப்பெறுகின்றன.

## முடிவுரை

மேற்கண்ட நான்கு இயல்களிலும் கூறப்பெற்றுள்ளத் தரவுகளின் அடிப்படையில் ஆய்வு முடிவுரை அமைகின்றது. மேலும், மேலாய்வுக்கான களங்களும் சுட்டப்பெற்றுள்ளன.

சுருக்கக் குறியீட்டு விளக்கப் பகுதியில் குறிப்பிடப்பட்டுள்ள சுருக்கக் குறியீடுகள் ஆய்வில் பயின்று வருகின்றன. ஆய்விற்கு உதவிய நூல்கள், ஆய்வேடுகள், ஆய்வுக் கட்டுரைகள் ஆகியன துணை நூற்பட்டியலில் இடம்பெற்றுள்ளன. ஆய்விற்குப் பயன்படுத்தப்பெற்ற வரைபடங்கள், பிறதரவுகள் பின்னிணைப்பில் இடம்பெற்றுள்ளன.

## அடிக்குறிப்புகள்

1. ஆளவந்தார். ஆர்., கல்வெட்டில் ஊர்பெயர்கள் ப.1

2. Balakrishnan Nayar. T., Linguistic Anthropological and Archaeological approach- p. 35

பண்டைக் கால மக்களின் அக வாழ்க்கையையும், புறவாழ்க்கையையும் சங்க இலக்கியத்தின் வாயிலாக அறிய முடிகின்றது. மன்னர்களின் ஆட்சிமுறை, போர்முறை, கொடைத்தன்மை, புலவர்கள், பண்பாடு, நாட்டின் எல்லைகள் ஆகியவற்றையும் அறியலாம். தொன்மத் தமிழ்ச் சமூகம் சேர, சோழ, பாண்டியரென்ற மூவேந்தருக்கு உரியதாய் விளங்குகிறது. இதனை 'வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்' (தொல். 1336) என்றும் 'பொதுமை சுட்டிய மூவருலகம்' (புறம். 357-2) என்றும் புலவர்கள் பதிவு செய்துள்ளனர்.

## சேரர் - சொல்லும் பொருளும்

'இராமாயணக் காலத்தில் சீதையைத் தேடிச்சென்ற வானர வீரர்களுக்குச் சுக்கிரீவன் வழித்துறைகளை வகுத்துரைக்கும்போது சேர, சோழ, பாண்டிய நாடுகளைக் குறிப்பிடுகிறார் கம்பர். உதிட்டிரன் இராயசூய வேள்வி வேட்டபோது சேர, சோழ, பாண்டியர் மூவரும் வந்திருந்ததாக வியாசரும் கூறுகிறார்.[1] கிரேக்கத்தூதரான மெகஸ்தனிஸ் தமது குறிப்பில் சேரர்களைச் சேரமான்கள் என்றே குறிப்பிட்டுள்ளார்.

திருஞானசம்பந்தர் தமது பதிகங்களில் சேரர், சேரலர் என்னும் சொற்களைப் பயன்படுத்துகின்றார். இவர் வாழ்ந்தது ஏழாம் நூற்றாண்டாகும். இதனை நோக்கும் போது சேரர், சேரலர் என்னும் சொற்களே வழக்கில் வந்தனவாகும். அசோகனது கல்வெட்டுகளில் உள்ள சேரல புத்திரர் என்பதைக் கேரள புத்திரர் என்றே வடமொழி அறிஞர்கள் படித்து வந்துள்ளனர். கல்வெட்டில் உள்ள பிராமி எழுத்துகள், சேரலபுத்திரர் என்று படிக்கும் வண்ணமும் உள்ளது. அதைப் படித்த அறிஞர்கள் கேரளபுத்திரர் என்றே படித்து வந்ததனால், பிற்கால அறிஞர்களும் கேரளபுத்திரர் என்றே கூறிவந்தனர்.[2]

இவ்வகையில் சேரலர் தம்மைக் கேரளரென வழங்கத் தலைப்பட்ட காலமானது, தமிழ்மொழியானது சிதைந்து மலையாளமாக மாறிய காலமாகும். கேரளர் என்னும் சொல்லானது கி.பி. ஏழாம் நூற்றாண்டிற்குப் பின்தான் மாறிற்று. அதனால் கி.பி. பதினோராம் நூற்றாண்டில் வாழ்ந்த பிற்காலச் சோழன் வீரராசேந்திரன்

கல்வெட்டுகளில் கேரளாந்தகன்[3] என்றே குறிப்பு உள்ளது. இன்றும் மதுரை, திருநெல்வேலி, இராமநாதபுரம் போன்ற மாவட்டங்களைச் சார்ந்தவர்கள் தங்களது ஊர்களை வடவரிட்ட பெயராலேயே அழைத்து வருதல் காணலாம். இது வடமொழியின் மீது உள்ள பற்றினால் எழுந்ததே ஆகும். இந்த வகையில் கேரளம் என்னும் சொல் வழக்கினையே பெரிதும் விரும்பி வழங்கி வந்தனர்.

## நாடும் எல்லைகளும்

சேர மன்னர்களைப்பற்றிக் கூறும் சங்ககால நூல்களில் நாட்டினது பரப்பும் அதன் எல்லைகளும் குறிக்கப்பெற்றுள்ளன. பதிற்றுப்பத்து, அகநானூறு, புறநானூறு, சிலப்பதிகாரம் முதலிய நூல்களில் சேர நாட்டில் அடங்கியுள்ள பகுதிகள் குட்டநாடு, குடநாடு, துளுவநாடு, பூழி நாடு, குன்ற நாடு, மலைநாடு, கொங்குநாடு, பொறைநாடு முதலியன ஆகும். இதில் அயிரைமலை, நேரிமலை, செருப்பு மலை, அகப்பாக் கோட்டை, உம்பற்காடு, நறவுத்துறைமுகம், முசிறித்துறைமுகம், தொண்டித் துறைமுகம் ஆகிய இடங்களும் அடங்கும். பல அரசர்கள் வஞ்சியையும் சிலர் மாந்தையையும் தலைமை நகராகக் கொண்டு ஆட்சி செய்தனர். சேர மன்னர்களின் இவ்வஞ்சி நகரைப்பற்றி அறிஞர்களிடையே கருத்து வேறுபாடுள்ளது. ‘சேரன் வஞ்சி’ எனும் சிறந்த நூலை எழுதிய சா. கிருஷ்ணமூர்த்தி என்பவர் சேர நாட்டின் பெரியாறு என்னும் ஆற்றின் அருகில் உள்ள கரூர்ப்பட்டினமே சேரர்களது வஞ்சி மாநகர் என்று குறிப்பிட்டுள்ளார். இதையே திரு. கனகசபைப்பிள்ளையவர்களும், திரு. கே. ஜி. சேஷய்யரும் ஒப்புக்கொண்டுள்ளார்கள். கொங்கு நாட்டில் உள்ள கரூர், ஆனிலை என்ற நகரத்தையும், அதைச்சுற்றிள்ள இடத்தையும் பிற்காலச் சேரர்களே வென்று தங்கள் நாட்டுடன் சேர்த்துக்கொண்ட பிறகு அதற்குச் ‘சேரர் கொங்கு’ என்ற பெயரும் வழங்கினர். எனவே, சேர நாட்டில் உள்ள கரூர்ப்பட்டினமே (இன்றைய கரூர்) சங்க நூல்களில் கூறப்பெறும் வஞ்சிமா நகரம் எனக் கொள்ள வேண்டும். இவ்வாறு சேரர்களின் நாடு, எல்லை, ஆட்சி முறைகளை அறிய மேற்கூறிய நூல்கள் துணைபுரிகின்றன. இனிச் சேரமாநாட்டின் சங்க இலக்கியப் பாடல்களில் காணலாகும் ஊர்களைப் பின்வரும் தலைப்புகளின் கீழ்க்காணலாம்.

## சேரநாட்டின் இன்றைய எல்லை

சேரர்கள் வாழ்ந்து ஆட்சி செய்த பகுதிகளாக இன்று சேலம், கோயம்புத்தூர், நீலகிரி, ஈரோடு, தர்மபுரி, நாமக்கல், கரூர், கிருஷ்ணகிரி போன்ற தமிழ்நாட்டின் மாவட்டங்களும், கேரளநாட்டின் திருவனந்தபுரம் வரையுள்ள (அதாவது, பண்டைய கேரள மாநிலத்தின் பாதி அளவு) பகுதிகளும் சங்ககாலச் சேரர்களின் ஆட்சிப்பகுதிகளாக விளங்கியது ஆகும்.

எனவே, சேரநாட்டின் தற்போதைய இவ்வாட்சிப்பகுதிகளை மையமிட்டு, சங்க இலக்கியத்தில் சுட்டப்பெறும் ஊர்ப்பெயர்களை அடையாளம் கண்டு, அவ்வூர்களின் சிறப்புக்களை ஆராய்வதாக இவ்வியல் அமைகின்றது.

## அந்தியூர்

அந்தியிளங்கீரனார் என்ற புலவரின் மூலம் 'அந்தியூர்' அறியப்படுகின்றது. அந்திமாலை நேசத்தைக் குறிக்கும். அந்தி நேரத்தில் ஆநிரைக்கூட்டங்கள் அடைக்கப்பட்டன. பின்னர் ஏற்பட்ட குடியேற்றம் அந்தியூர் எனப்பட்டது. அந்தியிளங்கீரனார் தம் பாடலில்,

*மைஇல் மான்இனம் மருள, பையென*
*வெந்துஆறு பொன்னின் அந்தி பூப்ப* (அகம். 71 : 5-6)

என்று குறிப்பிட்டுள்ளார்.

பூத்துக் குலுங்கிய இடமே அந்தியூர், 'அந்தியூர் சீற்மை' என்பது சாசனத் தொடராகும். இங்குக் கிடைத்த பழங்காலக் கல்வெட்டுச் (தெ.இ.கோ.சா.1173) சங்ககால அந்தியூர், தற்போது ஈரோடு மாவட்டத்தில் இருக்கும் அந்தியூரே ஆகும்.

## ஈர்ந்தை

"பூங்கமழும் ஈங்கியூர்" என்பது ஊர்த்தொகைப்பாடல்[4] இங்கு அருள்பாலிக்கும் அல்லான ஈசுவரனை ஈக்கள் வழிபட்டு அருள் பெற்ற காரணத்தால் ஈக்கு ஊர் - ஈங்கூர்[5] எனப்பட்டது.

ஈஞ்சை என்பது ஒருவகை மரம். இம்மரப்பெயர் வேளாளர் குடிக்குக் குலப்பெயராயிற்று. இவ்வூரைச்சுற்றி ஈஞ்சன் கட்டத்தைச் சேர்ந்த வேளாளப் பெருமக்கள் மிகுதியும் வசிக்கின்றனர். அவர்கள் வசிக்கும் ஊர் ஈங்கூர் ஆயிற்று. 'ஈர்ந்தையோன் என்ற சங்க காலத்தலைவன் வாழ்ந்த ஊர் ஈங்கூர்'[6]. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை அவர்கள் புறநானூற்றில் ஈர்ந்தூர் என்பது இக்காலத்தே கொங்கு நாட்டில் ஈங்கூர் என வழங்குகின்றது என்று குறிப்பிட்டுள்ளார். உ.வே. சாமிநாதையர் தமது பதிப்பில் ஈர்ந்தூர் என்பதைப் பாடபேதமாகக் காட்டியுள்ளார்.

*ஈரந்தை யோனே பாண்பசிப் பகைஞர்* (புறம். 180-7)

புறநானூற்றில் குறிப்பிடப்பெறும் ஈரந்தை -> ஈங்கூர் -> ஈர்ந்தூர் என மருவி வந்திருப்பதைக் காணமுடிகின்றது. ஈரோடு மாவட்டத்தில் ஈர்ந்தூர் என்ற ஊர் தற்போது உள்ளது.

**உம்பற்காடு**

அகநானூற்றில் 264-ஆம் பாடலைப் பாடிய உம்பற்காட்டு இளங்கண்ணனார் என்ற புலவரின் மூலமும்,

*இமைய வரம்பன் தம்பி அமைவரே*
*உம்பற் காட்டைத் தன்கோல் நிறீஇ* (பதிற்று. 3 பதி: 1-2)

என்ற பாடலின் மூலமும் உம்பற்காடு எனும் ஊர்ப்பெயரை அறிய முடிகின்றது. இது கொங்கு நாட்டின் தென்மேற்கிலுள்ள யானை மலைப்பிரதேசம். (உம்பல்-யானை) தற்போது இவ்வூர் கோயம்புத்தூர் மாவட்டத்தில் பொள்ளாட்சி வட்டத்திலுள்ளது. ஆனையமணியெனத் தற்போது அழைக்கப்படுகிறது. யானை மலைகள் சராசரி 7,000 அடி உயரமுள்ளவை. யானை முடி மிக உயரமானது. அதன் உயரம் 8,837 அடி. இங்குள்ள காடுகளில் யானைகள் அதிகமாயிருந்ததால் யானை மலைக்காடு (உம்பற்காடு) என்று பெயர் பெற்றது.

சேரநாட்டு அரசர் கொங்கு நாட்டைப் பிடிக்கத் தொடங்கினபோது முதல் முதலாக யானை மலைப்பிரதேசத்தைப் பிடித்தார்கள். இமயவரம்பன்

நெடுஞ்சேரலாதனுடைய தம்பி பல்யானைச் செல்கெழு குட்டுவன் உம்பற்காட்டை வென்று கைப்பற்றினான். இவருடைய தமயனாகிய இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் (செங்குட்டுவனுடைய தந்தை) 'தன் மீது 2-ஆம் பத்துப்பாடிய குமட்டூர்க் கண்ணனார்க்கு உம்பற்காட்டில் ஐஞ்ஞூறூர் பிரமதாயங் கொடுத்தான்.[7] சேரன் செங்குட்டுவன் தன்மீது ஐந்தாம் பத்துப்பாடிய பரணர்க்கு வாரியை (வருவாய்)க் கொடுத்தான்.[8] இதனால் யானைமணிப்பிரதேசமான உம்பற்காட்டைச் சேர மன்னர் கைப்பற்றி இருந்தார்கள் என்பது தெரிகின்றது. உம்பற்காட்டில் பல ஊர்கள் அடங்கியிருந்தன.

**ஓகந்தூர்**

இது கொங்கு நாட்டிலிருந்த ஊர். இருந்த இடம் தெரியவில்லை. கொங்நாட்டையரசாண்ட செல்வக்கடுங்கோவாழியாதன் இந்த ஊரைத் திருமால் கோயிலுக்குத் தானஞ் செய்தான் என்று பதிற்றுப்பத்து ஏழாம் பத்துப் பதிகம் கூறுகிறது.

*ஆக்கிய பொழுதின் அறத்துறை போகி,*
*மாய வண்ணனை மனனுறப் பெற்று, அவற்கு*
*ஒத்திர நெல்லின் ஒகந்தூர் ஈத்துப்* (பதிற்று. 7பதி: 7-9)

**கட்டி நாடு**

கொங்கு நாட்டின் வடக்கிலிருந்தது கட்டி நாடு.[9] கட்டி நாட்டையாண்ட அரசர் பரம்பரையினர் 'கட்டியர்' கட்டி எனப்பெயர் பெற்றிருந்தனர். கட்டி நாட்டின் வட எல்லை வடுக (கன்னட) நாட்டின் எல்லை வரையில் இருந்தது. கட்டி நாட்டுக்கு அப்பால் மொழிபெயர் தேசம் (வேறுமொழி கன்னட மொழி) இருந்தது. சங்க இலக்கியப் பாடல்களில் பதினைந்து இடங்களில் கட்டி நாட்டினைப் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது. ஆனால் கட்டி நாட்டின் இன்றைய ஆட்சிப்பகுதி சரியாகத் தெரியவில்லை. கட்டியரசு பரம்பரை விசயநகர அரசர் காலத்திலும் இருந்தது.

*கட்டி. . . .. . . . .* (அகம். 44-8)

*போர்அடு தானைக் கட்டி* (அகம். 226:16)

*நீயே, வினைமான் காழகம் வீங்கக் கட்டிய* (கலித். 7:9)

| | |
|---|---|
| *செறியக் கட்டி, ஈரிடைத் தாழ்ந்த* | (கலித். 85:8-9) |
| *பிடியமை நாலொடு பெய்ம்மணி கட்டி* | (கலித். 140-6) |
| *வல்வேறு கட்டி நல்நாட்டு உம்பர்* | (குறுந். 11-6) |
| *தேம்பூங் கட்டி என்றனிர், இனியே* | (குறுந். 196-2) |
| *குருதி ஒண்பூ உருகெழக் கட்டி* | (நற். 34-3) |
| *பருதி போகிய புடைகிளை கட்டி* | (பதிற்றுப். 74-12) |
| *அழல்வினை அமைந்த நிழல்விடு கட்டி* | (பதிற்றுப். 81-16) |
| *கட்டிப் புழுக்கின் கொங்கர் கோவே* | (பதிற்றுப். 90-25) |
| *நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளான்* | (பெரும். 164) |
| *பொன்புனை வாளொடு பொலியக் கட்டி* | (மதுரைக். 434) |
| *மெல்லிரு முச்சிக் கவின்பெறக் கட்டி* | (குறிஞ். 104) |
| *நுண்வினைக் கச்சைத் தயக்கு அறக்கட்டி* | (குறிஞ். 125) |

**கண்டீரம்**

கண்டீரம் என்ற ஊர் கொங்கு நாட்டிலிருந்தது.[10] தற்போது எந்த இடத்தில் உள்ளது என்பதை அறியமுடியவில்லை. கண்டீரம் என்ற சொல் சதுரக்கன்னி என்ற பொருளையுடையது. இது மலைப்பகுதியில் காணும் தாவரவகை. இவ்வகைத்தாவரம் நிறைந்த பகுதி என்னும் பொருளில் கண்டீரம் என இவ்வூர் பெயர் பெற்றிருக்க வாய்ப்பு உண்டு.

பெருநள்ளி என்ற வள்ளல் கண்டீரம் என்ற ஊரின் தலைவன். எனவே கண்டீரக் கோப்பெருநள்ளி எனப் பெற்றான். இவனைப் பற்றி வன்பரணர் பாடிய பாடல்கள் சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளன. கடையெழு வள்ளல்களில் ஒருவனாகிய கண்டீரக்கோப் பெருநள்ளி தோட்டி என்னும் மலைக்கும் அதைச்சார்ந்த மலைநாட்டுக்கும் தலைவன் எனத் தெரிவதால் கண்டீரம் என்பது தோட்டி மலைப்பகுதியைச் சார்ந்ததாக இருந்திருக்க வேண்டும். புறநானூற்றில் 148 முதல் 151 வரையுள்ள பாடல்கள் வன்பரணர் கண்டீரக்கோப் பெருநள்ளியைப் பாடியவை.

*இரும்பு புனைந்து இயற்றாப் பெரும்பெயர்த் தோட்டி*

*அம்மலை காக்கும் அணிநெடுங் குன்றின்*

*பளிங்கு வகுத்தன்ன தீம்நீர்*

*நளிமலை நாடன் நள்ளி அவன்எனவே* (புறம். 150:24-28)

**கருவூர்**

திருச்சிராப்பள்ளி மாவட்டம், கரூர் வட்டத்திலிருந்த இவ்வூர், தற்போது தனி மாவட்டமாக உள்ளது. அமராவதி ஆற்றங்கரையில் இவ்வூர் உள்ளது. இப்பகுதியிலுள்ள எல்லா ஊர்களுக்கும் இவ்வூர் மையமாக - கருவூலமாக - கருவாக அமைந்ததால் கருவூர் எனப் பெயர்பெற்று நாளடைவில் கரூர் ஆயிற்று எனலாம்.

கொங்கு நாட்டின் ஒரு பகுதியாக, கரூர் இருந்தது. சேரர் இந்நகரத்தைக் கைப்பற்றிய பிறகு, தங்கள் சேரநாட்டின் தலைநகரமாகக் கருவூரின் பெயரையே அமைத்துக்கொண்டனர். “கி.பி. 15-இல் தாலமி (ptolemy) தம்முடைய நூலில் இதைக் கரொவுர (karoura) என்று குறிப்பிட்டுள்ளார்.[11] ரோமானியச் சக்ரவர்த்தி அகஸ்டஸ் என்பவரின் நாணயங்கள் இப்பகுதியில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. சேர மன்னரை அடுத்துப் பிற்காலச் சோழர்கள் ஆட்சி நடைபெற்றது. கி.பி. 14-ஆம் நூற்றாண்டில் மாலிக்காபூர் படையெடுத்து இவ்வூரினைக் கைப்பற்றினான். 50 ஆண்டுகள் கழித்து விசயநகரப்பேரரசர் கைப்பற்றினர். இவர்களுக்குப்பிறகுக் குறுநில மன்னர்கள் ஆண்டனர். இறுதியாக ஆங்கிலேயர் ஆட்சிக்குட்பட்டது.

சங்க காலத்தின் இறுதியில் கி.பி. முதல் நூற்றாண்டின் தொடக்கத்தில் இரண்டு கருவூர்கள் இருந்தன. ஒன்று மேற்குக் கடற்கரையில் சேரரின் தலைநகராக இருந்த கருவூர். இன்னொன்று கொங்குநாட்டின் தற்போதைய கருவூர். இவ்விரண்டு கருவூருக்கும் வஞ்சி என்று வேறு பெயரும் உண்டு. இரண்டு கருவூர்களையும் சங்க இலக்கியம் சுட்டுகிறது.

*கடும்பகட்டி யானை நெடுந்தேர்க் கோதை*

*திருமா வியனகர்க் கருவூர் முன்றுறை* (அகம். 98:21-22)

கொங்கு நாட்டிலிருந்த (தற்போதைய கரூர்) கரூவூர் சேர அரசர் காலத்திலும் அதற்குப் பிற்பட்ட காலங்களிலும் பெரிய வணிக நகரமாக இருந்துள்ளது என்பதை இங்குக் கிடைத்துள்ள கல்வெட்டுக் (S.I.I. Vol.iv No. 387) குறிப்பிடுகின்றது. இக்கல்வெட்டின் மூலம் சங்க காலத்தில் இரண்டு கரூவூர்கள் இருந்தாலும் தற்போதுள்ள **கரூரே** மிகப்பழைமையான கருவூர் என்றும், சேரநாட்டின் தலைநகராக விளங்கிய கரூவூர் என்றும் அறிய முடிகின்றது.

### கருவூர்ப் புலவர்கள்

சங்க இலக்கியத்தில் பாடல்கள் பாடிய சில புலவர்கள் இவ்வூரினைச் சேர்ந்தவர்கள். (1) கருவூர் கிழார் - குறுந். 170, (2) கருவூர்க் கண்ணம்பாளனார் - அகம். 180, 263, நற். 148, (3) கருவூர்க்கதப்பிள்ளைச் சாத்தனார் - அகம் 309, நற். 343, புறம். 168 (4) கருவூர்க் கலிங்கத்தார் - அகம். 183 (5) கருவூர்க் கோசனார் - நற். 214 (6) கருவூர்ச்சேரமான் சாத்தான் - குறுந். 268 (7) கருவூர் நன்மார்பனார் - அகம். 277 (8) கருவூர்ப் பவுத்திரனார் - குறுந். 162 (9) கருவூர் பூதஞ்சாத்தனார் - அகம். 50 (10) கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூதநாதனார் - புறம். 219.

### காரியாறு

காரியாறு என்ற ஆற்றுப் பெயரால் வந்த ஊர்ப் பெயர் காரியாறு ஆகும். காரியாறு என்னும் ஊரில் துஞ்சிய நெடுங்கள்ளி என்ற சோழ மன்னன் காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி எனப் பெயர்பெற்றான்.

'சோழன் நலங்கிள்ளி யுழைநின்று உறையூர் புகுந்த இளந்தத்தன் என்ற புலவனைக் காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி ஒற்று வந்தானென்று கொல்லப் புக்குழி கோவூர்கிழார் பாடி உய்யக் கொண்டார் என்று தெரிகிறது.'[12] சேலம் மாவட்டத்திலுள்ள காரிமங்கலம் என்னும் ஊர் காரி என்ற வள்ளலின் பெயரோடும், கோவை மாவட்டத்திலுள்ள ஓரிசேரி என்னும் ஊர் ஓரி என்ற வள்ளலின் பெயரோடும் தொடர்புடையதாகக் கருதப்படுகிறது.

'எழிற்குன்றத்திற்கு அருகில் செருவத்தூர் என்று ஓர் ஊர் இருப்பதாகவும், காரி என்றும் ஓரி என்றும் பெயர் கொண்ட இருபகுதிகளாக அவ்வூர் அமைந்தது என்றும், காரி, ஓரி என்ற வள்ளல்களின் பெயரால் அமைந்தது போலும் என்று கருதப்படுகிறது.[13]

காரியாறு சேரநாட்டின் பகுதியிலிருந்த ஊராகும். தற்போது இவ்வூர் எவ்விடத்தில் உள்ளது என்பதை மிகச்சரியாக அறியமுடியவில்லை.

## குடநாடு

சேரநாட்டின் ஒரு பகுதியாகயிருந்தது குடநாடாகும். இது தமிழகத்தின் மேற்குப் பகுதியில் உள்ள நாடு. சேரமன்னன் குடநாடன் என்ற பெயரால் வழங்கப்பட்டான்.

*குடவர் கோமான் நெடுஞ்சேர லாதற்குச்* (பதிற்றுப். 5பதி:51)

*குடவர் கோவே! கொடித்தேர் அண்ணல்* (பதிற்றுப். 55:9)

*வரையா ஈகைக் குடவர் கோவே* (புறம். 17:40)

எருமை என்னும் குறுநில மன்னனது நாடு (தற்கால மைசூர்) குடநாடு எனக் குறிக்கப்பட்டுள்ளது.

*நுண்பூண் எருமை குடநாட் டன்னஎன்*
*ஆய்நலம் தொலையினும் தொலைக...* (அகம். 115:5-6)

இந்நாடு குடபுலம் எனவும் வழங்கும். இந்நாட்டின் மக்கள் அல்லது குடியினரே குடவர் எனப்பட்டனர். குடங்களிலும் பானைகளிலும் பாலும் தயிரும் கொண்டு செல்லும் இடையராகிய குடவர் வேறு, இங்குக் குறிக்கப்பட்ட குடவர் வேறு. சங்க இலக்கியத்தில் குறிக்கப்படும் குடநாடு தற்போதைய மைசூர் பகுதியைக் குறிப்பதாக இங்குக் கிடைத்துள்ள கல்வெட்டு (S.I.I. Vol.VIII No. 96) சான்று பகர்கின்றது.

## குன்னூர்

'குன்றை அடுத்துள்ள ஊர் குன்னூர் என்று தோற்றம் பெற்றிருக்கிறது'.[14] தமிழகத்தில் குன்னூர் என்ற பெயருடன் ஒன்றற்கு மேற்பட்ட ஊர்கள் இருக்கின்றன. சங்க இலக்கியத்தில் சுட்டப்பெறும் குன்னூர் தற்போது நீலகிரி மாவட்டத்திலுள்ளது.

*தொன்றுமுதிர் வேளிர், குன்னூர் அன்னஎன்* (நற். 280:8)

*தொன்றுமுதிர் வேளிர் குன்னூர் குணாது* (குறுந். 164:3)

நற்றிணையில் 382-ஆம் பாடல் பாடிய கண்ணனாரும், புறநானூற்றில் 338-ஆம்பாடல் பாடிய குன்றூர்க் கிழாரும் இவ்வூரினர் ஆவர்.

## கொங்கு நாடு

கொங்குநாடு மலைவளம் மிகுந்த நாடு குறிஞ்சியும் முல்லையும் செறிந்து விளங்கிய நாடு. ‘கொங்கு’ என்பது பொன், பூந்தாது, தேன், மலர், மணம், மரம், நாடு என்று பல பொருள் உடைய ஒரு சொல். இங்குப் பொன் மிகுதியாகக் கிடைத்ததால் கொங்கு (பொன்) நாடு என்று கூறப்பட்டுள்ளது. கொங்கின் வட எல்லைப் பகுதியில் இன்றைய கோலார் இருந்ததும் அறியத்தக்கது.

*இயல்எறி பொன்னின் கொங்கு சோர்புஉறைப்பத்* (அகம். 142:24)

சேரநாட்டின் மிக அதிகப் பரப்பளவுக்கொண்ட பகுதியாகக் கொங்குநாடு விளங்குகின்றது. இன்று கோயம்புத்தூர், ஈரோடு, சேலம், நீலகிரி, தருமபுரி, திருப்பூர், கரூர் போன்ற மாவட்டங்கள் கொங்கு நாட்டின் ஆட்சிப்பகுதிகளாகும். சூழல் மாறினாலும் இன்றும் சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்பெறும் இயற்கை எழிலுடன் கொங்கு நாடு விளங்குகின்றது.

## கொடுகூர்

பதிற்றுப்பத்தின் ஐந்தாம் பத்தின் பதிகம் மூலம் கொடுகூர் என்ற ஊரை அறிய முடிகின்றது.

*அக்கரை நண்ணிக் கொடுகூ ரெறிந்து* (பதிற்று. 5பதி:12)

அக்கரை நண்ணிக்கொடுகூரை எறிந்தான் கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் என்ற செய்தி கொடுகூர் அக்கரையில் இருந்தமையைப் புலப்படுத்துகிறது. ஒடுங்குதல் அல்லது பொருந்துதல் என்னும் பொருளையுடைய கொடுகு என்ற பகுதியைப் பெற்ற கொடுகூர் என்ற ஊர் தற்போது சேலம் மாவட்டத்தில் உள்ளது.

## கொடுமணம்

ஈரோடு மாவட்டம் சென்னிமலைக்கு அருகில் உள்ள கொடுமணல், சங்க இலக்கியம் குறிப்பிடும் கொடுமணமாகும்.

*கொடுமணம் பட்ட நெடுமொழி ஒக்கலொடு* (பதிற்று. 67:1)

*கொடுமணம் பட்ட வினைமாண் அருங்கலம்* (பதிற்று. 74:5)

‘தமிழ்ப் பல்கலைக்கழகக் கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறையினர் மேற்கொண்ட அகழாய்வில் பெருங்கற் காலத்தில் தமிழகத்திற்கும் மத்தியத் தரைக்கடல் பகுதிக்கும் இடையே நிலவிய வாணிபத் தொடர்பு கொளிக்கொணர முடிந்துள்ளது.’[15] அகழாய்வில் இங்குக் கண்டுபிடிக்கப்பட்ட கார்னீலியன் (carnelian), அகேட் (agate), ஜாஸ்பர் (jasper), பெரில் (beryl), பளிங்கு (allartz) போன்ற அரிய கற்களால் செய்யப்பட்ட ஏராளமான மணிவகைகள் (beads) கொண்ட கொடுமணம் அக்காலத்தில் ஒரு சிறப்புமிகு தொழிற்கூடமாக விளங்கியதை அறியமுடிகின்றது.

## கொல்லிமலை

சங்க இலக்கியத்திலும், மக்களின் வாய்மொழிப் பாடல்களிலும் இடம்பெற்றுள்ள கொங்குநாட்டின் கொல்லிமலை, நாமக்கல் மாவட்டத்தில் கிழக்குத் தொடர்ச்சி மலையின் நீட்சியாக அமைந்துள்ளது. தமிழக வரலாற்றுப் பின்னணியில் கொல்லிமலை முக்கியப்பங்கு வகிக்கிறது. கொங்கு நாட்டின் மிகப்பெரிய நிலப்பகுதிகள் அடங்கியிருப்பின் சங்கப் புலவர்களால் அதிகம் பாடப்பட்டுள்ள கொங்கு நாட்டுப்பகுதி கொல்லிமலை எனலாம்.

*மாரி வண்மகிழ் ஓரிக் கொல்லிக்* (நற். 265-7)
*பெரும்பூட் பொறையன் பேஎமுதிர் கொல்லிக்* (குறுந். 89-4)
*வல்வில் ஓரிக் கொல்லிக் குடவரை* (குறுந். 100-5)
*கொல்லிக் கூற்றத்து நீர்கூர் மீமிசைப்* (பதிற்று. 8பதி. 2)
*கொல்லிப் பொருந! கொடித்தேர்ப் பொறைய* (பதிற்று. 73-15)
*சுரும்புஆர் சோலைப் பெரும்பெயற் கொல்லி* (பதிற்று. 81-24)
*களிறு கெழுதானைப் பொறையன் கொல்லி* (அகம். 63-13)
*பல்பழம் பலவின் பயன்கெழு கொல்லிக்* (அகம். 208-22)
*செவ்வேர்ப் பலவின் பயம்கெழு கொல்லி* (அகம். 209-15)
*வெல்போர் வானவன் கொல்லிக் குடவரை* (அகம். 213-15)
*மாஇருங் கொல்லி உச்சித் தாஅய்* (அகம். 303-6)
*அகல்இருங் கானத்துக் கொல்லி போல* (அகம். 338-16)
*கொல்லி ஆண்ட வல்வில் ஓரி* (அகம். 158-5)

கடையெழு வள்ளல்களில் ஒருவனாகக் கொல்லிமலையை ஆண்ட ஓரி கருதப்படுகின்றான். வில் ஆற்றலில் சிறந்து விளங்கிய ஓரி பரிசிலர்க்குக் கொடை அளிப்பதிலும் முதன்மையானவனாகத் திகழ்ந்துள்ளான். மேலும் கொல்லி மலையின் கிழக்குப்பகுதியில் ஒரு பெரிய பள்ளத்தாக்கால் பிரிக்கப்பட்ட பச்சைமலை அமைந்துள்ளது. கொல்லிமலையில் 251 சிற்றூர்கள் அடங்கியுள்ளன. கொல்லி மலையைப் பதினான்கு நாடுகளாகப் பிரித்து வழங்குகின்றனர். வாழவந்தி நாடு, திண்ணனூர் நாடு, சேலூர் நாடு, தேவானூர் நாடு, வளப்பூர் நாடு, அரியூர் நாடு, குண்டுர் நாடு, ஆலத்தூர் நாடு, குண்டனி நாடு, திருப்புலி நாடு, பெரக்கரை நாடு, சித்தூர் நாடு, எடப்புலி நாடு மற்றும் பைல் நாடு என்பவைகளே அப்பதினான்காகும்.

## செல்லூர்

துளுநாட்டின் ஒரு பகுதியாகயிருந்தது செல்லூர். அகநானூற்றில், மருத இளநாகன் என்னும் புலவர் இவ்வூரைக்குறிப்பிட்டு, மழுவாள் நெடியோனாகிய பரசுராமன் இவ்வூரில் யாகம் செய்த கதையைக் கூறியுள்ளார்.

*கெடாஅத் தீயின் உருகெழு செல்லூர்க்*
*கடாஅ யானை குழூஉச்சமந் ததைய*
*மன்மருங் கறுத்த மழுவாள் நெடியோன்*
*முன்முயன்று அரிதினின் முடித்த வேள்விக்*
*கயிறரை யாத்த காண்டகு வனப்பின்*
*அருங்கடி நெடுந்தூண்* (அகம். 220:3-8)

இந்தச் செல்லூர் கடற்கரைக்கு அருகில் இருந்தது என்றும் அவ்வூருக்குக் கிழக்கில் கோசருடைய ஊர் நியமம் இருந்தது என்றும் இப்புலவரே இன்னொரு செய்யுளில் கூறுகிறார்.

*அருந்திறற் கடவுள் செல்லூர்க் குணாஅது*
*பெருங்கடல் முழக்கிற் றாகி யாணர்*
*இரும்பிடம் படுத்த வடுவுடை முகத்தர்*
*கருங்கட் கோசர் நியமம்* (அகம். 90:9-12)

என்று இவர் கூறுகிறார். எனவே, துளுநாட்டுச் செல்லூரில் பரசுராமன் செய்த வேள்விக்கு நினைவாக ஒரு தூண் அமைக்கப்பட்டிருந்ததென்றும், அச்செல்லூர் கடற்கரைக்கு அருகில் இருந்ததென்றும் தெரிகின்றது.

தற்போது தஞ்சாவூர் மாவட்டம், கும்பகோணம் வட்டத்தில் செல்லூர் என்ற ஊர் உள்ளது. ஆனால் சங்க இலக்கியத்தில் சுட்டப்பெறும் செல்லூர் துளுநாட்டிலுள்ளது என்று இங்குக் கிடைத்துள்ள கல்வெட்டு (S.I.I. Vol.VIII No. 398) குறிப்பிடுகின்றது.

**சென்னிமலை**

பண்டைப்புகழ் பெற்ற மலைகளுள் சென்னிமலையும் ஒன்று. இது சங்க இலக்கியத்தில் சென்னிக்கோடு என்று பெயர் பெற்றிருந்தது.

*ஆடுகழை நிவந்த பைங்கண் மூங்கில்*
*ஓடுமழை கிழிக்குஞ் சென்னிக்*
*கோடுயர் பிறங்கல் மணிகிழ வோனே!* (நற். 28:7-9)

சங்க இலக்கியத்தில் சுட்டப்பெறும் 'சென்னிக் கோடு' தற்போது சென்னிமலையென மருவி வழங்கப்படுகிறது. ஈரோடு மாவட்டத்தில் தற்போது அமைந்துள்ள சென்னிமலை, சென்னி விண்ணுயர் பிறங்கல் என்றும், பொன்னுலவுஞ் சென்னிகிரி என்றும், சதுமா மறை சூழ் சிரிகிரி என்றும் புகழப்படுகிறது.

**தகடூர்**

தருமபுரி மாவட்டம், தருமபுரி வட்டம் ஆகியவற்றின் தலைநகராக இவ்வூர் விளங்குகின்றது. இவ்வூரின் தொன்மைப்பெயர் தகடூர் என்பது. கி.பி. 16-ஆம் நூற்றாண்டுவரை இப்பெயரே வழங்கி வந்துள்ளது.

தருமபுரி என்னும் பெயர் இவ்வூரை ஆண்ட தர்மராஜா என்பவர் பெயரால் ஏற்பட்டதாகும். இன்றைய தருமபுரியிலிருந்து ஒரு கி.மீ. தொலைவில் உள்ள பழைய தருமபுரியில் தர்மராஜா கோயில் இருக்கின்றது. இதன் காரணமாக இவ்வூர் தருமபுரி என்று பெயர்பெற்றிருக்கிறது.

தொன்மைச் சிறப்புடையதாக விளங்கும் இவ்வூர், தமிழ் நாட்டை ஆண்ட அரச மரபினருள் ஒரு பிரிவினரான அதியர் ஆட்சி செய்த இடமாகும். இம்மரபில் வந்தவர்களுள் சிறந்து விளங்கியவன் அதியமான். இவனை அதிகமான் என்றும் அதியமான் நெடுமானஞ்சி என்றும் வழங்குவர். இவன் காலத்தில் தருமபுரி சிறந்த தலைநகராய் விளங்கியது. இந்நகரில் இவன் கட்டிய கோட்டை அதமன் கோட்டை என இன்றும் வழங்கப்படுகின்றது. தகடூர் மீது சேரன் படையெடுத்துச் சென்றதைத் தகடூர் யாத்திரை என்னும் நூல் குறிப்பிடுகின்றது.

தருமபுரியில் 9-ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகள் கிடைக்கின்றன. நுளம்பப் பல்லவர்களும் இப்பகுதியை ஆண்டுள்ளனர் என்பதை இங்குக் கிடைத்தக் கல்வெட்டு (S.I.I. Vol.VIII No. 126) குறிப்பிடுகின்றது. மேலும் மூன்றாம் குலோத்துங்கன் காலக் கல்வெட்டுகளும் விஜயநகர ஆட்சிக்காலக் கல்வெட்டுகளும் இங்குக் கிடைத்துள்ளன. இவர்களுடைய ஆட்சிக்குப் பிறகு தருமபுரி, ஐதர் அலி, திப்புசுல்தான் ஆட்சியின் கீழ் இருந்திருக்கின்றது. இறுதியாக ஆங்கிலேயர் ஆட்சியும் நிலவியது. ஆங்கிலேயேரின் ஆட்சியில் ஏழு ஆண்டுகள் தருமபுரி இராணுவத் தலைமையகமாக இருந்தது.

*பல்பயன் நிலைஇய கடனுடைய வைப்பின்*
*வெல்போர் ஆடவர் மறம்புரிந்து காக்கும்*
*வில்பயில் இறும்பின் தகடூர் நூறி* (பதிற்று. 78:7-9)

என்றும்,

*தகடூர் எறிந்து நொச்சிதந்து எய்திய*
*அருந்திறல் ஒள்இசைப் பெருஞ்சேரல் இரும்பொறை* (பதிற்று. 8பதி:9-10)

என்றும் பதிற்றுப்பத்து இந்நகரைக் குறிப்பிடுகின்றது.

## துளுநாடு

சேரநாட்டின் ஒரு பகுதியாக இருந்தது துளுநாடு ஆகும். ‘சங்க காலத்தில் துளுநாடு என்றும் கொங்கணநாடு என்றும் பெயர் பெற்றிருந்த நாடு இக்காலத்தில் தென் கன்னட மாவட்டம் என்று பெயர் பெற்றிருக்கிறது. வடகன்னடம், தென்கன்னடம்

என்று பெயர் பெற்ற இரண்டு மாவட்டங்கள் இந்திய நாட்டின் மேற்குக் கரையோரமாக இப்போது இருக்கின்றன.[16] இவற்றின் வடகன்னட மாவட்டம், முன்பு பம்பாய் மாகாணம் என்று பெயர் பெற்றிருந்து இப்போது மகாராட்டிரத் தேசம் என்று பெயர் வழங்குகிற மாநிலத்தில் இருக்கிறது. தென்கன்னட மாவட்டமானது பழைய சென்னை மாகாணத்தோடு இணைந்திருந்து, பாரத நாடு சுதந்திரம் பெற்ற பிறகு மைசூர் இராச்சியத்தோடு இணைக்கப்பட்டிருக்கிறது. இந்தத் தென்கன்னட மாவட்டந்தான் பழைய துளுநாடு. துளுநாட்டுக்குக் கொங்கணநாடு என்றும் கொண்கான நாடு என்றும் கொண்பெருங்காணம் என்றும் சங்க காலத்தில் பெயர் இருந்தது.

துளுநாடாகிய கொங்கணநாடு தென்கன்னட மாவட்டம் என்று பெயர்பெற்றது மிகச்சமீபகாலத்தில்தான். ஆங்கிலேயக் கிழக்கிந்திய கம்பெனியார் தென் இந்தியாவில் வந்து வாணிகஞ்செய்து கொண்டே நாடு பிடித்த காலத்தில், துளு நாடாகிய கொங்கண நாடு கி.பி. 1799-ஆம் ஆண்டில் அவர்கள் ஆட்சிக்கு வந்து, பிறகு அவர்கள் இந்த நாட்டுக்குத் தென் கன்னட மாவட்டம் என்று தவறான பெயர் கொடுத்துச் சென்னை மாகாணத்தின் ஒரு பிரிவாக இணைத்து விட்டனர். எனவே, இதற்குத் தென் கன்னடம் என்னும் பெயர் மிகச் சமீப காலத்தில் தவறாக ஏற்பட்டதாகும். ஆனால் பழைய பெயர் துளுநாடு அல்லது கொங்கணநாடு என்பதாகும்.

கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் பாரதநாட்டை அரசாண்ட அசோக சக்கரவர்த்தி தம்முடைய சாசனத்தில் கூறுகிற ‘சத்திய புத்திரநாடு’ என்பது துளுநாடே. ‘கடைச்சங்க காலத்தின் இறுதியில் (கி.பி. 2-ஆம் நூற்றாண்டு) இருந்த தாலமி (ptolemy) என்னும் யவனர், துளு நாட்டில் டமிரிகெ (Damirike) தொடங்கியது என்று கூறுகிறார்.’[17] டமிரிகெ என்று குறிப்பிடப்படுவது திராவிடகம் என்னும் தமிழகம் ஆகும். எனவே துளுநாடு அக்காலத்தில் தமிழ்நாடாக இருந்தது என்பது தெளிவாகிறது. சங்கப் பாடல்களும் துளுநாட்டுக்கு அப்பால் மொழிபெயர் தேசம் (வேறு மொழி பேசப்பட்ட தேசம்) இருந்ததாகக் கூறுகின்றன.

துளு என்றால் போரிடுதல், எதிர்த்தல் என்பது பொருள். பழங்கன்னட மொழியில் துளு என்னுஞ் சொல்லுக்கு இந்தப்பொருள் உண்டு. எனவே துளுநாடு

என்றால் வீரர்கள் உள்ள நாடு என்று பொருள் கொள்ளலாம். துளுநாட்டு வீரர்களைப் பற்றியும் சங்க நூல்கள் கூறுகின்றன. கொங்கண நாடாகிய துளுநாட்டைப் பிற்காலத்துச் சோழர் சாசனங்கள் 'குடமலை நாடு' என்று கூறுகின்றன.

துளு நாட்டுக்குக் கிழக்கில் உள்ளது குடகு என்னும் சிறுநாடு. இந்தக் குடகு நாட்டில் தலைக்காவேரி என்னும் இடத்தில் காவேரி ஆறு உண்டாகிறது.

*குடமலைப் பிறந்த தண்பெருங் காவேரி* (மலைபடுகடாம், 527)

என்று மலைபடுகடாம் கூறுகிறது. இந்தக்காவேரி ஆறு கடைசியில் சோழநாட்டில் புகுந்து பாய்கிறது.

## துளு நாட்டு எல்லை

இப்போதுள்ள தென்கன்னட மாவட்டமே பழைய துளுநாடாகும். ஆனால், சங்க காலத்தில் (கி.பி. 200-க்கு முன்பு) துளு நாட்டின் தென் எல்லை சற்றுத் தெற்கே இருந்தது. எழில் மலைக்குத் தெற்கே அதன் பழைய தெற்கெல்லை இருந்தது.

துளு நாட்டின் மேற்கில் அரபிக்கடல் எல்லையாக இருக்கிறது. மேற்குத்தொடர்ச்சி மலைகள் (ச∴யாத்திரி மலைகள்) இதன் கிழக்கு எல்லையாக அமைந்திருக்கின்றன. கிழக்கு எல்லையாக அமைந்துள்ள மேற்குத் தொடர்ச்சி மலைகள் சில இடங்களில் கடல் மட்டத்துக்கு 300 அடி உயரமாகவும் வேறு சில இடங்களில் 6000 அடி உயரமாகவும் இருக்கின்றன. ஆகவே, துளு நாட்டின் கடற்கரையோரங்கள் சமநிலமாகவும் கிழக்குப்பகுதிகள் உயரமான மலைப்பிரதேசங்களாகவும் இருக்கின்றன. துளுநாடு ஏறத்தாழ வடக்குத் தெற்காக 150 மைல் நீளம் உள்ளது.

*தோகைக் காவின் துளுநாட்டு அன்ன* (அகம். 15-5)

என்று மாமூலனார் என்னும் புலவர் தூளு நாட்டின் பெயரைக் கூறுகிறார். துளுநாட்டுக் காடுகளில் தோகைகள் (மயில்கள்) இருந்தன என்று கூறுகிறார்.

## துவரை

*உவரா ஈகை, துவரை ஆண்டு* (புறம். 201:10)

இப்போதைய தெற்கு மைசூரில் இருக்கும் ஊர் துவரை. தற்போது ஹளெபீடு என்று பெயர்பெற்று இருக்கிறது. (ஹளெ-பழைய, பீடு-வீடு. அதாவது, பழைய படைவீடு என்பது பொருள். படைவீடு - பாடிவீடு, பாசறை). இப்பொழுதும் துவரையில் துவார சமுத்திரம் என்னும் பெரிய ஏரி இருக்கிறது. இங்கு அரையம் என்னும் ஊரில் இருங்கோவேள் அரசு பரம்பரையார் இருந்து அரசாண்டார்கள். அந்த அரையம் என்னும் நகரம் சிற்றரையம், போரையம் என்று இரண்டு பிரிவாக இருந்தது.

இருங்கோவேள் அரசர் புலிகடிமால் என்று பெயர் பெற்றிருந்தார். இந்தப் புலிகடிமால் அரசராகிய இருங்கோவேள் அரசரின் சந்ததியார் பிற்காலத்தில் ஹொய்சனர் என்று புதுப்பெயர் பெற்றுச் சிறப்பாக அரசாண்டார்கள். பாரி வள்ளலின் பறம்பு நாட்டை மூவேந்தர் வெற்றி கொண்ட பிறகு, பாரியின் மகளிராகிய அங்கவை, சங்கவை என்பவரைக் கபிலர் இருங்கோவேள் அரசனிடம் அழைத்து வந்து மணஞ்செய்து கொள்ளும்படி கேட்டார். இருங்கோவேள் மறுத்துவிட்டான் என்பதைப் புறநானூற்றின் 201, 202 பாடல்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன.

தலையாலங்கானத்தில் சேரனும் சோழனும் பாண்டியன் நெடுஞ்செழியனுடன் போர் செய்தபோது சேர, சோழர்களுக்கு உதவியாக இருந்த ஐந்துவேள் அரசர்களில் இருங்கோவேளும் ஒருவன்.

*தேம்கமழ் அகலத்துப் புலர்ந்த சாந்தின்*
*இளங்கோ வேண்மான், இயல்தேர்ப் பொருநன்என்று* (அகம். 36:18-19)

## தொண்டி

‘சங்க காலத்தில் தமிழகத்தில் இரண்டு தொண்டித்துறைமுகப்பட்டினங்கள் இருந்தன. ஒன்று கிழக்குக்கடற்கரையில் பாண்டியருக்கு உரியதாய் இருந்தது. மற்றொன்று மேற்குக் கடற்கரையில் பூழி நாட்டில் சேரருக்கும் பொறையருக்கும் உரியதாய் இருந்தது.’[18] கொங்கு நாட்டையரசாண்ட பொறையர்களுக்குத் துறைமுகப்பட்டினம் இல்லாதபடியால், அவர்கள் தொண்டியைத் தங்களுடைய துறைமுகப்பட்டினமாகக் கொண்டிருந்தார்கள்.

'சேரநாட்டின் தொண்டியைக் கி.பி. முதல், இரண்டாம் நூற்றாண்டுகளில் மேலைநாட்டு நூலாசிரியர்கள் 'டுண்டிஸ்' என்று அழைத்தனர்.'[19] ஐங்குறுநூற்றில் அம்மூவனார் 'தொண்டிப்பத்து' என்னும் தலைப்பில் சேரர்களின் தொண்டித்துறை முகத்தைப் பற்றிப் பாடியுள்ளார். இத்தொண்டி முற்காலத்தில் பலநாட்டு மரக்கலங்கள் வந்து தங்கும் பெருந்துறைமுகமாக விளங்கியுள்ளது என்பதை அறிய முடிகின்றது.

*தொண்டி அன்னை பணைத்தோள்* (ஐங். 171-3)

*வண்டுஇமிர் பனித்துரைத் தொண்டி ஆங்கண்* (ஐங். 172-2)

*அரவுஉறு துயரம் எய்துப தொண்டித்* (ஐங். 173-2)

*அணங்குடைப் பனித்துறைத் தொண்டி அன்ன* (ஐங். 174-1)

*தொண்டி அன்னநின் பண்புபல கொண்டே* (ஐங். 175-4)

*பண்பும் பாயலுங் கொண்டனள் தொண்டித்* (ஐங். 176-1)

*தொண்டி அன்னோள் தோள்உற் றோரே* (ஐங். 177-4)

*குட்டுவன் தொண்டி அன்ன* (ஐங். 178-3)

*இன்ஒலித் தொண்டி அற்றே* (ஐங். 179-3)

*துறைகெழு தொண்டி அன்னஇவன் நலனே* (ஐங். 180-4)

ஐங்குறு நூற்றினைப் போன்று, நற்றிணை, குறுந்தொகை, பதிற்றுப்பத்து, அகநானூறு, புறநானூறு போன்ற நூல்களில் தொண்டி நகரம் பதிவு செய்யப்பெற்றுள்ளது.

*திண்தேர்ப் பொறையின் தொண்டி* (நற். 8-9)

*கானலந்தொண்டிப் பொருநன் வென்வேல்* (நற். 18-5)

*கல்லென் புள்ளின் கானல்அம் தொண்டி* (நற். 195-5)

தொண்டிப் பட்டிணத்தைச் சூழ்ந்து கோட்டை மதில் இருந்துள்ளது. கோட்டை வாயிலின் கதவில் மூவன் என்பவனுடைய பல்லைப்பிடுங்கிப் பதித்திருந்ததை என்பதனை மேற்கூறிய நற்றிணைச் செய்யுள் கூறுகின்றது.

*திண்தேர்ப் பொறையன் தொண்டி முன்துறை* (குறுந். 128-2)

*பல் ஆ பயந்த நெய்யின், தொண்டி* (குறுந். 210-2)

*தொண்டி அன்ன என்நலம் தந்து* (குறுந். 238-4)

இவ்வாறு குறுந்தொகையில் தொண்டி நகரம் குறிப்பிடப்பட்டுள்ளது.

*தொண்டியுள் தந்து கொடுப்பித்துப் பார்ப்பார்க்குக்* (பதிற்று. 6பதி. 4.)

*திண்தேர்ப் பொறையன் தொண்டி அன்னெம்* (அகம். 60-7)

*தெண்திரைப் பரப்பின் தொண்டி முன்துறைச்* (அகம். 290-13)

*கள்நா றும்மே, கானல்அம் தொண்டி* (புறம். 48-4)

மேற்குறிப்பிட்டுள்ள சங்க இலக்கியப் பாடல்களில் தொண்டி நகரின் செழுமை, இயற்கையமைப்பு, தொண்டி நகரின் செயல்பாடுகள், சேரனின்திறம் போன்ற தொன்மையான செய்திகளை அறிய முடிகின்றது.

தொண்டித் துறைமுகத்தில் யவனர்கள் வணிகம் செய்துள்ளனர். பெரிபுளுசு, தாலமி போன்றோர் தொண்டியை, திண்டிஸ் (Tyndis) என்று கூறியுள்ளனர். சேரரின் முக்கியத்துறைமுகமான இத்தொண்டி, தற்போது ஆலப்புழை (கேரளா) அடுத்துள்ள 'தொண்டிப்பாயில்' என்று மருவி வழங்கப்படுவதை இங்குக் கிடைத்துள்ள கல்வெட்டு (S.I.I. Vol.V No. 680) மூலம் அறியப்படுகின்றது.

## பாண்டிய நாட்டில் தொண்டி

பாண்டிய நாட்டில் கிழக்குக்கடற்கரையில் மற்றொரு தொண்டி இருந்தது. இது பாண்டியன் தொண்டி என வழங்கப்பட்டது. இராமநாதபுரம் மாவட்டம் திருவாடானை வட்டத்தில் அமைந்துள்ள இத்தொண்டி பாண்டியர்களின் முக்கியத்துறைமுகமாக விளங்கியுள்ளது. சங்க இலக்கியத்தில் பாண்டியரின் தொண்டியைப்பற்றிக் குறிப்புகள் இல்லை. ஆனால் இத்தொண்டியைச் சிலப்பதிகாரம் சிறப்பித்துள்ளது. கீழ்க்கடல் தீவுகளிலிருந்து அகில், சந்தனம், பட்டு முதலியனவும் சாதிக்காய், இலவங்கம், குங்குமப்பூ, கற்பூரம் முதலிய வாசனைப் பொருட்களும் தொண்டித் துறைமுகத்திற்கு இறக்குமதி செய்யப்பட்டுப் பின்பு அங்கிருந்து மதுரைக்கு அனுப்பப்பட்டதைச் சிலப்பதிகாரம் ஊர்காண் காதையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

*ஓங்கிரும் பரப்பின்*

*வங்க கோட்டத்துத் தொண்டியோர் இட்ட*

*அகிலும் துகிலும் ஆரமும் வாசமும்*

*தொடுகருப் பூரமும் சுமந்துடன் வந்த*

*கொண்டலொடு புகுந்து கோமகன்*

*வெங்கண் நெடுவேள் வில்விழாக் காணும்*

*பங்குனி முயக்கத்துப் பனியரசு* (சிலம்பு. ஊர்காண்காதை, 19-25)

இப்பாண்டித் தொண்டி பிற்காலத்தில் சிறப்புக் குன்றியும் இன்று குக்கிராமமாக இருக்கிறது.

**நறவு**

துளுநாட்டில் கடற்கரையிலிருந்த துறைமுகப் பட்டினம் நறவு ஆகும். கள்ளுக்கு (மதுவுக்கு) நறவு என்றும் ஒரு பெயர் உண்டு. அகவே, நறவு என்னும் பெயருடைய இந்த ஊரைத் 'துவ்வா நறவு' (உண்ணப்படாத நறவு) என்று சங்க இலக்கியம் பதிவுசெய்கின்றது.

*பொங்குபிசிரிப் புணரி மங்குலொடு மயங்கி*

*வரும்கடல் ஊதையின் பனிக்கும்*

*துவ்வா நறவின் சாய் இனத்தானே* (பதிற்று. 60:10-12)

துளுநாட்டைச் சேர அரசர் வென்ற பிறகு இத்துறைமுகப்பட்டினத்தில் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் (இவன் செங்குட்டுவன் நார்முடிச் சேரலுக்கும் தம்பி) தங்கியிருந்தான். கிரேக்க ரோம வணிகர்கள் நறவை 'நவ்றா' என்று கூறியிருக்கின்றனர். துளு மொழியில் இது நாறாவி என்று கூறப்பட்டது. இருங்கு யவனக் கப்பல்கள் வந்து வாணிகம் செய்ததாகக் கூறப்படுகின்றது.

சேர நாட்டின் தொண்டித்துறைமுகந்தான் நறவு என்றும், துளு நாட்டிலுள்ள மங்களூர்தான் நறவு என்றும் இருவேறு கருத்துகள் நிலவுகின்றன. ஆனால் நறவு துளுநாட்டிலிருந்த கட்றகரைப் பட்டினம் என்பது தெளிவு.

**நளிமலை**

சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்பெற்றுள்ள நளிமலை தற்போது 'நாகமலை' என மருவி வழங்கப்படுகின்றது. நாகமலை ஈரோடு மாவட்டத்தில் அமைந்துள்ளது.

*பளிங்குவகுத் தன்ன தீம்நீர்*

*நளிமலை நாடன் நள்ளி அவன் எனவே* (புறம். 150:27-28)

*முட்டாது கொடுத்த முனைவிளங்கு தடக்கைத்*

*துளிமழை பொழியும் வளிதுஞ்சு நெடுங்கோட்டு*

*நளிமலை நாடன் நள்ளியும்* (சிறு. 105-107)

**பாமுளூர்**

சேரமான் பாமுளூர் எறிந்த நெய்தலங்கானலிளஞ் சேட் சென்னியை ஊன் பொதி பசுங்குடையார் பாடியது (புறம். 203) என்ற தொடர் பாமுளூர் என்ற ஓர் ஊர்ப்பெயரை அளிக்கிறது. நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னி இதை எறிந்தான் எனப் புறநானூறு தெரிவிக்கின்றது.

சேரமானுடன் தொடர்புடைய இவ்வூர் தற்போது ஈரோடு மாவட்டத்தில் உள்ளது.

**பாரம்**

துளுநாட்டிலிருந்த ஊர் பாரம். கொண் கானத்து நன்னனுக்கு உரியதாய் இருந்திருக்கின்றது. இவனின் தலை நகராகவும் பாரம் இருந்துள்ளது. கொண்கானம், எழிற்குன்றம், பூழிநாடு ஆகியவற்றை உள்ளடக்கியதாய் இருந்திருக்கிறது நன்னனின் நாடு. இன்று துளுநாடான மைசூருக்கு அருகில் பாரம் சிறிய கிராமமாக உள்ளது.

நன்னனுடைய சேனைத்தலைவன் மிஞிலி என்பவனால் காக்கப்பட்ட ஊர் என்று சங்க இலக்கியம் கூறுகிறது.

*வீளை அம்பின் வில்லோர் பெருமகன்*

*பூந்தோள் யாப்பின் மிஞிலி காக்கும்*

*பாரத்து அன்ன ஆர மார்பின்*

*சிறுகோற் சென்னி ஆரேற் றன்ன* (நற். 265:3-6)

*உறுபகை தரூஉம் மொய்ம்மூசு பிண்டன்*

*முனைமுரண் உடையக் கடந்த வென்வேள்*

*இசைநல் ஈகைக்களிறு வீசு வண்மகிழ்*

*பாரத்துத் தலைவன் ஆரநன்னன்* (அகம். 152:9-12)

## பாழி

நன்னனின் எழில் மலையைச் சார்ந்த கொற்றிக்கடவு என்ற அடர்ந்த காட்டின் இடையே அம்மரக்கல் (Ammarakal) என்ற ஒரு பெரும் பாறை உள்ளது. அங்குள்ள மக்களால் அப்பாறைப் பன்னிரண்டாண்டிற்கு ஒருமுறை வழிபடப் பெறுகிறது. இப்பாறையைச் சுற்றியுள்ள பகுதி பாழி எனப்படுகிறது.

பாழிநகரம் எழிற்குன்றத்தைச்சார்ந்ததாகவே இருந்திருக்கிறது. பாழி நாட்டு மக்கள் சிறுகுளத்தைப் பாழி என்பர். இவ்வூரிலுள்ள குளம் மன்னனின் பொன் சேமித்து வைக்கப்பெற்றிருந்த சிறப்பினையுடையதாய் இருந்திருக்கிறது. அச்சிறப்பாலேயே நீர் நிலையின் பெயரால் இவ்வூர் 'பாழி' எனப் பெற்றிருக்கிறது.

வேளிர்களால் அளிக்கப்பெற்ற பொற்காசுகளை இவ்வூர் பாழியில் (குளத்தில்) இட்டு வைத்து, காவற்படையை நிலையாக நிறுத்திக் காத்தவன் நன்னன். பாழி நகரமே நிலையான காவற்படையை உடையதாக இருந்திருக்கிறது.

*நன்னன் உதியன் அருங்கடிப் பாழி*

*தொல்முதிர் வேளிர் ஓம்பினர் வைத்த*

*பொன்னினும் அருமை நற்கு அறிந்தும், அன்னோள்*

*துன்னலம் மாதோ எனினும் அஃதுஒல்லால்* (அகம். 258:1-4)

பாழி காவல் மிக்கிருந்து என்னும் கூற்று நன்னன் மிகுதியாகப்பொன் படைத்திருந்தான் என்பதை உணர்த்துவதாகக் கொள்ள முடிகின்றது.

பாழி நகரைச் சூழ்ந்து இருந்த இடம் 'பாழிப் பறந்தலை' என்று பெயர்பெற்றிருந்தது.

*வெளியன் வேண்மான் ஆஅய் எயினன்,*

*அளி இயல் வாழ்க்கைப் பாழிப் பறந்தலை*

*இழை அணி யானை இயல்தேர் மிஞிலியொடு*

*நண்பகல் உற்ற செருவில் புண் கூர்ந்து*

*ஒன் வாள் மயங்கு அமர் வீழ்ந்தென* (அகம். 208:5-9)

பாழி நகரினைச் சுற்றிப் பல்வேறு நாடுகள் தெரிவதாக இருந்தன. மேலும் பாழி நகரக்கோட்டையில் நன்னன் அரசப்பரம்பரையினர் பெருநிதியைச் சேர்த்து வைத்திருந்தனர். இதனை,

*அருந்தெறல் மரபின் கடவுள் காப்பப்,*

*பெருந்தேர் தூங்கும் நாடுகாண் நனந்தலை*

*அணங்குடை வரப்பின் பாழி ஆங்கண்*

*வேள்முது மாக்கள் வியல்நகர்க் கரந்த* (அகம். 372:1-5)

அருங்கல் வெறுக்கையின் அரியோள் பண்பு நினைந்து,

*நன்னன் உதியன் அருங்கடிப் பாழித்*

*தொன்முதிர் வேளிர் ஓம்பினர் வைத்த பொன்* (அகம். 258:1-2)

என்பனவற்றால் அறிய முடிகின்றது. பாழி நகரத்தினை அகநானூறு பத்துப்பாடல்களில் குறிப்படுகின்றது.

**புன்னாடு**

புன்னாடு, சங்க காலத்தில் வடகொங்கு நாட்டில் இருந்தது. இக்காலத்தில் இது மைசூர் பகுதியின் தெற்கே ஹெக்கட தேவன வட்டத்தில் உள்ளது. சங்க இலக்கியத்தில் புன்னாடும் அதன் தலைநகரமான கட்டூரும் கூறப்படுகின்றன. காவிரி ஆற்றின் உபநதியாகிய கபினி ஆற்றைச் சூழ்ந்து புன்னாடு இருந்தது. கபினி ஆறு கப்பினி என்றும் கூறப்பட்டது. மேற்குத்தொடர்ச்சி மலையில் உண்டாகிக் கிழக்குப் பக்கமாகப் பாய்ந்து (மைசூரில் நரசபூருக்கு அருகில்) காவிரியுடன் சேர்கிறது. பிற்காலத்தில் இது புன்னாடு ஆறாயிரம் என்று பெயர் பெற்றிருந்தது. சங்க காலத்தில் புன்னாடு சிற்றரசர்களால் ஆளப்பட்டு, அதன்பின் சேரர்களின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. புன்னாட்டின் தலைநகரமான கட்டூர் கபினி ஆற்றங்கரைமேல் அமைந்திருந்தது. பிற்காலத்தில் கட்டூர், கிட்டூர் என்ற வழங்கப்பட்டது. இன்று கித்திபுரம் என்றும் கீர்த்திபுரம் என்றும் வழங்கப்பட்டது.

'புன்னாட்டில் சங்க காலத்தில் ஒருவகையான நீலக்கல் கிடைத்தது. அந்தக் கற்கள் புன்னாட்டுச் சுரங்கத்திலிருந்து அகழ்ந்தெடுக்கப்பட்டன. நவரத்தினங்களில் ஒன்றான இந்தக்கல் அந்தக்காலத்தில் உலகத்திலேயே புன்னாட்டில் மட்டுந்தான் கிடைத்தது'[20] சங்க காலத்தில் புகழ்ப்பெற்றிருந்த உரோமாபுரி சாம்ராச்சியத்து மக்கள் இந்தக் கற்களை அதிகமாக விரும்பினார்கள்.

தமிழ்நாட்டுக்கு வந்த யவன வாணிகர் இந்த நீலக்கற்களையும் பாண்டி நாட்டு முத்துக்களையும் சேரநாட்டு மிளகையும் வாங்கிக்கொண்டு போனார்கள். 'புன்னாட்டு நீலக்கற்களைப் பற்றிச் சங்க இலக்கியங்களில் ஒரு குறிப்பும் காணப்படவில்லை. ஆனால் தாலமி (ptolemy) எழுதியுள்ள பூகோள நூலில் இதைப்பற்றிக் கூறியுள்ளார். ஸிடொஸ்தொமஸ் (psedostomse) என்னும் இடத்துக்கும் பரிஸ் (Beris) என்னும் இடத்துக்கும் இடையே நீலக்கல் (Bery) கிடைக்கிற பொவுன்னட (pounnata) என்னும் ஊர் இருக்கிறது என்று அவர் எழுதியுள்ளார். பொவுன்னட என்பது புன்னாடு என்பதன் கிரேக்க மொழித் திரிபு ஆகும்.[21] நீலக்கல் வாணிகத்தினால் புன்னாட்டுக்குப் பெரும் வருவாய் கிடைத்தது.

சங்க காலத்தில் துளு நாட்டை அரசாண்ட நன்னன் என்னும் அரசன் புன்னாட்டைக் கைப்பற்றிக் கொள்ள எண்ணி அதன் மேல் போர் செய்ய எண்ணினான். புன்னாட்டின் நீலக்கல் வாணிகம் நன்னனைக் கவர்ந்த காரணத்தால் அந்த வாணிகத்தின் ஊதியத்தைத் தான் பெறுவதற்கு அவன் எண்ணினான். இச்செய்தி தெரிந்தவுடன், நன்னனுடைய பகையரசனான சேரநாட்டுக் களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் என்பவன் தன்னுடைய சேனைத் தலைவனாகிய வெளியன் வேண்மான் ஆய் எயினான் என்பவனைத் துளுநாட்டு நன்னனுக்கு எதிராகப் புன்னாட்டு அரசனுக்கு உதவியாகச் சென்று, அவனை அஞ்ச வேண்டாம் என்று உறுதிமொழி கொடுத்ததோடு நன்னனுடைய துளுநாட்டின் மேல் படை எடுத்துச் சென்றான்.

நன்னனுடைய சேனாதிபதியான மிஞிலி என்பவன் பாழிப் பறந்தலை என்னும் இடத்தில் ஆய் எயினனுடன் போர் செய்தான். அந்தப்போரில் ஆய் எயினன் இறந்துபோனான். இதனை,

*பொலம்பூண் நன்னன் புன்னாடு கடிந்தென*

*யாழ்இசை மறுகின் பாழி ஆங்கண்.*

*அஞ்சல் என்ற ஆஅய் எயினன்*

*இகல்அடு கற்பின் மிஞிலியொடு தாக்கித்,*

*தன்உயிர் கொடுத்தனன், சொல்லியது அமையாது* (அகம். 396:2-6)

என்றும்,

*வெளியன் வேண் ஆஅய் எயினன்*

*அளிஇயல் வாழ்க்கைப் பாழிப் பறந்தலை*

*இழைஅணி யானை இயல்தேர் மிஞிலியொடு*

*நண்பகல் உற்ற செருவில் புண்கூர்ந்து,*

*ஒள்வாள் மயங்குஅமர் வீழ்ந்தென புள்ஒருங்கு* (அகம். 208:5-9)

என்றும் அகநானூறு பதிவுசெய்கின்றது. மேலும் சேர அரசனான களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலுக்கும் நன்னனுக்கும் நடந்த போரில் நன்னன் தோற்றான்; துளுநாடு, சேரன் ஆட்சிக்குக் கீழடங்கியது.

புன்னாட்டு அரசனும் கொங்குநாட்டுச் சேரருக்குக் கீழடங்கினான். புன்னாட்டின் தலைநகரமான கட்டுரின் மேல், பெரும்பூண் சென்னி என்னும் சோழ அரசனுடைய சேனாதிபதி படையெடுத்துச் சென்றான். அந்தச் சேனாதிபதியின் பெயர் பழையன். பழையன் என்பது சோழநாட்டுக் காவிரிக்கரையில் இருந்த போர் என்னும் ஊரில் பழையன் பரம்பரையார் சோழரின் படைத்தலைவராகப் பரம்பரை பரம்பரையாக இருந்தனர். இதனை,

*இழைஅணி யானைச் சோழர் மறவன்*

*கழைஅளந்து அறியாக் காவிரிப் படப்பைப்*

*புனல்மலி புதவின் போஒர் கிழவோன்*

*பழையன் ஓக்கிய வேல்போல்*

*பிழையல கண், அவர் நோக்கியோர் திறத்தே* (அகம். 326:9-13)

என்று அகநானூறு பதிவுசெய்கின்றது. பழையன் கட்டூரின் மேல் படையெடுத்து வந்தபோது, கொங்குச் சேரனுக்குக் கீழடங்கியிருந்த நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்றுறை என்னும் சிற்றரசர்கள் பழையனுடன் போர் செய்து அவனைப் போர்க்களத்தில் கொன்றுவிட்டனர். இவ்வாறு சோழனுடைய கட்டூர்ப் படையெடுப்புத் தோல்வியாக முடிந்தது. இதனை,

*நன்னன் ஏற்றை நறும்பூண் அத்தி*
*துன்அருங் கடுந்திறல் கங்கண் கட்டி*
*பொன்அணி வல்வில் புன்றுறை என்றுஆங்கு*
*அன்றுஅவர் குழீஇய அளப்புஅருங் கட்டூர்*
*பருந்துபடப் பண்ணி பழையன் பட்டெனக்* (அகம். 44:7-11)

என்ற அகநானூற்றின் பாடல் மூலம் அறிய முடிகின்றது. இதற்குப் பிறகு புன்னாட்டின் வரலாறு தெரியவில்லை.

'கி.பி.5-ஆம் நூற்றாண்டு வரையில் புன்னாட்டு அரசர் பரம்பரை புன்னாட்டைஅரசாண்டு வந்தனர். ஸ்கந்தவர்மன் என்னும் புன்னாட்டு அரசனுக்கு ஆண்மகன் இல்லாதபடியால் அவனுடைய ஒரே மகளைக் கங்க அரசனான அவனிதனுடைய மகனான துர்வினிதன் மணம் செய்து கொண்டான். துர்வினிதன் கி.பி. 482 முதல் 517 வரையில் கங்கநாட்டை அரசாண்டான். புன்னாட்டு அரசனுடைய மகளை மணம் செய்துகொண்ட இவன் புன்னாட்டைத் தன்னுடைய கங்க இராச்சயித்தோடு இணைத்துக்கொண்டான்'[22] என்றவாறு புன்னாட்டின் வரலாறு பதிவு செய்யப்பட்டிருக்கின்றது.

## பூழிநாடு

சேரநாட்டின் ஒரு பகுதியாகப் பூழிநாடு இருந்தது. இங்குத் தொண்டி, மாந்தை என்னும் துறைமுகப்பட்டினங்கள் இருந்தன. பூழிநாடு, சேரநாட்டுக்கும் துளு (கொங்காணம்) நாட்டுக்கும் இடையில் கடற்கரையோரமாக இருந்தது. பூழி என்றால் புழுதிமண் என்பது பொருள். பெரும்பாலும் புழுதிமண்ணாக இருந்தபடியால் இந்த நாட்டுக்குப் பூழிநாடு என்று பெயர் கூறப்பட்டுள்ளது. பூழிநாடு கடற்கரையோரமாக அமைந்திருந்ததை அம்மூவனாரின் குறுந்தொகைச் செய்யுளினால் அறிகின்றோம்.

*யார்அணங் குற்றனை கடலே! பூழியர்*

*சிறுதலை வெள்ளத் தோடு பரந்தன்ன*

*மீன்ஆர் குறுகின் கானல்அம் பெருந்துறை*

*வெள்வீத் தாழை திரைஅலை*

*நள்ளென் கங்கும் கேட்டும், நின்குரலே* (குறுந். 163:1-5)

பூழிநாட்டின் கிழக்குப் பக்கத்தில் இருந்த மேற்குத் தொடர்ச்சி மலைப்பகுதிக்குச் செருப்பு என்பது பெயர். அந்த மலையைச் சார்ந்து காடுகளும் முல்லை நிலங்களும் புல்வயல்களும் இருந்தன. அங்கு ஆடுமாடுகளை வளர்த்துக்கொண்டு ஆயர்கள் வாழ்ந்து வந்தனர். மலைக்காடுகளில் விலையுயர்ந்த கதிர்மணிகளும் கிடைத்தன.

*முல்லைக் கண்ணிப் பல்ஆன் கோவலர்*

*புல்லுடை வியன்புலம் பல்ஆ பரப்பிக்*

*கல்உ யர் கடத்திடைக் கதிர்மணி பெறூஉ ம்*

*மிதிஅல் செருப்பின் பூழியர் கோவே!* (பதிற்று. 3,1:20-23)

*மரம்பயில் சோலை மலியப் பூழியர்*

*உ ருவத் துருவின் நாள்மேய லாரும்*

*மாரி எண்கின் மலைச்சுரம்* (நற். 192:3-5)

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுடைய தம்பியாகிய பல்லானைச் செல்கெழு குட்டுவன் (நார்முடிச் சேரலுக்கும் சேரன் செங்குட்டுவனுக்கும் ஆடு கோட்பாட்டுச் சேரலாதனுக்கும் சிற்றப்பன்) பூழியர்கோ என்று கூறப்படுகின்றான். இவன் பூழி நாட்டையாண்டதோடு கொங்கு நாட்டின் சில ஊர்களை வென்றான். பூழி நாட்டை 25 ஆண்டுகள் அரசாண்ட பிறகு இவன் அரசைத் துறந்து காட்டுக்குத் தவஞ் செய்யப்போய் விட்டான்.[23]

சங்ககாலம் முதல் சேரருக்கு உரியதாய் இருந்த பூழிநாட்டை அதன் வடக்கிலிருந்த தூளுநாட்டு நன்னன் கைப்பற்றிக் கொண்டான். அதனால் சேரர்தாங்கள் இழந்த பூழிநாட்டை மீட்டுக்கொள்ள வேண்டியிருந்தது. சேர நாட்டையரசாண்ட களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் (சேரன் செங்குட்டுவனுடைய

தமயன்) நன்னனோடு போர் செய்து அவனை வென்று தனக்குக் கீழடக்கிக் கொண்டதோடு அவன் கைப்பற்றியிருந்த பூழி நாட்டையும் மீட்டுக் கொண்டான்.

*ஊழின் ஆகிய உயர்பெருஞ் சிறப்பில்*
*பூழி நாட்டைப் படையெடுத்துத் தழீஇ*
*உருள் பூங் கடம்பின் பெருவாயில் நன்னனை*
*நிலைச் செருவின் ஆற்றலை லறுத்து* (பதிற்று. 4 பதி.)

*பெருந்தோள் அரிவை ஒழிய, குடாஅது,*
*இரும்பொன் வாகைப் பெருந்துறைச் செருவில்*
*பொலம்பூண் நன்னன் பொருதுகளத்து ஒழிய*
*வலம்படு கொற்றம் தந்த வாய்வாள்*
*களங்காயைக் கண்ணி நார்முடிச் சேரல்*
*இழந்த நாடு தந்தன்ன* (அகம். 199:18-23)

'பூழி நாட்டுக்குக் கொங்கானம் என்று பெயர் இருந்ததென்று சிலர் கூறுகின்றனர். இவ்வாறு கே.ஜி. சேஷ ஐயர் முதலியோர் கூறுவது தவறு'[24] கொங்காண நாட்டரசனாகிய நன்னன் பூழிநாட்டை வென்று சிலகாலம் தன் ஆட்சியின் கீழ்வைத்திருந்தான். ஆனால் பூழிநாட்டுக்குக் கொங்கானம் என்று பெயர் இருந்ததில்லை.

பூழி நாடு சேர அரசர்களுக்கு இல்லாமல் கொங்குச் சேரருக்கு உரியதாக இருந்து வந்தது. ஏனென்றால் உள்நாடாகிய கொங்கு நாட்டுக்குக் கடற்கரையும் துறைமுகமும் இல்லாதபடியால், கொங்கு நாட்டையரசாண்ட கொங்குச்சேரர் களுக்குத் துறைமுகம் வேண்டியதாக இருந்தது. கொங்கு நாட்டையடுத்து மேற்கிலிருந்த பூழி நாட்டில் தொண்டி, மாந்தை என்று இரண்டு துறைமுகப் பட்டினங்கள் இருந்தபடியால் இத்துறைமுகங்களுடைய பூழிநாட்டைச் சேர அரசர் கொங்கு நாட்டுச் சேரர்களுக்குக் கொடுத்தனர். சேரர்களின் சேரநாட்டில் புகழ்வாய்ந்த முசிறித்துறைமுகம் இருந்தபடியால் அவர்கள் இந்தத் துறைமுகங்களையும் பூழிநாட்டையும் கொங்குச் சேரர்களுக்குக் கொடுத்தார்கள். பிறகு பூழிநாடும் அதன் துறைமுகப்பட்டினங்களும் கொங்குச் சேரர்களிடம் இருந்தன.

கொங்கு நாட்டரசர்கள் பூழியர்கோ என்றும் பூழியர் மெய்ம்மறை என்றும் கூறப்பட்டனர். செல்வக் கடுங்கோ வாழியாதன்,

*ஊழி வாழி பூழியர் பெருமகன்*
*பிணர்மருப் பியானைச் செருமிகு நோன்றாள்*
*செல்வக் கடுங்கோ வாழியாதன்* (புறம். 387:28-30)

என்று கூறப்படுகின்றான். அவனுடைய மகனான தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை,

*புகர்அர்ச் செல்வ பூழியர் மெய்ம்மறை* (பதிற்று. 8,3-13)

என்று கூறப்படுகின்றான். இதனால், கொங்குச்சேரர் பூழி நாட்டையும் அதனைச் சேர்ந்த மாந்தை, தோண்டி என்னும் துறைமுகப் பட்டினங்களையும் வைத்திருந்தனர் என்பது தெரிகின்றது.

## பெருந்தலையூர்

சங்கப் புலவர்களில் பெருந்தலைச்சாத்தனாரும் ஒருவர். நற்றிணையில் 262-ஆவது பாடலைப் பாடியவர். குமணன் என்னும் வள்ளலைக் காட்டிலே கண்டு சோகம் நிறைந்த சொற்களால் அவர் உள்ளத்தை உருக்கி அவன்பால் தலைக்கொடை பெற்ற புலவர் இவர். பெருந்தலை என்னும் ஊரில் பிறந்த இவர் பெருந்தலைச் சாத்தனார் என அழைக்கப்படுகிறார்.

பெருந்தலை என்னும் ஊர் தற்போது பெருந்தலையூர் என மருவி வழங்கப்படுகிறது. பெருந்தலை எனும் ஊரினைப் பற்றிய குறிப்புச் சங்கப்பாடல்களில் பதிவு இல்லை. ஈரோடு மாவட்டம், கோபிசெட்டிபாளையம் வட்டத்தில் தற்போது பெருந்தலையூர் உள்ளது.

## பேரூர்

கோயமுத்தூர் மாவட்டம் கோயமுத்தூர் வட்டத்தில் நொய்யலாற்றின் கரையில் உள்ள ஊர் பேரூர். சங்க இலக்கியத்தில்,

*பேரூர் துஞ்சும் யாரும் இல்லை* (நற். 132:1)

என்று நற்றிணையிலும், குறுந்தொகையில்

*பேரூர் கொண்ட ஆர்கலி விழவில்* (குறுந். 223:1)

என்றும் அகநானூற்றில்,

*சாரல் பேரூர் முன்துறை இழிதரும்* (அகம். 382:11)

என்றும் பேரூரைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்பெறும் இப்பேரூர் கோயம்புத்தூரில் உள்ள பேரூர்தான் என்பதை இங்குக் கிடைத்த கல்வெட்டு (S.I.I. Vol.V No. 225) சான்று பகர்கின்றது.

பேரூர் சைவ உலகில் பாடல்பெற்ற திருதலமாக விளங்குகின்றது. அருள்மிகு மரகதவல்லி உடனாய பட்டீசுரர் எனும் சிவத்தலம் இங்குச் சிறப்புடன் விளங்குகின்றது. திருநாவுக்கரசர், சுந்தரர் தேவாரங்களிலும், மாணிக்கவாசகரின் திருக்கோவை யாரிலும் இத்தலம் போற்றப்படுகிறது. தேவார வைப்புத்தலம், அருணகிரிநாதர் இங்குள்ள முருகனைப் போற்றித் திருப்புகழ் அருளியுள்ளார்.

திருத்தில்லையில் நடராசப்பெருமான் திருக்கூத்தியற்றுவது போன்று இத்தலத்திலும் இயற்றுவதால் இத்தலம் மேலைச் சிதம்பரம் என வழங்கப்படுகின்றது. நடராசன் எழுந்தருளியுள்ள சபை அரவம்பலம், வெள்ளியம்பலம் எனப் பெயர் பெற்றுள்ளது. அரசமரத்தின் காரணமாக இவ்வூர் அரசவனம் என்றும் வழங்கப்படுகின்றது. அருணகிரிநாதரின் திருப்புகழ், திருவாவடுதுறை ஆதீனம் கச்சியப்ப முனிவர் செய்த தலபுராணம், சாந்தலிங்கபுராணம் போன்றவை இத்தலத்தைப் போற்றுகின்றன.

**மாந்தை**

மாந்தை சேரநாட்டின் துறைமுகப்பட்டினமாகும். சேரனின் ஆட்சிக்குட்பட்டிருந்த பூழி நாட்டில் மாந்தை இருந்தது. துறைமுகப்பட்டினமாக இருந்தபடியால் அங்கு அயல்நாட்டுக் கப்பல் வாணிகர் பலர் வாணிகம் செய்தார்கள். அதனால் சேரர்களுக்குச் சுங்க வருவாய் மிகுதியாகக் கிடைத்தது. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் மாந்தைப் பட்டினத்தில் பொன் முதலான பெருஞ்செல்வத்தைப் புதைத்து வைத்திருந்தான் என்று மாமூலனார் கூறுகிறார்.

*வலம்படு முரசிற் சேரல் ஆதன்*

*முந்நீர் ஒட்டிக் கடம்பறுத் திமயத்து*

*முன்னோர் மருள வணங்குவிற் பொறித்து*

*நன்னகர் மாந்தை முற்றத்து ஒன்னார்*

*பணிதிறை தந்த பாடுசால் நன்கலம்*

*பொன்செய் பாவை வயிரமொடு ஆம்பல்*

*ஒன்றுவாய் நிறையக் குவைஇ அன்றவன்*

*நிலந்தினத் துறந்த நிதியம்* (அகம். 127:3-10)

மாந்தைப் பட்டினம் மரந்தை என்றும் கூறப்பட்டது.

*குரங்குளைப் புரவிக் குட்டுவன்* (அகம். 376:17-18)

*மரந்தை யன்ன என் நலம்* ((குறுந். 166-3)

எதுகை நோக்கி இவ்வாறு சில பதிப்புகளில் மரந்தை என்று கூறப்பட்டது. சில பதிப்புகளில் இது ‘மாந்தை’ என்றே பதிப்பிக்கப்பட்டுள்ளது.

*துறைகெழு மாந்தை அன்ன இவள்நலம்* (நற். 35-7)

*கடல்கெழு மாந்தை அன்ன* (நற். 395-9)

*குட்டுவன் மாந்தை அன்னஎம்* (குறுந். 34:6-7)

*குழைவிளங்கு ஆய்நுதற் கிழவனும் அவனே*[53]

இவ்வாறு கூறப்படுகிறது. செல்வக்கடுங்கோ வாழியாதன், மாந்தரன் என்று கூறப்படுகின்றான்.

*பலர்மேந் தோன்றிய கலிகை வள்ளல்*

*நிறைஅருந் தானை வெல்போர் மாந்தரம்*

*பொறையன் கடுங்கோப் பாடிச் சென்ற*

*குறையோர் கொள்கலம் போல* (அகம். 142:3-6)

செல்வக்கடுங்கோ வாழியாதனின் பேரனான இளஞ்சேரல் இரும்பொறை,

*அறன்வாழ்த்த நற்குஆண்ட*

*விறல்மாந்தரன் விறல்மருக* (பதிற்று. 90:12-13)

என்று கூறப்படுகின்றான். இதனால் மாந்தைத் துறைமுகப்பட்டினம் செல்வக்கடுங்கோ வாழியாதன் காலத்திலிருந்து சேரநாட்டுத் துறைமுகமாக இருந்தது என்பதை அறிய முடிகின்றது.

மாந்தை நகரத்தில் புன்னை மரங்கள் சூழ்ந்து காணப்பட்டதாக முத்தொள்ளாயிரம் குறிப்பிடுகிறது.

*புன்னாகச் சோலை புனல் தெங்குசூழ்*

*மாந்தை நல்நாடன்* (முத்தொள்ளாயிரம், 15:1-2)

எனவும்,

*மல்லல்நீர் மாந்தையார் மாக்கடுங்கோ* (முத்தொள்ளாயிரம், 21-1)

எனவும் முத்தொள்ளாயிரம் மாந்தை நகரத்தினைச் சிறப்பிக்கின்றது. மேலும் மாந்தை நகரம் கடற்கரையின் அருகில் அமைந்திருந்தது என்பதைப் பதிற்றுப்பத்தும் விளக்குகிறது.

*எழாத்துணைத்தோள் பூழியர் மெய்ம்மறை*

*இரங்குநீர்ப்பரப்பின் மரந்தையோர் பொருந*

*வெண்பூ வேளையொடு கரைதலை மயங்கிய*

*விரவுமொழி கட்டூர் வயவர்வேந்தே* (பதிற்று. 90:27-30)

ஒலிக்கும் கடற்பரப்பின் அருகில் இருக்கும் மாந்தை நகரத்தின் தலைவனே என இளஞ்சேரலைப் பெருங்குன்றூர் கிழார் கூறியுள்ளார்.

மேற்குக்கடற்கரையில் விளங்கிய மற்றொரு துறைமுகமாகிய தொண்டியின் புகழ் ஓங்கியதால் மாந்தையின் பெருமை எனவும் கருதலாம். அயல்நாட்டவர் குறிப்புரைகளில் மாந்தையைப் பற்றிய செய்தி இடம்பெறவில்லை.

## முசிறி

மேற்குக் கடற்கரையில் பேரியாற்றங்கரையில் (சுள்ளி பெரியாறு) உலகப் புகழ்ப்பெற்று விளங்கிய சேரர்களின் துறைமுகம் முசிறி.

## வேறுபெயர்கள்

முசிறித்துறைமுகம் மிகவும் பழைமையானது. "வால்மீகி இராமாயணத்தில் இவ்விடம் முரசிபதனம் என்று குறிப்பிடுகின்றது."[24] யவனர்கள் முசிறியை 'முசிறிஸ்' என்று அழைத்தனர். முசிறி, முயிரிக்கோடு என்றும் அழைக்கப்பட்டது. முசிறி என்ற பெயர் கொடுங்கோளூர் எனவும் அழைக்கப்பட்டது. முசுறுப்புல் என்னும் ஒருவகைப்புல் இக்கடற்கரைப் பட்டினத்தில் விளைந்தமையால் முசிறி எனப் பெயர்பெற்றது.

முசிறித்துறைமுகத்தில் மற்றைய துறைமுகங்களைப் போன்று கலங்கரை விளக்கமும், சுங்கச்சாவடியும், பண்டகச்சாலைகளும், கிடங்குகளும் பிறவும் இருந்தன.

"சோழ நாட்டுக்கீழ் கடற்கரையிலும் முசிறி என்ற பட்டினம் இருந்தது. உள்நாட்டிலும் முசிறி என்ற ஊர் திருச்சிராப்பள்ளிக் கோட்டத்தில் உள்ளது. அது ஒரு தாலுக்காவின் தலைநகர்."[25]

அரேபியர்கள் முசிறியில் உண்டாகும் மிளகு, ஏலம், இலவங்கம் என்னும் பொருட்களையும், புல்தைலம் என்னும் நறுமண எண்ணெயையும் பெரிதும் விரும்பி வாங்கிச்சென்றனர். இந்நறுமண எண்ணெயை உடம்பில் பூசிக்கொள்ளவும், இறந்த உடலை நெடுநாள் கெட்டுப்போகாமல் பாதுகாக்கவும் பயன்படுத்தினர்.

முசிறியில் அரேபியர்கள் வாணிகம் செய்த இடத்திற்குப் பந்தர் என்று பெயரிட்டிருந்தார்கள். அரபு மொழியில் பந்தர் என்பதற்குக் 'கடைவீதி' என்று பொருள். முசிறித்துறைமுகத்தில் முத்துகளும் விலையுயர்ந்த பொன்நகைகளும் விற்கப்பட்டன.

*நன்கல வெறுக்கை துஞ்சும் பந்தர்க்*
*கமழுற தாழைக் கானலம் பெருந்துறை* (பதிற்று. 6:1-2)

என்றும்,

*கொடுமணம் பட்ட வினைமான் அருங்கலம்*

*பந்தர்ப் பயந்த பலர்புகழ் முத்தம்* (பதிற்று. 8:5-6)

என்றும் பதிற்றுப்பத்துக் குறிப்பிடுகின்றது.

அரேபியர்கள் சேரநாட்டு மிளகை ஏற்றுமதி செய்து செங்கடல் துறைமுகங்களிலும் அலெக்சாந்திரியத் துறைமுகப்பட்டினத்திலும் விற்றார்கள். அங்கிருந்து உரோம் மற்றும் எகிப்து நாட்டுப்பொருட்களை இறக்குமதி செய்து முசிறியில் விற்றார்கள். அக்காலத்தில் அரேபியர்கள் கிழக்கிந்தியத் தீவுகளுக்குச் சென்று வாணிகம் செய்யவில்லை. தமிழர்கள் கிழக்கிந்தியத் தீவுகளுக்குச் சென்று வாணிகம் செய்த பொருட்களை அரேபியர்கள் வாங்கிக் கொண்டுபோய் வெளிநாடுகளில் விற்றார்கள்.

கி.பி. முதல் நூற்றாண்டைச் சேர்ந்த பிளினியின் (கி.பி. 26-73) இயற்கை வரலாறு, எரித்ரியக் கடற்செலவு மற்றும் தாலமியின் குறிப்புகள் போன்றவை முசிறியின் சிறப்பான வாணிக நடவடிக்கை குறித்துப் பேசுகின்றன. இவற்றிற்கு வலுவூட்டுவனவாக, அண்மையில் வியன்னா அருங்காட்சியகத்தில் இருந்து வெளிக்கொணரப்பட்டுள்ள கிரேக்க மொழியில் உள்ள வாணிக ஒப்பந்தம் தொடர்பான இத்தாள் ஆவணம் (papyrus document) முசிறித் துறைமுகத்திற்கும் அலெக்சாந்திரயாவிற்கும் இடையே நிலவிய வாணிகத் தொடர்பைக் காட்டுகிறது. மேற்சுட்டிய ஆவணத்தின் பின் பக்கத்தில் முசிறியிலிருந்து அலெக்சாந்திரியாவிற்கு ஏற்றுமதி செய்யப்பட்ட சரக்குகளைப் பற்றிய குறிப்புக் காணப்படுகின்றது. இவற்றில் வாசனைத்திரவியம், தந்தம் மற்றும் துணிகள் முக்கியமானவை ஆகும்.[26]

யவனர்கள் அக்காலத்தில் கடற்கரை ஓரமாகவே கப்பலைச் செலுத்தியதால் முசிறி முதலான தமிழ்நாட்டுத் துறைமுகங்களுக்கு வந்து செல்ல பல மாதங்கள் ஆயின. ஹிப்பலஸ் என்னும் கிரேக்க மாலுமி பருவக்காற்றின் உதவியினால் நடுக்கடலுள் கப்பலைச் செலுத்தி விரைவில் பயணம் செய்யும் முறையினைக் கண்டு பிடித்தார். அதன் பின்னரே யவனக் கப்பல்கள் முசிறித்துறைமுகத்திற்கு விரைவாகவும் அதிகமாகவும் வரத்தொடங்கின. ஹிப்பலஸ் கண்டுபிடித்த பருவக்காற்றுக்கு அவரின் பெயரையே சூட்டினார்கள். ஹிப்பலஸ் பருவக்காற்று கண்டுபிடித்த பின்னர் யவனர் வாணிகம் பெருகிற்று எனலாம்.

‘சேரநாட்டுத்துறைமுகங்கள் அனைத்தும் கண்ணூருக்கும் கொச்சிக்கும் இடையில் அமைந்திருந்தன. அரேபியாவிலிருந்தும், கீரீஸிலிருந்தும் வாணிகச் சரக்குகளை ஏற்றிக்கொண்டு வந்த எண்ணற்ற நாவாய்கள் முசிறியில் செறிந்துகிடந்தன என்று பெரிபுளுசு கூறுகிறார். வைகாசி மாதம் தொடங்கி மூன்று நான்கு மாதங்கள் வரை சேரநாட்டுக் கடற்கரையின் மேல் வந்து மோதும் பருவக்காற்றை முதன்முதலில் கண்டறிந்தவர் இப்பாலசு (கி. பி. 45) என்ற கிரேக்கர் என்று கூறுவர். இக்காற்றோட்டத்தின் ஊடே பாய்விரித்தோடும் கப்பல்கள் வெகுவிரைவாகவும் கட்டுக்குலையாமலும் சேரநாட்டுத் துறைமுகங்களை அறியமுடியும். என்ற உண்மையை ஐரோப்பிய மாலுமிகள் அறிந்துகொண்டனர். இப்பருவக் காற்றின் துணைக்கொண்டு வாணிகச் சரக்குகளை ஏற்றிய பெரிய பெரிய மரக்கலங்கள் கடல்களின் நடுவில் பாய்விரித்தோடித் தமிழகத்தின் மேலைக் கடற்கரைத் துறைமுகத்தினை அடைந்து நங்கூரம் பாய்ச்சின’[27] என்பார் கே.கே. பிள்ளை.

யவனக்கப்பல்களில் ஏற்றுமதியான பொருட்களில் முக்கியமானதும் அதிகமாகவும் இருந்தது மிளகுதான். உரோம், நாட்டில் மிளகு பெரிதும் விரும்பி வாங்கப்பட்டது. யவனர்கள் மிளகை விரும்பி ஏற்றுமதி செய்ததால் மிளகிற்கு யவனப்பிரியா என்ற பெயர் உண்டாயிற்று. யவனர்கள் பவழம், கண்ணாடி, செம்பு, தகரம், ஈயம் முதலான பொருட்களை இறக்குமதி செய்தும், பொன்னைக் கொடுத்தும் மிளகை ஏற்றுமதி செய்தனர்.

பொன்னைக் கொண்டு வந்து விலையாகக் கொடுத்து மிளகை ஏற்றிக்கொண்டு போனதை அகநானூறு தெரிவிக்கிறது.

*சுள்ளிஅம் பேரியாற்று வெண்ணுரை கலங்க*
*யவனர் தந்த வினைமாண் நன்கலம்*
*பொன்னொடு வந்த கறியொடு பெயரும்*
*வளங்கெழு முசிறி* (அகம். 149:8-11)

'மிளகு வியாபாரத்திற்கு வந்த கிரேக்கர் இந்திய மருந்து என மிளகைப் பாராட்டினர். அவர்கள் இறைச்சியைப் பதம்கெடாது காக்கவும், உணவுகளுக்குப் பாகப்பொருளாகச் சேர்க்கவும் மிளகுப் பொடியைத் தூவி வந்தனர். மிளகின் சுவையை மாளிகை வாசிகள் முதலாக மண்குடிசை வாசிகள் ஈறாக அனைவரும் அறியும் நிலை ஏற்பட்டதால் தென்னாட்டிலிருந்து உரோம் நாட்டிற்குச் சென்ற பொருள்களில் முக்கால்பாகம் மிளகாகவே இருந்து வந்தது'[28]

புறநானூற்றில் பரணர், யவனர்கள் பொன்னைக் கொடுத்து மிளகைப் பெற்றுச் சென்றதைக் கூறியுள்ளார்.

*தலைப்பெய்து வருநர்க்குஈயும்*

*புனல்அம் கள்ளின் பொலந்தார்க் குடவன்*

*முழங்குகடல் முழவின் முசிறி அன்ன* (புறம். 343:8-10)

*மேலும் முசிறித்துறைமுகம் ஆழமில்லாமல் இருந்தபடியால் யவனரின் பெரிய* கப்பல்கள் கரைக்கு வரஇயலாமல் கடலில் தொலைவிலேயே நின்றன. தோணிகளில் மிளகை ஏற்றிக்கொண்டு போய் யவனக்கப்பல்களில் ஏற்றிவிட்டு அதன் விலையாகப் பொன்னை வாங்கிக் கொண்டு வந்தார்கள் என்று கூறியுள்ளார்.

'உலக நாடுகளுக்குத் தேவைப்படும் மிளகிலே எழுபது விழுக்காடு அளவு மிளகினைக் கேரள நாடே இன்றும் கொடுத்து வருகிறது'[29]

முசிறித்துறைமுகத்தின் செழுமையால் சேரநாடு பொன்னாடாக விளங்கியது. நாளடைவில் முசிறி என்ற பெயர் மறைந்து 'மாகோதைப் பட்டினம்' என வழங்கப்பட்டது. மகோதை என்ற பெயரும் மறைந்து பின்னர்க் 'கொடுங்கோளூர்' எனவாயிற்று. கொடுங்கோளூரை ஆங்கிலேயர்கள் 'கிராங்கலூர்' என அழைத்தனர்.

முசிறி என்றும், மாகோதை என்றும், கொடுங்கோளூர் என்றும் வெவ்வேறு காலங்களில் பெயர்பெற்று விளங்கிய முசிறித்துறைமுகம் நாளடைவில் அழிந்து போயிற்று. சேரமான் பறம்பு என்று அம்மாளிகை இருந்த இடத்தைக் குறிக்கின்றனர் மலையாள மக்கள் என்று இரா. பி. சேதுபிள்ளை குறிப்பிடுகின்றார்.

உலகப்புகழ் பெற்றிருந்த முசிறித்துறைமுகம் கி.பி. 14-ஆம் நூற்றாண்டில் வெள்ளப்பெருக்கினால் அழிந்தது. பெருமழையின் காரணமாகப் பேரியாற்றில் வெள்ளப்பெருக்கு ஏற்பட்டு முசிறிப்பட்டினம் வெள்ளத்தில் மூழ்கி மறைந்து போய்விட்டது. முசிறித்துறைமுகம் மூழ்கிப் போனதால் அதற்கு அருகில் பிற்காலத்தில் கொச்சித் துறைமுகம் உண்டாயிற்று. இன்று கேரளத்தில் தலை சிறந்ததும் இந்தியாவில் மிகச்சிறந்த துறைமுகப்பட்டினங்களில் ஒன்றாகவும் அரபிக்கடலின் ராணியாகவும் கொச்சித்துறைமுகம் திகழ்கின்றது.

## முதிரம்

முதிரம் என்பது மலையின் பெயர். அம்மலையும் அதைச் சேர்ந்த நாடும் குமணனுக்குரியனவாய் இருந்தன. குமணன் வாழ்ந்த ஊர் குமணம் என்று பெயர்பெற்றுப் பிற்காலத்தில் கொழுமம் என்று திரிந்துள்ளது.

கோவை மாவட்டத்தில் உடுமலைப்பேட்டை வட்டத்தில் ஒருசிறிய கிராமமாக இன்று கொழுமம் விளங்குகின்றது. கொழுமத்திற்குத் தெற்கே ஒரு கிலோமீட்டர் தூரத்தில் காணப்படும் குதிரை மலையே பழைய முதிரைமலை எனபர். ‘முதுகிற் சேணமிட்டு நிற்கும் குதிரை போன்று இம்மலை காட்சி அளித்ததால் பிற்காலத்தில் அதனைக் குதிரை மலை என அழைத்தார் போலும் என்பர்.’[30]

சங்க இலக்கியத்தில் புறநானூறு முதிரமலையைக் குறிப்பிடுகிறது.

*முட்புற முதுகனி பெற்ற கடுவன்*
*துய்த்தலை மந்தியைக் கையிடூஉப் பயிரும்*
*அதிராயாணர், முதிரத்துக்கிழவ* (புறம். 158:23-25)

*நட்டோர் நட்ட நல் இசைக்குமணன்*
*மட்டார் மறுகின் முதிரத்தோனே* (புறம். 160:12-13)

*பழும் தூங்கு முதிரத்துக்கிழவன்*
*திருந்து வேல்குமணன் நல்கிய வளனே* (புறம். 163:8-9)

## வஞ்சி

சங்ககால தமிழகத்தில் வஞ்சி சேரர்களின் மிகச்சிறந்த தலைநகரமாக விளங்கியது. வான் அளவிய புகழையும் வெற்றியையும் கொண்டதாக வஞ்சி மாநகர் விளங்கியது.

## வேறுபெயர்கள்

பூவாவஞ்சி, வாடாவஞ்சி, ஆதிபுரம், வஞ்சுளாரணியம், கர்ப்பபுரி, பாற்கரபுரம், கண்மங்கலச்சேத்திரம், முடிவழங்கு சோழபுரம் முதலான பெயர்களால் வஞ்சிமாநகரம் அழைக்கப்பட்டுள்ளது.

## வஞ்சி மாநகர் - கருவூர்

சேரநாட்டின் தலைநகரம் வஞ்சிமாநகரம் என்னும் கருவூர் என்றும் கூறுவதுண்டு. வஞ்சி மாநகரத்திற்குக் கருவூர் என்ற வேறுபெயர் இருந்தது. இவ்விரண்டு நகர்களும் எங்கிருந்தன என்பதற்குரிய ஆராய்ச்சியில் இருவேறு கருத்துகள் ஏற்பட்டுள்ளன. இவ்வஞ்சிமா நகரம், சேரநாட்டின் இன்றைய கேரளாவிலுள்ள வஞ்சியே என்றும் கொங்கு நாட்டிலுள்ள இன்றைய கருவூரே என்றும் ஆராய்ச்சியாளர்கள் இருவேறு நிலையில் கூறுகின்றனர்.

கே. ஜி. சேஷையர், தி. வை. சதாசிவப்பண்டாரத்தார், எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார், கே.என். சிவராஜப்பிள்ளை, வி. கனகசபை, ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை முதலானோர் பண்டைய சேர நாடெனும் இன்றைய கேரளத்தில் உள்ளது என்று கூறுவர். மு. இராகவையங்கார், இரா. இராகவையங்கார், வி.ஆ. இராமச்சந்திர தீட்சிதர், கே. ஏ. நீலகண்டசாஸ்திரி முதலானோர் இன்றைய கரூவூர் மாவட்டமே என்று கூறுகின்றனர்.

மயிலை சீனி. வேங்கடசாமி சேரநாட்டிற்கு இரண்டு தலைநகரங்கள் இருந்தன என்பார். அவர், 'சேரன் செங்குட்டுவன்' என்னும் தமது நூலில், 'சங்க காலத்துச் சேரர் தலைநகர் ஆதிகாலம் முதல் கடற்கரையோரத்திலிருந்த வஞ்சிக்கரூவூர்தான் என்பதில் ஐயமில்லை. ஆனால், சேர அரசர்கள் முக்கியமாக இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், பல்யானைச் செல்கெழு குட்டுவன் ஆகிய அண்ணன்

தம்பியரசர்கள், கொங்குநாட்டின் தென்பகுதியைக் கைப்பற்றி அவற்றைச் சேர இராச்சியத்துடன் சேர்த்துக் கொண்டார்கள். சேர்த்துக்கொண்ட கொங்குநாட்டுச் சேர அரச மரபில் ஓர் அரசன் ஆட்சி செய்ய தொடங்கினான். அவன் கொங்கு நாட்டில் தான் இருந்த ஊருக்குப் பழைய தலைநகரத்தின் பெயராகிய வஞ்சி (கருவூர்) என்னும் பெயர் சூட்டினான். எனவே, பழைய வஞ்சிமாநகரமும் புதிய வஞ்சிமாநகரமும் சேர அரசர்களுக்குத் தலை நகரங்களாகச் சங்க காலத்திலேயே அமைந்தன'[31] என்று குறிப்பிடுகின்றார்.

இந்நிலையில் சேரநாட்டின் தலைநகரம் எதுவென ஆராயப்பட வேண்டியதாகிறது. தமிழகத்தின் வரலாற்றைப் பெரும்பாலும் இலக்கியத்தின் துணைக்கொண்டே அறிய வேண்டியுள்ளது. பதிற்றுப்பத்தில் சேரநாடு, கொங்குநாடு ஆகிய இரண்டு நாடுகளின் தன்மையினையும் வளப்பத்தினையும் தனித்தனியே தெரிவிக்கின்றது. 'கடலை ஆடையாகக் கொண்டு குன்றுகள் பல உடைய நாடு என்றும், நின் மலையிலே பிறந்து நின் கடலிலே கலக்கும் மலிபுனல் நாடு என்றும், வளம்பல நிகழ்தரு நனந்தலை நன்னாடு' (பதிற்று. 31:1-2, 48:13-16) என்றும் சேரநாட்டின் தன்மையினைப் பதிற்றுப்பத்து கூறுகிறது.

கொங்குநாட்டின் தன்மையினைகுறிப்பிடும்போது, சிறிய அளவே நீரினையுடைய ஆநிரை மேய்த்தலே தொழிலாகக் கொண்டு விளங்கும் கொங்கரின் கொங்குநாடு என்று சேரநாட்டினின்றும் வேறுபடுத்திக் கூறுகிறது.

*பொன்செய் கணிச்சித் திண்பிணி யுடைத்துச்*
*சிரறுசில வூறிய நீர்வாய்ப் பத்தற்*
*கயிறுகுறு முகவை மூயின மொய்க்கும்*
*ஆகெழு கொங்கர் நாடு* (பதிற்று. 22:12-15)

'கொங்கர்நாடு' என்ற சொல், கொங்குநாட்டைக் கொங்கர் எனும் இனத்தவர் ஆட்சி புரிந்தமையினைத் தெளிவுற உணர்த்துகிறது. மேலும், சேரநாட்டின் ஆள்நிலமாக, மேற்குத்தொடர்ச்சி மலைக்கு மேற்கேயும் அரபிக்கடலுக்குக் கிழக்கேயும் உள்ள நிலப்பகுதி இருந்துள்ளது என முன்னர் கண்ட கருத்தினை உறுதிப்படுத்துகிறது. இவ்வாள் நிலமே பண்டைய சேரநாடாகும். அவ்வாறாயின், சேரநாட்டின் தலைநகரம்

அந்நாட்டின்கண் அமைந்திருப்பதே இயல்பு. கொங்கு நாட்டிலிருந்த, அதாவது இன்றைய கரூர்தான் சேரநாட்டின் தலைநகரம் என்று கூறுவது பொருந்தாது.

மேலும், கொங்கு நாடு சேரநாட்டின் தாயகமன்று, சேரர்தம் ஆளுகைக்கு உட்படுத்தப்பட்ட நாடு ஆகும். அங்ஙனம் சேர மன்னர்களில் முதன் முதலில் ஆட்கொண்டவர்கள் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனும், பல்யானைச் செல்கெழு குட்டுவனும் ஆவர். பின்னர், கரூவூரேறிய ஒள்வாட் கோப்பெருஞ்சேரலிரும்பொறை ஆட்கொண்டான் என்பதை அவனின் சிறப்புப் பெயர் அறிவுறுத்தும். இவர்கள் இந்நாட்டை வெல்லும் முன்பு சேரநாட்டிற்கு ஆள்நிலமோ, தலைநகரமோ இல்லை என்று கூற இயலாது.

கொங்குநாடு ஒவ்வொரு காலத்திலும் ஒவ்வொரு பேரரசின் கீழ் இருந்தமையினையும் அறியமுடிகிறது. கொங்கு நாட்டினைச் சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன் வென்றமையினை

*மைந்த ராடிய மயங்குவரும் தானைக்*
*கொங்குபுறம் பெற்ற கொற்ற வேந்தே* (புறம். 373:7-8)

என்னும் புறநானூற்று அடிகள் உணர்த்தும். பசும்பூண் பாண்டியன் எனும் பாண்டிய மன்னன் கொங்கு நாட்டைத் தன்னகப்படுத்தினான். இதனை,

*வாடாப் பூவிற் கொங்கர் ஒட்டி*
*நாடுபல தந்த பசும்பூட் பாண்டியன்* (அகம். 253:4-5)

எனும் அகநானூற்றுப் பாடலடிகளால் அறிய முடிகின்றது. மேலும் பேரரசர்கள் மட்டுமின்றிக் குறுநில மன்னனான ஆய் அண்டிரன் வென்றமையினை,

*கொங்கர்க்*
*குடகட லோட்டிய ஞான்றை* (புறம். 130:5-6)

என்னும் புறநானூற்றுப்பாடல் அடிகள் சான்று பகர்கின்றன. எனவே, வெவ்வேறு நாட்டு ஆளுகைக்கு உட்படுத்தப்பட்ட கொங்குநாடு சேரநாட்டின் தாயகமாக இருப்பதற்கு வாய்ப்பேதும் கிடையாது. சேரமன்னர்கள் இடையிடையே சிலகாலம் கொங்கு நாட்டைத் தம்வயப்படுத்தி ஆண்டனர் என்பதே சங்க இலக்கியம் தரும் கருத்தாகும்.

மேலும், கடல் மலை நாட்டிலுள்ள வஞ்சியும், கொங்கு நாட்டிலுள்ள கருவூரும் (தற்போதை கரூர் மாவட்டம்) அமைந்திருக்கும் இடங்கள் ஆய்வதற்குரியனவாகும். வஞ்சி மாநகரம் தண்பொருநை ஆறு பாயும் இடத்தில் அமைந்துள்ளமையினை,

*தண்பொருநனைப் புனல்பாயும்*
*விண்பொருபுகழ் விறல்வஞ்சி* (புறம். 11:5-6)

*புல்லிலை வஞ்சிப் புறமதி லலைக்கும்*
*கல்லென் பொருநை மணலினு மாங்கண்* (புறம். 387:33-34)

எனும் புறநானூற்றுப்பாடல் அடிகளால் அறியலாம். கொங்குநாட்டுக் கருவூரானது தண்ணான் பொருநைக் கரையில் அமைந்திருந்தமையினை,

*திருமா வியனகர்க் கருவூர் முன்றுறைத்*
*தெண்ணீர் உயர்கரைக் குவைஇய*
*தண்ணான் பொருநறை மணலினும் பலவே* (அகம். 93:21-23)

எனும் அகநானூற்றுப்பாடல் அடிகளாலும்,

*தண்ணான் பொருநை வெண்மணல் சிதைய* (புறம். 36:5)

எனும் புறநானூற்றுப் பாடல் அடியாலும் அறிய முடிகிறது. எனவே, வஞ்சி மாநகரம் சேரநாட்டிலும் கருவூர் கொங்கு நாட்டிலும் இருந்தமையினை அறிய முடிகின்றது.

இவ்விரண்டு ஆறுகளையும் ஒன்றெனக் கருதினமையான் கொங்குநாட்டுக் கருவூரே சேரர் தலைநகரம் என்று சிலர் கூறினர். இக்கருத்துத் தவறானது என்று கல்வெட்டாராய்ச்சியாளர் டி.வி. சதாசிவப் பண்டாரத்தார் கூறுவார். 'புறநானூற்று உரையாசிரியர் இவ்விரண்டு ஆறுகளையும் ஒன்றென மயங்கி உரை கண்டமையின், கொங்கு நாட்டுக் கருவூரே சங்க காலத்து வஞ்சி என்று சிலர் கூறுவராயினர். வஞ்சி குடமலை நாட்டில் உள்ளது. கருவூர் கொங்கு நாட்டில் உள்ளது. வஞ்சி தண் பொருநையாற்றங்கரையில் உள்ளது. கருவூர் ஆன் பொருநையாற்றங்கரையில் உள்ளது. வஞ்சி கடற்கரைப்பட்டினம். கருவூர் உள்நாட்டிலுள்ளதோர் ஊர். எனவே, கருவூர் சங்க காலத்து வஞ்சி எனல் பொருந்தாது'[32] என்பது அவர் கருத்து.

எனவே சேரநாட்டுத் தலைநகராயிருந்த வஞ்சி சேரநாட்டில் இருந்தது என்பது உறுதிப்படும்.

சேரநாட்டிற்குக் குடமலை வஞ்சி மட்டுமின்றிக் கொங்குநாட்டுக் கருவூரும் தலைநகராய் இருந்தமை ஆராய்தற்குரியது. சேர மரபினருள் மூத்த வழியினர் என்றும் இளைய பிரிவினர் என்றும் இரு பிரிவினர் இருந்தனர். மூத்த வழியினர் உதியன் என்ற குடும்பத்தைச் சார்ந்தவர் என்றும் இளைய வழியினர் இரும்பொறை என்ற குடும்பத்தைச் சார்ந்தவர் என்றும் கூறுவர். இவ்விளைய வழியினர், கருவூரைத் தலைநகரமாகக் கொண்டு கொங்குநாட்டை ஆட்சி செய்துள்ளனர்.

இதனைப் புகழூர் அருகே ஆறுநாட்டார் மலையிலுள்ள கல்வெட்டு உணர்த்தும்.

*மூதா அமணன் யாற்றூர் செங்காயபன் உறைய்*
*கோ ஆதன் செல்லிரும் பொறை மகன்*
*பெருங் கடுங்கோன்மகன் இளங்*
*கடுங்கோ இளங்கோ ஆக அறுத்த கல்.*

இக்கல்வெட்டில் குறிப்பிடப்பெற்றுள்ள மூன்று சேர அரசர்களும் பதிற்றுப்பத்தின் 7, 8, 9 ஆம் பத்துக்களின் பாட்டுடைத்தலைவர்களான செல்வக்கடுங்கோ வாழியாதன், தகடூர்எறிந்த பெருஞ் சேரலிரும்பொறை, குடக்கோ இளஞ்சேரலிரும்பொறை ஆகிய மூவரும்தாம் என்பது ஆய்வளர்கள் எல்லோரும் ஏற்றுக்கொண்ட கருத்தாகும். இவர்களின் தலைநகராகிய கொங்கு நாட்டுக் கருவூரும் இங்குள்ள ஒரு கல்வெட்டில் குறிக்கப்பெறுகின்றது.[33]

எனவே, ஒரு காலத்தில் சேரமன்னர்களுக்கு இரண்டு தலை நகரங்கள் இருந்தன என்பது தெளிவாகிறது. சேரமரபினருள் உதியன் மரபினர் வஞ்சியினையும், இரும்பொறை மரபினர் தொண்டியினையும் தலைமையிடமாகக் கொண்டு அரசாண்டனர். கொங்குநாடு சேரநாட்டோடு சேர்ந்த பின்னர் இரும்பொறை மரபினர் கொங்குநாட்டுக் கருவூரைத் தலைநகரமாகக் கொண்டு அரசு புரிந்து வந்துள்ளனர் என்பது புலனாகிறது.

ஔவைக சு. துரைசாமிப்பிள்ளை கருவூருக்கு வஞ்சியென்ற பெயர் இருந்துள்ளது என்று கூறுவார். அவர் தமது புறநானூறு உரையில், ‘சேரமான் கருவூரேறிய ஒள்வாட் கோப்பெருஞ் சேரலிரும்பொறை காலத்தே காவிரிக் கரையிலுள்ள கருவூர்க்கு வஞ்சியென்ற பெயரும், அமராவதியாற்றுக்கு ஆன்பொருநையென்ற பெயரும் உண்டாயின. கருவூர்க்கு உண்டான வஞ்சியென்னும் பெயர் இப்போது வழக்கு வீழ்ந்தொழிந்தது. இடைக்காலத்தும் கருவூர் வஞ்சி நகரமென வழங்கினமை, வீரசோழ மண்டலத்து வெங்கால நாட்டுக் கருவூரான வஞ்சி மாநகர் (A.R. No. 3358192) என்பதனால் அறியப்படும். தாராபுரமும் கொங்கு வஞ்சி (A.R. No. 14681920) எனப்படுவது கருவூரேறிய ஒள்வாட் கோப்பெருஞ் சேரலுக்கு முன்னொரு காலத்தில் உண்டாகியது’[34] என்று குறிப்பிடுகிறார்.

எனவே, வஞ்சி மாநகரம், சேரநாடெனும் இன்றைய கேரள நாட்டிலுள்ளதாகும். இவ்வஞ்சியே சேரநாட்டின் பழைய தலைநகரம், கொங்குநாடு, சேரநாட்டின் ஆளுகைக்கு வந்தபிறகு கொங்கு நாட்டுக் கருவூரும் தலைநகரமாய் இருந்துள்ளது. கொங்கு நாட்டுக் கருவூர்தான் சேரநாட்டின் தலைநகரம் என்று கூறுவது பொருந்தாது. வஞ்சி மாநகருக்குக் கருவூர் என்ற பெயரும், கருவூர்க்கு வஞ்சியென்ற பெயரும் வழங்கப்பட்டுள்ளன. சோழ நாட்டின் தலைநகரங்களாகப் புகாரும் உறையூரும், பாண்டிய நாட்டின் தலைநகரங்களாக மதுரையும் கொற்கையும் இருந்தமைபோலவே, ஒரு காலத்தில் சேரநாட்டின் தலைநகரங்களாக வஞ்சியும் கருவூரும் இருந்துள்ளன என்று கூறுவது மிகவும் பொருத்தமுடையது.

## சங்க இலக்கியங்களில் வஞ்சி

சிறுபாணாற்றுப்படையில்,

*வடபுல இமயத்து, வாங்குவில் பொறித்த*
*எழுவுறத், திணிதோள், இயல் தேர்க்குட்டுவன்*
*வருபுனல் வாயில் வஞ்சியும் வறிதே* (சிறுபாண். 48-50)

என்றும் அகநானூற்றில்,

*தொன்று முதிர்வடவரை வணங்கு வில்பொறித்து*

*வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்*

*வஞ்சி அன்ன, என் நலம் தந்து சென்மே* (அகம். 396:17-19)

என்றும் வஞ்சிப்பற்றிய குறிப்புகள் தரப்பெற்றுள்ளன. தலைவியின் சிறப்பைக் குறிப்பிடும் அகநானூற்றுப் பாடலில் பெரும் புகழை உடைய வஞ்சி நகரத்தைப் போன்றவள் தலைவி என்று வஞ்சிமாநகரம் பெண்ணுக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

ஐங்குறுநூற்றில்,

*துணையோர் செல்வமும் யாமும் வருந்ததும்*

*வஞ்சி ஓங்கிய யாணர் ஊரே* (ஐங். 50:1-2)

என வஞ்சி மாநகரம் நாளும் புதுவருவாயை உடைய ஊர் என்று கூறப்பட்டுள்ளது. மேலும்,

*ஏழுஉ றழ் திணிதோள், இயல்தேர்க் குட்டுவன்*

*வருபுனல் வாயில் வஞ்சியும் வறிதே* (சிறுபாண். 49-50)

என்று சிறுபாணாற்றுப்படையும்,

*வஞ்சி மூதூர்த் தந்து, பிறர்க்கு உதவி*

*மந்திர மரபின் தெய்வம் பேணி* (பதிற்று. 9பதி. 9-10)

என்று பதிற்றுப்பத்தும் பதிவுச்செய்கின்றன.

**வாகை**

மரப்பெயர்கள் போன்ற தாவரங்களின் பெயரால் ஊர்கள் பெயர்பெறும் முறையையொட்டி வாகை என்று ஒருவகை மரத்தின் பெயர் ஓர் ஊருக்குப்பெயராய் அமைந்துள்ளது. தனிமரங்களின் பெயர்களையே தம் பெயர்களாகக் கொண்ட ஊர்ப்பெயர்களில் வாகை என்ற ஊர்ப்பெயர் ஒன்று.

சங்க இலக்கியப் பாடல்களில் குறிக்கப்பெறும் வாகையெனும் ஊர், சேரநாட்டின் ஒரு பகுதியாகிய துளுநாட்டில் உள்ள வாகைப்பறந்தலை என்று பெயர் பெற்றிருந்த ஊரினைக் குறிக்கும். இவ்வூரில் பசும்பூட் பாண்டியனுடைய சேனைத்தலைவனான அதிகமான் என்பவன் போர் செய்து இறந்தான். இதனை,

*கூகைக் கோழி வாகைப் பறந்தலைப்*
*பசும்பூட் பாண்டியின் வினைவல் அதிகன்*
*களிறொடு பட்ட ஞான்றை* (குறுந். 393:3-5)

என்று குறுந்தொகையின் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் இவ்வூரில் போர் செய்துள்ளான். இதனை,

*குடா அது*
*இரும்பொன் வாகைப்பெருந்துறைச் செருவிற்*
*பொலம்பூண் நன்னன் பொருது களத்தொழிய*
*வலம்படு கொற்றந்தந்த வாய்வாட்*
*களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்* (அகம். 199:18-22)

என்று அகநானூறு குறிப்பிடுகின்றது. மேலும்,

*வாகைவெண் நெற்று ஒலிக்கும்*
*வேய்பயில் அழுவம் முன்னி யோரே* (குறுந். 7:5-6)

என்று குறுந்தொகையிலும்,

*நெடுவரை அடுக்கத்து வேய், போன்றனவே;*
*வாகை ஒண்பூப் புரையும் முச்சிய* (பரி. 14:6-7)

என்று பரிபாடலிலும்,

*கடல் கண்டன்ன கண்அகன் தானை*
*வென்று ஏறி முரசின் வேந்தர் என்றும்*
*வண்கை எயினன் வாகை அன்ன* (புறம். 351:4-6)

என்று புறநானூற்றிலும் வாகை என்ற ஊர் சுட்டப்பட்டுள்ளது.

### விரியூர்

விரி என்றால் காட்டுப்புன்னை என்ற ஒருவகை மரத்தைக் குறிக்கும். அவ்வகை மரங்கள் வளர்ந்த பகுதியில் அமைந்த ஊர் விரியூர் எனப் பெற்றுள்ளது. புறநானூற்றின் 332-ஆவது பாடலைப் பாடிய நக்கனார் என்ற சங்கப்புலவர் இவ்வூரினைச் சேர்ந்தவர் என்பதால் இவர் விரியூர் நக்கனார் எனப்பெயர் பெற்றார்.

விழுப்புரம் மாவட்டத்தில் கள்ளக்குறிச்சிக்கு அருகாமையில் விரியூர் என்ற ஊர் உள்ளது. ஆனால் இவ்வூர் தொன்மையான ஊர் இல்லை. சங்க இலக்கியப் புலவரால் அறியப்படும் விரியூர் தற்போது கேரளாவில் உள்ளது. கேரளத்தில் வள்ளுவநாடு என்ற வட்டத்தில் தற்போதும் விரியூர் உள்ளது.

### சேரநாட்டுப் புலவர்கள்

1. அல்லங்கீரனார் - நற் 245
2. கருவூர்க் கலிங்கத்தார் - அகம் - 183
3. கருவூர்க் கண்ணம்பாளனார் - அகம். 19\80, 263, நற். 148
4. கருவூர்க்கதப்பிள்ளைச் சாத்தனார் - அகம். 309, நற். 343, புறம். 168
5. கருவூர்க் கிழார் - குறு. 170
6. கருவூர்க் கோசனார் - நற் - 214
7. கருவூர்ச்சேரமான் சாத்தன் - குறு - 268
8. கருவூர் நன்மார்பனார் - அகம் - 277
9. கருவூர்ப் பவுத்திரனார் - குறு. 162
10. கருவூர்ப் பூதஞ்சாத்தனார் - அகம். 50
11. கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூதநாதனார் - புறம். 219
12. குட்டுவன் கண்ணனார் - குறு. 170
13. குட்டுவன் கீரனார் - புறம். 240
14. கூடலூர்க் கிழார் - குறு. 166, 167, 214, புறம். 229
15. கூடலூர்ப் பல்கண்ணனார் - நற். 200
16. கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை - அகம் 168.
17. சேரமானெந்தை - குறு. 22

18. சேரமான் இளங்குட்டுவன் - அகம். 153

19. சேரமான் கணைக்காலிரும்பொறை - புறம் 74

20. சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மா கோதை - புறம் 245

21. பாலைபாடிய பெருங்கடுங்கோ - அகம். 5, 99, 111, 155, 185, 223, 261, 267, 291, 313, 337, 379, கலி பாலைக்கலி, 1 முதல் 35 வரை, குறு. 16, 37, 124, 135, 137, 209, 231, 262, 283, 398, நற். 9, 48, 118, 202, 224, 256, 318, 337, 384, 391, புறம். 282

22. பொய்கையார் - நற். 18, புறம். 48, 19

23. மருதம் பாடிய இளங்கடுங்கோ - அகம். 96, 176, நற். 50

24. முடங்கிக் கிடந்த நெடுஞ்சேரலாதன் - அகம். 30

சேரர் சொல்லும் பொருளும், சேரநாட்டின் சங்ககால எல்லை, தற்போதைய எல்லை, சேரநாட்டின் மூலம் அறியப்பெறும் அந்தியூர், ஈர்ந்தை, உம்பற்காடு, ஒகந்தூர், கட்டிநாடு, கண்டீரம், கருவூர், காரியாறு, குடநாடு, குன்னூர், கொங்குநாடு, கொடுகூர், கொடுமணம், செல்லூர், சென்னிமலை, தகடூர், துளுநாடு, துவரை, தொண்டி, நறவு, நளிமலை, பாமுளூர், பாரம், புன்னாடு, பாழி, பூழிநாடு, பெருந்தலையூர், பேரூர், மாந்தை, முசிறி, முதிரம், வஞ்சி, வாகை, விரியூர் போன்ற ஊர்களின் இன்றைய நிலை, சேரநாட்டுப்புலவர்கள் போன்றவை இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளன.

சேர நாட்டில் கருரே வஞ்சி என்று ஆய்வாளர்களால் இதுகாறும் கூறப்பட்டு வந்த நிலையில் இவ்வாய்வில் கரூர் வஞ்சி தனித்தனி நகரங்களாக சேர நாட்டில் விளங்கியது என்பதை இவ்வாய்வில் விளக்கப்பட்டுள்ளது.

## அடிக்குறிப்புகள்

1. வேங்கடசாமி, மயிலை சீனி. சேரர்., ப. 60

2. மேலது, பக். 61

3. Inscription of Sri vira Rajendra (Rajakesari varman)

4. சென்னியப்பன், இரா., பெரியார் மாவட்டம் ஊரும் பேரும், ப. 142

5. முத்துசாமி மோகனார், கொங்குநாடு, ப. 215

6. சென்னியப்பன், இரா., சங்ககால ஈங்கூர், கொங்குமலர், ப. 17.

7. பதிற்று. இரண்டாம் பத்துப்பதிகம் அடிக்குறிப்பு

8. பதிற்று. ஐந்தாம் பத்துப்பதிகம் அடிக்குறிப்பு

9. வேங்கடசாமி, மயிலை சீனி, கொங்குநாடும் துளுநாடும், ப-57

10. மேலது. பழ 57

11. மேலது, ப. 56

12. புறம். 47

13. Samy, P.L., Nannan of North malabar, Tamil civilization (Quarterly Research Journal of the Tamil University Thanjavur) Vol. 1. No. 1.

14. ஆளவந்தார், ஆர்., இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் தொகுதி - ஒன்று, ப. 117

15. ஜெயக்குமார், பா., தமிழகத்துறை முகங்கள் (இடைக்காலம்) ப- 49

16. வேங்கடசாமி, மயிலை சீனி, மு. கு.நூ., ப. 252

17. மேலது, ப. 253

18. மேலது, ப. 22

19. சாமி, பி.எல். சங்க்காலத்துறைமுகங்கள் - வரலாற்று சுடர்கள், ப. 22

20. வேங்கடசாமி, மயிலை சீனி. மு. கு.நூ., ப.68

21. Rice, Z., Mysore and coorg from irscription, p-10.

22. Lewies Rice, B. Mysore and coory from Inscription, p.99

23. Sesha Aiyar, K.G., cera kings of sangam period, p.33

24. துர்காதேவி, சங்கத்தமிழக நகரங்கள், ப. 46

25. சிதம்பரனர், அ., சேரர் வரலாறு, ப. 265

26. ஜெயக்குமார், ப. தமிழகத்துறைமுகங்கள், ப. 47-48

27. பிள்ளை கே.கே., தமிழக வரலாறும் மக்களும் பண்பாடும், ப.53

28. இளங்குமரன், இரா. தென்னாட்டு வணிகம், ப. 41

29. Manorma Year book, 1973, p. 367

30. சேதுப்பிள்ளை, ரா. பி. ஊரும் பேரும், ப. 130

31. வேங்கடசாமி, மயிலை சீனி, சேரன் செங்குட்டுவன், ப. 126

32. சதாசிவம் பண்டாரத்தார், டி.வி. புறநானூற்றுச் சொற்பொழிவுகள், ப. 130

33. இராசு, செ. ஐந்தாவது உலகத்தமிழ் மாநாட்டு விழா மலர், ப. 395

34. புறம்-373, ஔவை உரை, ப. 865 (கழக வெளியீடு)

பண்டைப் பழங்காலத்திலிருந்தே வளமான வரலாறு கொண்டது தமிழகம். கிறித்துப் பிறப்பதற்கு முன்னரே கடல்கடந்த வாணிபத்தில் அடைந்திட்ட உன்னத நிலையைச் சங்க இலக்கியங்கள் பறைசாற்றுகின்றன. யவனர்களோடும் கீழை நாடுகளோடும் கொண்டிருந்த நெருங்கிய தொடர்புகளுக்குச் சான்றுகள் பல உள்ளன. இத்தகு சிறப்புடைய வரலாற்றில், சோழர்களின் ஆட்சி ஒரு பொற்காலமாகத் தமிழகத்தில் திகழ்ந்தது.

சோழர் பழந்தமிழ்நாட்டை ஆண்ட மூவேந்தர்களுள் ஒரு குலத்தவர். மற்ற இரு குலங்கள் சேரர்களும் பாண்டியர்களும் ஆவர். தமிழகத்தின் கிழக்குப் பகுதியில் அமைந்த நாடாகச் சோழநாடு விளங்கியது. சங்க காலத்தில் சோழநாடு 'குணபுலம்' என்று வழங்கப்பட்டது.

*தண்பனை தழீஇய தளரா இருக்கை*
*குணபுலம் காவலர் மருமான் ஒன்னார்* (சிறுபாண். 78-79)

சோழர் என்னும் பெயர் எவ்வாறு வழங்கத்தொடங்கியது என்பது தெரியவில்லை. 'சேரர், பாண்டியர் என்ற பெயர்களைப் போன்று சோழர் என்பது பண்டைக்காலந் தொட்டே ஆட்சி செய்து வரும் குடும்பம் அல்லது குலத்தின் பெயராகும் என்று பரிமேலழகரால் கருதப்பட்டது. சோழ அரச மரபின் மன்னர்களது ஆட்சியின் கீழ் இருந்த பகுதிகளும், மக்களும் பண்டைக்காலம் முதலே இப்பெயராலேயே குறிப்பிடப்பட்டு வந்துள்ளனர்.'[1] சோழர் குலம் வளம்பொருந்திய காவிரி ஆற்றுப்படுக்கைப் பகுதியிலேயே தோற்றம் பெற்றது.

சோழநாடு வயல்களும் சோலைகளும் மிகுந்த வளமான நாடாகும். காவிரியாற்றினால் சோழநாடு நீர்வளம் பெற்றது. காவரியின் பெருமையைச் சங்க இலக்கியங்களும் மற்றும் சிலப்பதிகாரமும் மிகுதியாகவே புகழ்ந்து பாடியுள்ளன.

## நிலப்பரப்பு

சோழநாடு 'வடவெள்ளாற்றுக்கும் தென் வெள்ளாற்றுக்கும் இடையேயும் கிழக்கில் கடலுக்கும் மேற்கே கோட்டைக்கரைக்கும் இடையேயும் உள்ள நிலப்பரப்பாகும்'[2]

என்பது மரபு. இப்பகுதியில் இன்றைய திருச்சிராப்பள்ளி தஞ்சாவூர், நாகப்பட்டினம், திருவாரூர், பெரம்பலூர், புதுக்கோட்டை போன்ற மாவட்டங்கள் தற்போது அடங்கியுள்ளன. காவிரியும், கொள்ளிடம் உட்பட்ட அதன் கிளை ஆறுகளும் வளப்படுத்தும் சோழநாடு, கடலை நோக்கிச் சிறிது தாழ்ந்து இருந்தாலும் ஒரே சமநிலையாக உள்ளது. தஞ்சையின் தெற்கு, தென்மேற்குப் பகுதியிலுள்ள வல்லம் என்ற தாழ்ந்த பீடபூமியில் சில மணல், மணற்கற்களால் ஆன சிறு முகடுகளும், மலைக்கோட்டையில் காணப்படும் பளிங்குக் கற்களைப் போன்று சில கற்குன்றுகளையும் தவிர இப்பகுதி ஒரே சமமான நிலமாகவே உள்ளது.

சோழநாட்டின் எல்லைப்புறத்திலுள்ள திருச்சிராப்பள்ளி மாவட்டத்தின் வடபகுதிகளிலேயே முக்கிய மலைகள் காணப்படுகின்றன. கடலையொட்டிய சிறு பகுதிகளில் காணப்படும் முகடுகளையும், மணற் குன்றுகளையும் தவிர இந்தக் கழிமுகப்பகுதி இயற்கையில் மேடுகளற்ற ஒரு பரந்த வண்டல்மண் படிந்த சமவெளியாகவே உள்ளது.

'பாறைகளற்ற மணற்பரப்பான கரையையே கடல் மோதுகிறது. இதனாலேயே கடற்கரைப்பகுதி வியக்கத்தக்க மாற்றம் அடையாத தன்மையைப் பெற்றுள்ளது. நெல்விளையும் ஒரே சமநிலமாகக் காணப்படும் காவிரி கழிமுகப்பகுதியில் ஆங்காங்கு தென்னை, மா போன்ற பழமரங்கள் ஓங்கி வளர்ந்திருப்பதைக் காண்கிறோம். காடுகளோ, உயர்ந்து வளரும் மரங்களுடைய வனங்களோ இப்பகுதியில் காணப்படவில்லை. இந்நிலம் மூங்கிலும் வாழையும் பயிரிட ஏற்றதாயுள்ளது.'[3] இவ்வாறு தொன்மை வாய்ந்த நிலப்பரப்பையும் ஆட்சித் தன்மையையும் பெற்ற சோழநாட்டின் சிறப்புநிலையைச் சங்க இலக்கியம் மிகுதியாகவே பதிவுச் செய்திருக்கின்றது.

*அகல்நகர் வியல்முற்றத்து*

*சுடர்நுதல் மடநோக்கின்*

*நேரிழை மகளிர் உணங்குஉணாக் கவரும்*

*கோழி எறிந்த கொடுங்கால் கனங்குழை*

*பொற்கால் புதல்வர் புரவிஇன்று உருட்டும்*

*முக்கால் சிறுதேர் முன்வழி விலக்கும்*

*விலங்குபகை அல்லது கலங்குபகை அறியாக்*

*கொழும்பல்குடிச் செழும்பாக்கத்துக்*

*குறும்பல்லூர் நெடுஞ்சோணாட்டு* (பட். 20-28)

சங்க இலக்கியப் பாடல்களில் சோழநாட்டின் செல்வவளம், சோழநாட்டு ஊர்களின் சிறப்பு, கடற்கரையின் சிறப்பு போன்றவையும் பதிவுசெய்யப்பட்டுள்ளது. மேலும் சோழநாட்டை 'சோணாடு' என்று பட்டினப்பாலை குறிப்பிட்டுள்ளது. இவ்வாறு சங்க இலக்கியப் பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ள வளம் பொருந்திய சோழ நாட்டின் ஊர்களை விளக்கம் காணும் முறையில் இவ்வியல் அமைகின்றது.

**அம்பர்**

'அம்பர்' என்ற பெயரில் தமிழ்நாட்டில் மூன்று ஊர்ப்பெயர்கள் உள்ளன. அவை, 1. அம்பர், 2. அம்பர் மாகாளம், 3. இன்னம்பர் என்பன. இம்மூன்று ஊர்களும் தஞ்சை மாவட்டத்தில் உள்ளன.

தஞ்சாவூர் மாவட்டத்தில் அமைந்த மூன்று ஊர்களில் சங்க இலக்கியம் சுட்டும் அம்பர் என்னும் ஊரே பழமையானது. இவ்வூரின் தொடர்ச்சியால்தான் பின் வந்த இரண்டு ஊர்களும் பெயர்பெற்றுள்ளன. சோழநாட்டின் தொன்மையான ஊர்களில் அம்பர் மிகவும் பெயர் பெற்ற, பாடல்பெற்ற தேவாரத்திருதலமாக அமைந்துள்ளதை இங்குக் கிடைத்த கல்வெட்டு (S.I.I. Vol.XII. No. 176) சான்று பகர்கின்றது.

அம்பர் என்னும் ஊர் அருவந்தை என்ற வள்ளலுக்கு உரியதாக இருந்தது என்பதை, அம்பர்கிழான் அருவந்தையைக் கல்லாடனார் பாடிய புறனூற்றுப் பாடலால் அறிய முடிகின்றது.

*காவிரி அணையும் தாழ்நீர்ப் படப்பை*

*நெல்விளை கழனி அம்பர் கிழவோன்*

*நல்அருவந்தை வாழியர்* (புறம். 385:8-10)

புலவர் பெயர் ஊர்ப்பெயருடன் இணைத்துக் கூறப்பட்டதைப் போல வள்ளல் முதலியோரின் பெயரும் ஊர்ப்பெயருடன் இணைத்துக் கூறப்பட்ட மரபும் இருந்தது என்பதற்கு இதுவொரு சான்று.

சோழன் கிள்ளிக்குரிய அம்பரைச் சூழ்ந்து அரிசில் என்னும் ஆறு ஓடியதாக கூறும் சங்க இலக்கியப்பாடலும் அம்பர் என்ற ஊர் சோழ நாட்டினகத்ததே என்ற கருத்தை வலியுறுத்துகிறது.

*ஏந்து கோட்டு யானை இசைவெங்கிள்ளி*
*வம்புஅணி உயர்கொடி அம்பர் சூழ்ந்த*
*அரிசில் அம்தண் அறல்அன்ன இவள்*
*விரிஒலி கூந்தல் விட்டுஅமை கலனே* (நற். 141:9-12)

அம்பர் என்ற பெயருடன் மற்றும் ஓர் ஊர் ஜெய்ப்பூர் அரசின் தலைநகராக இருந்துள்ளது. இவ்வூர் சங்க இலக்கியங்களில் குறிக்கப்பெற்ற அம்பர் இல்லை.

**அரிசில்**

அரிசில் என்ற ஊர்ப்பெயர் இவ்வூரைச் சேர்ந்த புலவர் பெயருடன் இணைத்துக் கூறப்பட்ட நிலையில் சங்க இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளது.

நற்றிணை 141-ஆம் பாடலில் கூறப்படும் கருத்துச் சோழன் கிள்ளியின் ஊராக அரிசிலைக்காட்டுகிறது. அரிசில் என்பது சோழநாட்டு ஆறு என்பதும் தெரிகிறது. எனவே அரிசில் என்ற ஊர் இன்றைய தஞ்சாவூர் மாவட்டம் கும்பகோணத்திற்கு அருகில் அரிசிற்கரைபுத்துராக மருவி உள்ளது.

இந்த ஊரைச்சார்ந்த அரிசில்கிழார் பாடியனவாகக் குறுந்தொகை 193-ம் பாடலும், பதிற்றுப்பத்தின் எட்டாம் பத்தும், புறநானூற்றில் 146, 230, 281, 285, 300, 304, 342 ஆகிய பாடல்களும் கிடைக்கின்றன.

சங்க காலத்தில் அரிசில் என்று குறிப்பிடப்பட்ட ஆற்றுப்பெயரே ஊரப்பெயராக வழங்கிய நிலையில், பின்னர், கரையும், புத்தூரும் இணைந்ததாக ஊர்ப்பெயர் மருவியுள்ளது.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவராலும் பாடப்பெற்ற தேவாரத்திருதலமாகவும் அரிசிற்கரைப்புத்தூர் விளங்குகின்றது.

## அழுந்தூர்

சங்க இலக்கியத்தில் சுட்டப்பெறும் அழுந்தை, அழுந்தூர் என்னும் இவ்வூர், தஞ்சாவூர் மாவட்டத்தில், மயிலாடுதுறைக்குத் தென் கிழக்கில் 'தேரழுந்தூர்' என்று மருவி உள்ளது.

'அகத்திய முனிவர் கீழே இறைவனை வழிபட்டு இருந்ததை உணராது ஊர்த்துவரதன் என்னும் அரசன் ஆகாயத்தில் செலுத்திய தேர் செல்லாது அழுந்தியதால் பெற்ற பெயர் அழுந்தூர் என்று இப்பெயராக்கத்திற்கு ஒரு புராணக் கதைக் காரணமாக அமைகிறது.'[4]

'கல்வெட்டில் இவ்வூர் செயங்கொண்ட சோழநாட்டுத்திரைமூர்நாட்டு திரு அழுந்தூர்'[5] எனக் குறிப்பிடப்படுதலைக் காண்கிறோம். எனவே முதலில் அழுந்தூர் எனவும் அழுந்தை எனவும் குறிக்கப்பட்ட இவ்வூர், பின்னர் இங்குள்ள கோயில், சிறப்புப் பெற்ற பின்னர்த் திருஅழுந்தூர் என்றாகிப் புராணக் கதையின் செல்வாக்குக் காரணமாக, 'தேரழுந்தூர்' எனப் பெயர் பெற்றிருக்கிறது. சங்க இலக்கியமும் இத்தேரழுந்தூரைத்தான், அழுந்தை, அழுந்தூர் எனச் சுட்டுகின்றது.

*கடுந்தேர்த் திதியன் அழுந்தை கொடுங்குழை*
*அன்னி மி ஞிலியின் இயலும்*
*நின் நலத்தருவியை முயங்கிய மார்பே* (அகம். 196:11-13)

*பதினொரு வேளிரொடு வேந்தர்சாய*
*மால்வலி அறுத்த ஞான்றை*
*தொய்யா அழுந்தூர் ஆர்ப்பினும் பெரிதே* (அகம். 246:12-14)

## அழும்பில்

மதுரைக்காஞ்சி, அகநானூறு, புறநானூறு, சிலப்பதிகாரம் ஆகிய இலக்கியங்களில் அழும்பில் என்ற ஊர்ப்பெயர்கள் குறிக்கப்பெற்றுள்ளது.

மானவிறல்வேள் என்ற குறுநில மன்னனுக்குரியது அழும்பில் என்று மதுரைக் காஞ்சி கூறுகிறது.

*விளங்கு பெருந்திருவின் மானவிறல்வேள்*

*அழும்பில் அன்ன நாடிழந் தனரும்* (மதுரைக். 344-345)

அழும்பில் ஒழியாத புது வருவாயினையுடையது என்றும், சென்னிக்குரியது என்றும் அகநானூறு கூறுகிறது.

*பிணையலங் கண்ணி பெரும்பூட் சென்னி*

*அழும்பில் அன்ன அறாஅ யாணர்* (அகம். 44:14-15)

மேலும், புறநானூறு, சிலப்பதிகாரம் முறையே,

*மாறுகொள் முதலையொடு ஊழ்மாறு பெயரும்*

*அழும்பிலின் அடங்கான் தகையும் என்றும்* (புறம். 283:5-6)

*அறைபறை யென்றே யழும்பில் வேளுரைப்ப* (சிலப். 25:177)

என்று குறிப்பிடுகின்றன.

புதுக்கோட்டை மாவட்டத்தில் ஆலங்குடி வட்டத்தில் ‘அம்புக்கோயில்’ என்று தற்போது அழும்பில் மருவி வழங்கப்படுகிறது. இவ்வூரில் உள்ள சிவன் கோயில் ‘அழும்பிற் கோயில்’ என வழங்கப்படுவதால், நாளடைவில் அழும்பில் என்ற சங்ககால ஊர் அம்புக்கோயில் என மருவி வழங்கப்படுவதற்குக் காரணமாக அமைகின்றது.

## ஆடுதுறை

ஆடுதுறை என்ற ஊர்பெயர் மாசாத்தனார் என்ற சங்ககாலப்புலவர் பெயரோடு சேர்த்துக் கூறப்பட்டுள்ளது. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை, அவன் இறந்தபொழுது வருந்தி ஆடுதுறை மாசாத்தனார் (புறம். 227) பாடியுள்ளார்.

ஆறுகளில் மக்கள் இறங்கி நீராடுதற்கேற்ற இடங்கள் துறை எனப்படும். தமிழ் நாட்டில் ஆற்றை அடுத்துள்ள ஊர்கள் துறை என்னும் பெயரைத் தாங்கி நிற்கக் காணலாம். அதுபோல ஆடுதுறையும் ஆற்றையடுத்துள்ள ஊராகும். ஆடுதுறை தஞ்சை மாவட்டத்தில் அமைந்துள்ளது.

## ஆலங்கானம்

ஆலங்கானம் என்ற இவ்வூர்ப்பெயர் மதுரைக்காஞ்சி, அகநானூறு, புறநானூறு ஆகிய இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளது. ஆலங்கானம் என்றும் தலையாலங்கானம் என்றும் குறிக்கப்பெற்றுள்ளது.

ஊர்களின் அமைப்பு கருதி தலை, இடை, கடை என்ற முன் ஒட்டுகளில் ஒன்று ஊர்ப்பெயரோடு இணைந்துக் கூறும் முறையையொட்டி ஆலங்கானம் என்ற ஊர்ப்பெயர்களோடு தலை என்ற அடையுடன் தலையாலங்கானம் என வழங்கப்பெற்றுள்ளது.

சங்க இலக்கியங்களில் குறிக்கப்பெற்ற ஆலங்கானம் அல்லது தலையாலங்கானம், பாண்டியன் நெடுஞ்செழியன் தன்னை இளையன் என எண்ணி இகழ்ந்து தன் மீது படையெடுத்த சேர, சோழர், வேளி ஐவர் ஆக எழுவரைப் பொருது வென்ற இடம் ஆகும். இப்போரில் சேர சோழர்கள் கொல்லப்பட்டனர் என்றும் தெரிகிறது. பெற்ற வெற்றியின் காரணமாகத் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் எனப்பட்டான் (அகம். 36, 116, 175, 209; புறம். 371, 372)

'பராந்தக வீர நாராயணனின் தளவாய்புரச் செப்பேட்டில் 'ஆலங்கானம்' என்றே குறிக்கப்பெற்றிருப்பதால் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டிலும் சங்ககாலப் பெயர் எவ்வித மாறுபாடுமின்றி வழங்கியதாகத் தெரிகிறது'.[6]

பெருங்கதையிலும் ஆலங்கானம் என்றும் ஊரப்பெயர் இடம்பெற்றுள்ளது. ஆனால் இது சங்க இலக்கியங்களில் குறிக்கப்பெறும் தமிழ்நாட்டு ஆலங்கானம் அன்று. பெருங்கதையில் இரண்டு இடங்கள் குறிக்கப்பெற்றுள்ளன. ஒன்று விபுலகிரியின் பக்கத்தில் மிருகாவதியின் தந்தை தவஞ்செய்து கொண்டிருந்த இடம் மற்றொன்று பூக்கொய்வதற்கு வந்த பத்திராபதி என்னும் தெய்வமகள் யானையின் சேர்க்கையைக் கண்டு மனம் வேறுபட்டுப் பெண் யானையாகப் பிறக்கும்படி குபேரனால் சாபம் பெற்ற இடம். இது விந்திய மலையின் பக்கத்தில் நருமதையாற்றங் கரையிலுள்ளது.

*விபுலமென்னும் வியன்பெருங் குன்றத்து*

*அருவரை யருகர் ஆய்நலங் கவினிய*

*ஆலங்கானத்து அணியொடு பொலிந்த*

*ஞாலங் காவல் நஞ்சென நீங்கி* (பெருங். இலாவாண. அவலந். 55-58)

*மெல்லியல் தன்னை வேந்தன்விடுக்க அப்*

*பணியொடு சென்று பனிமலர் பொதுளிய*

*ஆலங்கானத்து ஆற்றலன் மருங்கின்* (பெருங். நரவாண. இயக்கன். 62-65)

சங்க இலக்கியத்தில் குறிக்கப்பெறும் ஆலங்கானம் அல்லது தலையாலங்கானம் தற்போது ஆலங்காடு என மருவி, தஞ்சாவூர் மாவட்டம், திருத்துறைப்பூண்டி வட்டத்தில் உள்ளது. சங்க இலக்கியப் பாடல்கள் இவ்வூரை பின்வருமாறு பதிவுசெய்கின்றன.

*காலென்னக் கடிதுராய்*

*நாடுகெட எரி பரப்பி*

*ஆலங்கானத்து அஞ்சுவர இறுத்து* (மதுரைக். 125-127)

என மதுரைக் காஞ்சியிலும்,

*ஆலங்கானத்து அஞ்சுவர இறுத்த*

*வேல் கெழுதானைச் செழியன் பாசறை*

*உறைகழி வாளின் மின்னி* (நற். 384:7-9)

என்று நற்றிணையிலும்,

*கொய் சுவல் புரவிக் கொடித்தேர்ச் செழியன்*

*ஆலங்கானத்து அகன்தலை சிவப்ப* (அகம். 36:13-14)

*கால் இயல் நெடுந்தேர்க் கைவண் செழியன்*

*ஆலங்கானத்து அமர் கடந்து உயர்ந்த*

*வேலினும் பல்ஊழ் மின்னி* (அகம். 175:10-12)

*எழுவுறும் திணிதோள் இயல்தேர்ச் செழியன்*

*நேரா எழுவர் அடிப்படக் கிடந்த*

*ஆலங்கானத்து ஆர்ப்பினும் பெரிதே* (அகம். 209:4-6)

இவ்வாறு அகநானூற்றிலும்

*இமிழ் கடல் வளைஇய ஈண்டு அகன் கிடக்கை*

*தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து*

*மன்உயிர்ப் பன்மையும் கூற்றத்து ஒருமையும்*

*நின்னொடு தூக்கிய வென்வேற் செழிய* (புறம். 19:1-4)

*ஞாலம் நெளிய ஈண்டிய வியன்படை*

*ஆலங்கானத்து அமர்கடந்து அட்ட* (புறம். 23:15-16)

இவ்வாறு புறநானூற்றிலும் ஆலங்காடு எனும் ஊர்ப்பெயர் குறிக்கப்பெற்றுள்ளது.

**ஆலங்குடி**

வங்கனார் என்ற சங்கப்புலவர் பெயருடன் இணைத்து ஆலங்குடி வங்கனார் என வழங்கப்பெற்றுள்ளதால் 'ஆலங்குடி' என்ற ஊர்ப்பெயரைக் காணமுடிகின்றது.

நற்றிணையில் 230, 330, 400 ஆகிய பாடல்களும், குறுந்தொகையில் 8, 45 ஆகிய பாடல்களும், அகநானூற்றில் 306-ஆம் பாடலும் புறநானூற்றில் 319-ஆம் பாடலும் ஆலங்குடி வங்கனார் பாடியவை ஆகும்.

ஆலங்குடி என்ற ஊர்ப்பெயர் திருவாரூர் மாவட்டத்தில் இரண்டு உள்ளன. ஆனால் சங்க இலக்கியம் குறிப்பிடும் ஆலங்குடி தஞ்சாவூர் மாவட்டம் கும்பகோணத்திற்கு அருகில் உள்ளது. இவ்வூரில் கிடைத்த பழையமான கல்வெட்டு (S.I.I. Vol.VI. No. 440) இவ்வூரின் தொன்மையைக் குறிப்பிடுகிறது. 'ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் ஆட்சிபுரிந்த முதலாம் இராசராசனின் கல்வெட்டிலும் 'ஆலங்குடி' என்ற ஊர்ப்பெயர் காணப்படுகிறது.[7]

### ஆலத்தூர்

ஆலத்தூர் கிழார் பாடியனவாக உள்ள சங்க இலக்கியப் பாடல்கள் மூலம் 'ஆலத்தூர்' என்ற ஊரப்பெயர் அறியமுடிகிறது.

குறுந்தொகையில் 112, 350 ஆகிய பாடல்களும், புறநானூற்றில் 34, 36, 69, 225, 324 ஆகிய பாடல்களும் ஆலத்தூர்கிழார் பாடியவையாகும். ஆலத்தூர் என்ற பெயருடன் ஒன்றிக்கு மேற்பட்ட ஊர்கள் தமிழ்நாட்டில் இருக்கிறது.

விழுப்புரம் மாவட்டம் மரக்காணம் அருகிலும், திருவண்ணாமலை மாவட்டம் வந்தவாசி அருகிலும், திருவாரூர் மாவட்டம் மன்னார்குடி வட்டத்திலும் என மூன்று ஆலத்தூர் இருப்பதாக அறிய முடிகின்றது.

ஆலத்தூர் கிழார் என்ற புலவரின் மூலம் அறியப்பெறும் 'ஆலத்தூர்' தற்போது திருவாரூர் மாவட்டம் நன்னிலம் வட்டத்தில் உள்ளது. இங்குக் கிடைத்துள்ள இரண்டு கல்வெட்டுகள் இவ்வூரின் தொன்மையைக் குறிப்பிடுகின்றது (S.I.I. Vol.VIII No. 241)

### ஆவூர்

'ஆ என்பது பசுவையும், ஆச்சாமரத்தையும் குறிக்கும் சொல். எனவே விலங்குப்பெயர் அல்லது மரப்பெயர் அடிப்படையில் தோன்றிய ஊராக வேண்டும்.'[8] சங்கப் புலவர்களின் பெயர்களோடு இணைத்துக் கூறப்படுவதால் நாம் அறியும் ஊர்ப்பெயர்களுள் ஆவூரும் ஒன்று.

கிழார், சூண்ணனார், காவிதிகள் சாதேவனார், மூலங்கிழார், மூலங்கிழார் மகனார் பெருந்தலைச்சாத்தனார் ஆகியோர் இவ்வூரைச் சேர்ந்த புலவர்கள்.

ஆவூர்க்கிழார் புறநானூற்றில் 222, பாடலும், ஆவூர்கிழார் மகனார் வெள்ளை கண்ணனார் அகநானூற்றில் 202-பாடலும், ஆவூர் காவிதிகள் சாதேவனார் அகநானூற்றில் 159, நற்றிணையில் 264 ஆகிய பாடல்களும், ஆவூர் மூலங்கிழார் அகநானூற்றில்24, 156, 341 ஆகிய பாடல்களும் புறநானூற்றில் 38, 40, 166, 177, 178, 196, 261, 301 ஆகிய பாடல்களும், மூலங்கிழார் மகனார் பெருந்தலைச் சாத்தனார் அகநானூற்றில் 13, 224, நற்றிணை 262, புறநானூற்றில் 151, 164, 165, 205, 209, 294 ஆகிய பாடல்களும் பாடியுள்ளனர்.

‘திருவண்ணாமலை மாவட்டம், செய்யாறு வட்டத்தில் உக்கல் என்னும் ஊரிலுள்ளது ‘இராசராசன் கிணறு’ என்னும் கிணறாகும். இக்கிணற்றின் வரலாற்றை அவ்வூரிலுள்ள கோயில் ஒன்றில் காணப்படும் ஒரு கல்வெட்டு விளக்குகிறது. அதன் ஒரு பகுதியில் இராசராசன் கிணற்றைத் தோண்டியன், ‘ஸ்ரீராஜராஜதேவர் பணி மகன் சோழ மண்டலத்துத் தென்கரை நாட்டு நித்த விநோத வளநாட்டு ஆவூர்க்கூற்றத்து ஆவூருடையான் கண்ணன் ஆரூரன்’ என்னும் குறிப்புக் காணப்படுவதாகச் சதாசிவப் பண்டாரத்தார் காட்டுகிறார்.

இந்த ஆவூர் குறித்து ஆய்வு செய்த பண்டாரத்தார், ‘ஆவூர்க்கூற்றத்து ஆவூர் என்பது தற்காலத்தில் தஞ்சை ஜில்லா பாவநாசந் தாலுக்காவில் உள்ளதும் சைவ சமயாச்சாரியார்களால் பாடப்பெற்ற சிறப்புடையதும் பசுபதீச்சரம் என்னும் திருக்கோயிலைத் தன்னகத்துக் கொண்டு விளங்குவதுமாகிய ஆவூரேயாகும். ஆவூர்க் கூற்றம் என்பது இவ்வூரைத் தலைநகராகக் கொண்டு இதனைச் சூழ்ந்திருந்த ஒரு சிறுநாடாகும். இரும்பு தலை, விளத்தூர் முதலான ஊர்கள் இக்கூற்றத்திலிருந்தன எனக் கல்வெட்டுக்கள் (மற்றும்) உணர்த்துகின்றன எனக் குறிப்பிடுகிறார்.[9]

பல்வேறு எல்லை மாற்றங்களுக்குப்பிறகு ஆவூர், தற்போது தஞ்சாவூர் மாவட்டம், கும்பகோணம் வட்டத்தில் உள்ளது.

பண்டைக்காலத்தில் இப்பகுதியில் பசு வளர்த்தல் முக்கியத்தொழிலாக இருந்தமையால் இவ்வூர் ஆவூர் என்று பெயர்பெற்றுள்ளது. இவ்வூர் பாடல் பெற்ற சிவத்தலங்களில் ஒன்று. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த சம்பந்தரால் சிறப்பித்துப் பாடப்பெற்றுள்ளது. இறைவன் திருநாமம் பசுபதீச்சுரம். இறைவன் திருநாமத்தால் இவ்வூர் இப்பெயர் பெற்றதாகவும் கூறுவர்.

### இடைக்காடு

இவ்வூரைச் சார்ந்தவரான ஒரு சங்கப்புலவர் இடைக்காடனார் எனப்பெற்றார். ஊர் அமைப்பு முறையில் ‘இடை’ என்னும் அடைமொழியுடன் அமைந்த ஊர்ப்பெயர் இடைக்காடு.

நற்றிணையில் 142, 221, 316 ஆகிய பாடல்களும், குறுந்தொகையில் 251-ஆம் பாடலும், அகநானூற்றில் 139, 194, 274, 284, 304, 374 ஆகிய பாடல்களும், புறநானூற்றில் 42-ஆம் பாடலும் இடைக்காடனார் பாடியவை ஆகும்.

தஞ்சாவூர் மாவட்டம், பட்டுக்கோட்டை வட்டத்தில் இடைக்காடு உள்ளது.

## உறந்தை

'ஊர் எனப்படுவது உறையூரே' எனப் பாராட்டுமளவிற்குப் புகழ்பெற்ற நகராக, வளங்கொழிக்கும் காவிரியாற்றின் கரையில் சோழர்களின் தலைநகரால் உறந்தை அமைந்திருந்ததாக அறிய முடிகின்றது. உறப்பு என்னும் சொல் செறிவு என்னும் பொருளுடையது. மக்கள் செறிந்திருந்த அதாவது உறைந்திருந்த ஊர் உறந்தை என்று பெயர் பெற்றுள்ளது.

உறந்தை, தற்போது உறையூர் என்று அழைக்கப்பெறுகிறது. திருச்சிராப்பள்ளி மாவட்டம், திருச்சிராப்பள்ளி வட்டத்தில் உறையூர் உள்ளது.

## வேறுபெயர்கள்

கோழி, உறையூர், கோழியூர், உசகபுரம், வாரணம், உறந்தை என்ற பெயர்களாலும் உறையூர் அழைக்கப்பட்டது. சங்க இலக்கியங்களில் உறந்தை என்ற சொல்லே மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. சிலப்பதிகாரத்தில் உறையூர் என்று இளங்கோவடிகள் பயன்படுத்தியுள்ளார். எல்லா வகையான செல்வச்செழிப்புகளும் வளங்களும் உறையும் நகரமாதலின் உறையூர் என வழங்கப்பட்டது.

'பண்டைக்காலத்தில் சிறந்து விளங்கிய நகரங்களும் துறைமுகங்களும் ஆற்றையடுத்தே உண்டாயின. சோழநாட்டின் பண்டைய தலைநகரமாய் உறையூர் காவிரியாற்றின் கரையில் அமைந்திருந்தது. அலெக்சாந்திரியா நாட்டு வணிகர் ஒருவர் முதல் நூற்றாண்டில் எழுதிய நூலின்மூலம், சோழநாடு கடற்கரைநாடு, உள்நாடு என இரண்டு நாடுகளாக இருந்தது எனவும், கடற்கரை நாட்டைக் காவிரிபூம்பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டு மற்றொரு தாயத்தாரும் ஆண்டு வந்தனர் எனவும் தெரிய வருகின்றது.'[10]

கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த மாறவர்மன் சுந்தரபாண்டியனின் கல்வெட்டில் 'உறந்தை' என்றே கூறப்பட்டுள்ளது. உறையூர் நீதிக்குப்பெயர் போனது. சோழர்களின் ஆட்சிக்காலத்தில் மெல்லிய பஞ்சாடைகளின் வாணிகத்திற்குப் பெயர் பெற்றிருந்தது. இன்றைக்கும் உறையூர் கைத்தறி ஆடைகளுக்குச் சிறந்த இடமாக உள்ளது.

சிலப்பதிகாரம், இவ்வூரை வாரணம் கோழி என்று குறிப்பிடுகின்றது. ஒரு கோழி யானையைப் போரில் வென்ற இடமாதலின் இப்பெயர்பெற்றது எனச் சிலப்பதிகாரம் கூறுகிறது. இந்நகர் பார்வைக்குச் சிறையும் கழுத்துமாக அமைந்திருப்பதால் சிறையையுடைய கோழி எனப்பெயர் பெற்றது. சோழன் பெருங்கிள்ளி 'கோழியகத்து' (சிலப். உரைபெறுகாதை, 4). கண்ணகிக்குக் கோயில் எடுத்தான் என்கிறார் இளங்கோவடிகள். உறையூரின் புறஞ்சிறையில் புகுந்தவரை,

*முறஞ்செவி வாரணம் முன் சமம் முருக்கிய*
*புறஞ்சிறை வாரணம் புக்கனர்* (சிலப். நாடுகாண்காதை, 247-248)

என்று குறிப்பிட்டு வாரணம் என்ற ஊர்ப்பெயர்க்குக் காரணமாகிய செய்தியைச் சொல்கிறார் இளங்கோவடிகள். வைகறையில் மூவரும் பயணத்தைத் தொடங்க,

*வைகறை யாமத்து வாரணம் கழிந்து* (சிலப். காடுகாண்காதை, 11)

என்று சொல்லுகிறார்.

உறையூர் கோட்டையும் காவற்காடும் கொண்டு காவிரியின் தென்கரையில் இருந்தது. உறையூரின் புறஞ்சிறையில் கந்தக்கோட்டம் இருந்தது. இன்றைய திருச்சி மாநகரின் ஒரு பகுதியாக மலைக்கோட்டைக்கு மேற்கில் உள்ள பேட்டையே பண்டைய உறையூராகும்.

'கண்ணகியும் கோவலனும் கவுந்தியடிகளுடன் திருவரங்கத்தில் இருந்து காவிரியைக் கடந்து தென்கரை அடைந்து ஒரு பூம்பொழிலில் இருந்த பொழுது ஒரு காமுகனும் பரத்தையும் கவுந்தியிடம் சொல்லாடிச் சாபம் பெற்று நரியாகி உறையூர்க் காவற்காட்டில் சென்று ஒதுங்கினர்.'[11] உறையூர் புறஞ்சிறையில் புகுந்த கவுந்தியடிகள் அங்கிருந்த 'கந்தன் பள்ளிக் கடவுளர்க்கெல்லாம் அரங்கத்து அகன் பொழிலில்

சாரணர் கூறிய தகைசால் நன்மொழிகளை விரித்துரைக்கிறார்.'[12] இதனால் உறையூர் கோட்டையும், காவற்காடும், புறஞ்சிறை மூதூரும், கந்தன் பள்ளியும் இருந்த செய்தி சிலப்பதிகாரத்தின் மூலம் புலனாகிறது.

தமிழக வரலாற்றினை எடுத்துரைக்கும் கல்வெட்டுச் சான்றுகளில் உறையூர் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. இரண்டாம் பாரந்தகன் என்று அழைக்கப்படும் சுந்தர சோழனுடைய ஆட்சிக்காலத்தில் கூற்றத்து உறையூர் என்னுமளவில் உறையூர் இடம்பெற்றுள்ளது.

'முதல் இராசராசன் காலத்தில், கேரளாந்த வளநாட்டு உறையூர் கூற்றத்து உறையூர் என்றும், வீரராஜேந்திரன் காலத்தில், இராச கெம்பீர வளநாட்டு உறையூர் கூற்றத்து உறையூர் என்றும் குலோத்துங்கன் காலத்தில், இராச மகேந்திர வளநாட்டு உறையூர் கூற்றத்து உறையூர் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன. சிவபாத சேகரபுரத்து உறையூர், மழைநாட்டு உறையூர், தென்கரை உறையூர் என்றும் தமிழகக்கல்வெட்டுகளில் உறையூர் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.'[13]

## சங்க இலக்கியங்களில் உறையூர்

சங்ககால நூல்கள் உறையூரையும் அந்நகரில் வாழ்ந்த மக்களின் வாழ்க்கை முறைகளையும் படம்பிடித்துக் காட்டுகின்றன.

நற்றிணையில்,

*மறம்கெழு சோழர் உறந்தை அவையத்து*
*அறம்கெட அறியாதாங்கு* (நற். 400:7-8)

உறையூரில் வீரமும், அறமும் நிலைபெற்றிருந்தமையை உணரலாம்.

குறுந்தொகையில்,

*யான்நயந்து உறைவோள் தேம்பாய் கூந்தல்*
*வளம்கெழு சோழர் உறந்தைப் பெருந்துறை*
*நுண்மணல் அறல்வார்ந் தன்ன*
*நல் நெறி யவ்வே நறுந்தண் ணியவே* (குறுந். 116:1-4)

நல்நெறி யவ்வே நறுந்தண் ணியவே என்று உறையூர் நீர்த்துறையாகச் சிறப்பிக்கப்பட்டுள்ளது. உறையூரின் நீர்த்துறைச் சிறப்பினைத் தலைவன் தலைவியின் கூந்தலுக்கு உவமையாகச் சொல்கின்றான்.

அகநானூற்றில்,

*கறங்குஇசை விழவின் உறந்தைக் குணாது*

*நெடும்பெருங் குன்றத்து அமன்ற காந்தள்* (அகம். 4:14-15)

நறுமணம் வீசும் தலைவியின் கூந்தல் வளப்பம் பொருந்திய சோழரது உறையூரிலுள்ள பெரிய நீர்த்துறையில் நுண்ணிய கருமணல் படிந்து கிடப்பதைப் போன்று நறுமணமும், குளிச்சியும் பெற்றுத் திகழ்வதாகத் தலைவன் குறிப்பிடுகிறான்.

மழைபோல் கொடுக்கும் வள்ளல் தன்மையுடைய தித்தனின் உறையூர், நெற்குவியல்களைக் கொண்டு திகழ்ந்தது.

*மழைவளம் தரூஉம் வண்தித்தன்*

*பிண்ட நெல்லின் உறந்தை ஆங்கண்* (அகம். 6:4-5)

சோழநாடு சோறுடைத்து என்ற கருத்து இப்பாடல்வழி உறுதியாகிறது.

கட்டி என்பவன், உறையூரின் அவையிலே உண்டான கிணைப்பறையின் ஒலியைக் கேட்டுத் தித்தனின் பெருமையை உணர்ந்து அஞ்சிப் போரிடாமல் ஓடினான். இதனை,

*தித்தன் வெளியன் உறந்தை நாள்அவைப்*

*பாடுகின் தெண்கிணைப் பாடுகேட்டு அஞ்சிப்*

*போர்அடு தானைக் கட்டி*

*பொராஅது ஓடிய ஆர்ப்பினும் பெரிதே* (அகம். 226:14-17)

என்று உறையூர் நகரின் சிறப்பினை அகநானூறு கூறுகின்றது. உறையூரின் சிறப்பினை விளக்கும் மற்றொரு பாடலில்,

*இருங்கதிர் அலமரும் கழனிக் கரும்பின்*

*விளைகழை பிழிந்த அம்தீம் சேற்றோடு*

*பால்பெய் செந்நெற் பாசவல் பகுக்கும்*

*புனல்பொரு புதவின் உறந்தை எய்தினும்* (அகம். 237:11-14)

என தீயிலிட்டு வதக்கிய நிணத்தின் கொழுவிய துண்டுகளைத் தினை அரிசிச்சோற்றுடன் முற்றிய கரும்பின் சாறு சுட்டபாகுடன் பாலைச் சேர்த்து அவலுடன் கலந்து பாணர் முதலியவர்களுக்குத் தரும் இயல்புடையவர்கள் வாழும் ஊர் உறையூர் என்று சிறப்பிக்கப்பட்டுள்ளது.

கடல் போன்ற படையையும் வன்மையையும் நீங்காத புகழையும் உடையது உறையூர், இதனை,

*கெடல்அரு நல்இசை உறந்தை அன்ன*

*நிதியுடை நல்நகர்ப் புதுவது புனைந்து* (அகம். 369:114-115)

என்றும்,

*கைவல் யானைக் கடுந்தேர்ச் சோழர்*

*காவிரிப் படப்பை உறந்தை அன்ன*

*பொன்னுடைய நெடுநகர்* (அகம். 385:3-5)

என்றும் சிறப்பிப்பதனால் உறையூரின் செல்வவளமும், வீரத்தன்மையும் அகநானூற்றுப் பாடல்கள்வழி தெளிவாகின்றன.

புறநானூற்றில்,

அறம் நின்று நிலைபெற்ற ஊராதலின் உறையூர் என்று பெயர் பெற்றது. என்பதை,

*மறங்கெழு சோழர் உறந்தை அவையத்து*

*அறம் நின்று நிலையிற் றாகலின்* (புறம். 39:8-9)

என்ற அடிகள் உறையூரில் அறம் நிலைபெற்றிருந்ததைத் தெரிவிக்கின்றது. உறையூர் கோழி என்றும் கோழியூர் என்றும் அழைக்கப்பட்டது.

*நுங்கோ யார்என வினவின் எங்கோக்*

*களமர்க்கு அரித்த விளையல் வெங்கள்*

*யாமைப் புழுக்கின் காமம் வீட ஆரா*

*ஆரற் கொழுஞ்சூடு அங்கவுள் அடாஅ*

*வைகுதொழின் மடியும் மடியா விழவின்*

*யாணர் நல்நாட் டுள்ளும் பாணர்*

*பைதல் சுற்றத்துப் பசிப்பகை யாகிக்*

*கோழி யோனே கோப்பெருஞ் சோழன்*

*பொத்தில் நண்பின் பொத்தியொடு கெழீஇ*

*வாயார் பெருநகை வைகலும் நமக்கே* (புறம். 212:1-10)

என்ற பாடல் கோப்பெருஞ்சோழனைக் கோழியோன் என்றும், உழவர்க்கென வடித்தெடுக்கப்பட்ட கள்ளினை ஆமையின் இறைச்சியோடு உண்டு அதனுடன் நில்லாமல் புது வருவாய் நீங்காததுமான புகழையுடைய சோழ நாட்டில், பொத்தியாருடன் கூடி மகிழ்ந்த கோப்பெருஞ்சோழனின் உறையூர் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

குமரி ஆற்றிற்கும், இமயமலைக்கும் இடைப்பட்ட சோழநாட்டில், உயர்ந்த மாளிகைகள் நிறைந்த ஊராக உறையூர் விளங்கியது என்பதை,

*குமரிஅம் பெருந்துறை அயிரை மாந்தி*

*வடமலைப் பெயர்குவை ஆயின் இடையது*

*சோழன் நன்னாட்டுப் படினே கோழி* (புறம். 67:6-8)

என்ற பாடல் வழி அறியலாம்.

பாணனை ஆற்றுப்படுத்தும் வகையில் புறநானூற்றின் மற்றொருபாடல்,

*நெடுநகர் வனப்பின் கடுமுழா ஓர்க்கும்*

*உறந்தை யோனே குருசில*

*பிறன்கடை மறப்ப நல்குவன் செலினே* (புறம். 68:17-19)

உறையூரில் உள்ள தலைவனிடம் சென்றால் எண்ணிப் பார்க்க முடியாதபடி பரிசில்கள் தருவான் என ஆற்றுப்படுத்துகிறது.

உறையூர் நல்ல விளைப்பொருட்கள் நிறைந்து செல்வச் செழிப்புடன் விளங்கியதையும் உறந்தைக்குப் பிடவூர் என்னும் பெயர் உள்ளதையும்,

*புலாக் களம் செய்த கலாஅத் தானையன்*
*பிறங்குநிலை மாடத்து உறந்தை யோனே* (புறம். 69:11-12)

என்றும்,

*சிறுகன் யானைப் பெயலருள் தித்தன்*
*செல்லா நல்லிசை உறந்தைக் குணாது*
*நெடுங்கை வேண்மான் அருங்கடிப் பிடார்* (புறம். 395:18-20)

என்றும் புறநானூற்றுப் பாடல்கள் விளக்கியுள்ளன. உறையூர் விளைப்பொருட்கள் விளைந்து சிறப்புற்றுத் திகழ்ந்துள்ளன.

**பரிபாடல் திரட்டில்**

*பூவினுள் பிறந்தோன் நாவினுள் பிறந்த*
*நான்மறைக் கேள்வி நவில்குரல் எடுப்ப*
*ஏம இன்துயில் எழுதல் அல்லதை*
*வாழிய வஞ்சியும் கோழியும் போலக்*
*கோழியின் எழாது, எம் பேரூர் துயிலே* (பரி. திரட்டு. 8:7-11)

என்று பரிபாடல் திரட்டில் உறையூர் கோழி என்று சிறப்பிக்கப்பட்டுள்ளது. சிறுபாணாற்றுப்படையில்,

*நாடா நல் இசை, நல்தேர்ச் செம்பியன்*
*ஓடாப் பூட்கை உறந்தையும் வறிதே* (சிறுபாண். 82-83)

என்றும் பட்டினப்பாலையில்,

*பிறங்கு நிலை மாடத்து உறந்தை போக்கி* (பட்டினப். 285)

என்றும் உறையூர் குறிப்பிடப்பட்டுள்ளது.

### மன்னர்கள்

உறையூரில் கரிகாற்சோழன், கோப்பெருஞ்சோழன், நலங்கிள்ளி, கிள்ளிவளவன், வெளியன் தித்தன் போன்ற மன்னர்கள் ஆட்சிப்புரிந்தனர். ‘வெளியன் தித்தன் உறையூரைக் கைப்பற்றி அரண்களை அமைத்து வலுவுள்ளதாக மாற்றினான்.’[14]

### புலவர்கள்

முத்துவீரியம் இலக்கணநூலாசிரியர் முத்துவீர உபாத்தியாயர் உறையூரைச் சேர்ந்தவர் ஆவார். சங்க இலக்கியப் பாடல்களைப் பாடியவர்களுள்,

1. இளம்பொன் வாணிகனார் (புறம். 264)
2. ஏணிச்சேரி முடமோசியார் (புறம். 13, 127, 135, 241, 274, 375)
3. கதுவாய்ச் சாத்தனார் (நற். 270)
4. சல்லியங்குமரனார் (குறுந். 309)
5. சிறுகந்தனார் (குறுந். 257)
6. பல்காயனார் (குறுந். 374)
7. மருத்துவன் தாமோதரனார் (புறம். 60, 170, 321, அகம். 133, 257)
8. முதுகண்ணன் சாத்தனார் (புறம். 27, 30, 325, குறுந். 133)
9. முதுகூத்தனார் (அகம். 137, 329, புறம். 331)
10. முதுகொற்றனார் (குறுந். 221, 390)

முதலிய புலவர்கள் உறையூரைச் சார்ந்தவர்கள்.

### உறையூர் நியமம்

சான்றோர்களால் நியமிக்கப்பட்ட தெய்வ நீராடுதுறைகள் ‘நியமம்’ எனப்பட்டது. இத்தகைய நியமங்கள் சோழநாட்டில் பல இருந்தன. உறையூரின் வடக்கு

எல்லையாக ஓடிய காவிரியின் தென்கரையில் உறையூரின் படப்பைப் பகுதியில் இருந்த தெய்வ வழிபாட்டுக்குரிய பகுதியே 'குற்றம் நீங்கிய நியமம்' என அழைக்கப்பட்டது.

## உறையூரின் அழிவு

பாண்டிய நாட்டில் ஆட்சி புரிந்த மன்னன் சுந்தரபாண்டியன் சோழநாட்டை அடிமைப்படுத்த படையெடுத்தான். வெற்றி பெற்ற நிலையில் உறந்தையைத் தீக்கிரையாக்கினான். முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் உறையூரையும் தஞ்சையையும் தீக்கிரையாக்கியதைத் திருக்கோயிலூர்க் கல்வெட்டு கூறுகின்றது. உறந்தை தீக்கிரையாக்கப்பட்டு நீர் நிலைகளும் மாடமாளிகைகளும், மாமதிலும் தரைமட்டமாக்கியதைச் சுந்தரபாண்டியனின் மெய்க்கீர்த்திப் பகுதியில் கூறப்பட்டுள்ளது. பாண்டிய நாட்டின் மீது படையெடுத்த அலாவுதீன் கில்ஜியின் படைத்தலைவனான மாலிக்கபூர் உறையூரையும் அழித்தான். இவ்வாறு பகைவர்களால் அவ்வப்போது உறையூர் அழிக்கப்பட்டது. காவிரியின் வெள்ளப் பெருக்கினால் அல்லூரும் உறையூரும் அழிந்ததை உறையூரில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வுச் செய்திகள் குறிப்பிட்டுள்ளன.

## உறையூர் இன்றைய நிலை

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டநிலையில் வரலாற்றுச் சிறப்புமிக்கதாகத் திகழ்ந்த உறையூர் இன்று பழைய சிறப்பினை இழந்து நிற்கிறது. முன்பு உறையூரைச் சுட்டியே சிராப்பள்ளிக் குன்றினை அறிய முடிந்தது. இன்று சிராப்பள்ளி நகரைச்சுட்டியே உறையூரைத் தேடியறிய முடிகின்றது. இன்றைய உறையூரில் நாச்சியார்கோயில், பஞ்சவர்ணமி வெக்காளியம்மன் கோயில் ஆகியவை உள்ளன. உறையூரில் கோயில் கொண்ட இலக்குமி உறையூர் வல்லி என்றழைக்கப்படுகிறாள். உறையூர்க்கோட்டை, அரண்மனை ஆகியவற்றின் சிதைவுகள் இன்றும் காணப்படுகின்றன.

### எருக்காட்டூர்

எருக்கட்டு என்றால் உரத்திற்காகக் கிடைத்து வைத்தல் என்று பொருள் கிடைத்துவைத்த கொல்லை என்று பொருள்படும். எருக்கட்டு என்ற சொல் நாளடைவில் எருக்காட்டு என்று திரிந்து அப்பகுதியில் அமைந்த ஊரைக் குறிப்பிடுவதாகக் கூறுவர்.

சிலபகுதிகளில் எருக்கங்காடுகள் அடர்ந்திருக்கின்றன. இக்காடுகள் அடர்ந்த பகுதியில் எழுந்த ஊராக எருக்காட்டூர் விளங்குகின்றது. இவ்வூர் தொன்மைச் சிறப்புடையது. தாயங்கண்ணனார் என்னும் சங்ககாலப்புலவர் இவ்வூரினரே. எனவே இவர் எருக்காட்டூர்த்தாயங் கண்ணனார் எனப் பெயர் பெற்றார்.

அகநானூற்றில் 149, 319, 367 ஆகிய பாடல்களும், புறநானூற்றில் 397-ஆம் பாடலும் எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் பாடியவை ஆகும். எருக்காட்டூர் தற்போது திருவாரூர் மாவட்டம் திருவாரூர் வட்டத்தில் உள்ளது.

### எருமைவெளி

வெளி என்னும் கூறு சில ஊர்ப்பெயர்களில் அமைந்திருப்பதைக் காண முடிகிறது. சங்ககாலத்துப் புலவர்களில் இருவர் வெளி என்னும் பெயரையுடைய ஊரினர். எருமைவெளியனார் என்பது ஒருவர் பெயர். வீரைவெளியனார் என்பது மற்றொருவர் பெயர். ‘இப்புலவர்கள் இருவரும் முறையே எருமை வெளியிலும் வீரைவெளியிலும் பிறந்தவர் என்பது வெளிப்படை’.[15]

எருமைவெளியனார் மகனார் கடவானர் அகநானூற்றில் 72-ஆம் பாடலையும், எருமை வெளியனார் அகநானூற்றில் 73-ஆம் பாடலையும், புறநானூற்றில் 273, 303-ஆம் பாடல்களையும் பாடியுள்ளனர். நாகைமாவட்டம், நாகை வட்டத்தில் தற்போது எருமை வெளி உள்ளது.

### எறிச்சலூர்

மாடலன் மதுரைக் குமரனார் என்ற சங்ககாலப்புலவர் இவ்வூரினர். ஆகவே எறிச்சலூர் மாடலன் மதுரைக்குமரனார் எனப்பெயர் பெற்றார்.

'எறிச்சலூர் சோழநாட்டு உள்நாடுகளுள் ஒன்றான கோனாட்டைச் சேர்ந்தது அறந்தாங்கிக்கும் குளகாப்பட்டிக்கும் மத்தியிலுள்ளது.'[16]

புறநானூற்றில் 54, 61, 167, 180, 197, 394 ஆகிய பாடல்கள் கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனார் பாடியவை ஆகும்.

**ஏணிச்சேரி**

யவனர்சேரி என்ற தொடர் நாளடைவில் ஏணிச்சேரி எனத்திரிந்துள்ளது. தலைநகராகிய உறையூரை அடுத்து யவனர்கள் தங்கியிருந்த பகுதியாகும். முடமோசியார் என்னும் சங்ககாலப்புலவர் இவ்வூரினர். ஆகவே ஏணிச்சேரி முடமோசியார் எனப்பெற்றார். புறநானூற்றில் 13, 127, 135, 241, 374, 375 ஆகிய பாடல்கள் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடியவை ஆகும்.

ஏணிச்சேரி உறையூரை அடுத்து இருந்துள்ளது. மதுரை மாநகரின் புறஞ்சேரி போல உறையூர் ஏணிச்சேரி அமைந்திருந்தது. உறையூரின் ஏணிச்சேரி என்று கூறப்பட்டமையால் இது தெளிவாகின்றது.

**ஏரகம்**

திருமுருகனின் நான்காம் படைவீடு, தஞ்சை மாவட்டத்தில் உள்ள சுவாமி மலையாகும். திரு ஏரகம் என்பது இத்தலத்தின் படைவீட்டுப்பெயர். ஏரகம் என நக்கீரர் குறிப்பிட்ட இத்திருத்தலம் சுவாமி மலையன்று என்று கருதுவாரும் உளர். திருமுருகாற்றுப்படையின் நச்சினார்க்கினியர் உரை வேறு ஓர்ஊர் எனக்காட்டுகிறது.

சுவாமிமலை திரு ஏரகம் அன்று எனக் கருத நேர்ந்தமைக்கான காரணங்களை ஆராய வேண்டியுள்ளது. ஆறுபடைவீடுகளில் திருச்செந்தூர் தவிர மற்றையத் திருத்தலங்கள் அனைத்திலும் முருகப்பெருமான் குன்றில் அமர்ந்தவராய்க் கோலம் காட்டுகிறார். ஆனால் சுவாமிமலை என்று பெயர் பெற்றிருக்கிறதேயன்றி அது மலையன்று. செயற்கையாக உருவாக்கப்பட்ட மலை போலத் தோற்றமளிக்கும் இத்திருக்கோயிலே.

திருமுருகாற்றுப்படையில் ஏரகத்து முருகன் கோவில் நாற்பத்தெட்டு ஆண்டுகள் பிரமசரிய விரதம் காத்த வேதியர் மந்திரங்கள் கூற ஈரஉடையணிந்த அருச்சகர் முருகனுக்குரிய ஆறெழுத்து மந்திரத்தைக் கூறி அருச்சனை செய்தனர் என்று திருமுருகாற்றுப்படை கூறுகிறது.

தென் கன்னட மாவட்டத்தில் புத்தூர் வட்டத்தில் கிழக்கே அமைந்துள்ள மேற்கு மலைத்தொடரின் மேற்கு பக்கத்து மலைப்பகுதியைச் சேர்ந்த துளுநாட்டில் குமாரசேத்திரம் அல்லது சுப்பிரமணிய சேத்திரம் என்ற சிற்றூர் உள்ளது. 'இங்கே உள்ள கோயிலில் முருகனுக்கு நடைபெறும் பூசைகளின் போது அருச்சகர் நீராடி ஈர ஆடையுடன் கருவறையுள் நுழைவர். உதவியாளர் மந்திரங்கள் கூற அருச்சகர் அருச்சனை புரிவர்.'[17]

ஏரகத்து முருகன் கோயிலைப் பற்றித் திருமுருகாற்றுப்படை கூறும் செய்தியையும், 'ஏரகம் மலை நாட்டகத்தொரு திருப்பதி எனக் கூறும் நச்சினார்க்கினியரின் கூற்றையும் கொண்டு, துளுநாட்டைச் சேர்ந்த குமார சேத்திரமே திருமுருகாற்றுப்படை குறிக்கும் ஏரகம் என்று கருத வேண்டும் என்பது ஆராய்ச்சியாளர் கருத்து.'[18]

ஆனால், இத்தகைய கூற்றுப் பொருந்தாக் கூற்றாகும். இன்றைய நாளில் அத்திருக் கோயிலில் பின்பற்றப்படும் நடைமுறையைக் கொண்டு அன்றைய நாள் திருக்கோயில் எனச் சுட்டுவது பொருத்தமில்லை.

ஏர் என்றால் அழகு என்பது பொருள். அகம் எனில் இடம். எனவே அழகிய சோலைகள், வயல்வெளிகள் நிறைந்த பகுதி என்ற பொருளில் ஏரகம் என அழைக்கப்பட்டிருக்கிறது. அழகிய ஊர்ப்பகுதியாதலால் ஏரகம் என ஆயிற்று. 'ஏர்' என்ற ஊரும் இதனருகே உள்ளது.

'கோரைப்புல்லுக்கு ஏரகம் என்னும் பெயர் உள்ளது. இப்பகுதியில் கோரைப்புற்கள் மிகுந்திருந்த காரணத்தால் ஏரகம் எனவும் வழங்கியிருக்கலாம் என்று கருதவும் இடமுள்ளது'.[19]

இத்தலத்து முருகப்பெருமான் எல்லாம் வல்ல ஈசனாம் சிவபெருமானாகிய சுவாமிக்குப் பிரணவப் பொருள் உரைத்தமையால் சுவாமி நாதர் எனப்பெயர்பெற்றார். அவர் வதியும் தலத்திற்குச் சுவாமி மலை எனத்தலப்பெயர் ஏற்பட்டது. குருகிரி என்றும் சிறப்புப்பெயர் பெற்றுள்ளது.

திரு + ஏரகம் என்பது திருஏரகம் ஆயிற்று. ஏரகம் என்பது இத்தலத்தின் பழம் பெயரும் கூட. திருவேரகம் சுவாமிநாதப் பெருமானின் அருள் சக்தி அலைமோதும் இடம் எனத்தலபுராணம் கூறுகிறது. திருவேரகம் திரு + ஏர் + அகம் என அமைந்து, 'திரு' என்பது எல்லாச் சிறப்புகளும் பொருந்திய என்றும், 'ஏர்' என்பது அழகிய என்றும், 'அகம்' என்பது வீடு (படைவீடு) என்றும் பொருள் குறிப்பனவாகும்.

திருமுருகாற்றுப்படையில் மட்டுமே திருவேரகம் பற்றிய குறிப்புகள் உள்ளன. வேறு சங்கப்பாடல்கள் எதிலும் ஏரகம் பற்றிய குறிப்பேதும் காண இயலவில்லை.

*இரு மூன்று எய்திய இயல்பினின் வழாஅது*
*இருவர்ச்சுட்டிய பல்வேறு தொல்குடி*
*அறு நான்கு இரட்டி இளமை நல் யாண்டு*
*ஆறினில் கழிப்பிய, அறன் நவில் கொள்கை,*
*மூன்று வகைக்குறித்த முத்தீச் செல்வத்து*
*இரு பிறப்பாளர், பொழுது அறிந்து நுவல்*
*ஒன்பது கொண்ட மூன்று புரி நுண்ஞாண்,*
*புலராக் காழகம் புலர, உடீஇ,*
*உச்சிக் கூப்பிய கையினர், தற்புகழ்ந்து*
*ஆறு எழுத்து அடக்கிய அருமறைக் கேள்வி*
*நா இயல் மருங்கில் நவிலப்பாடி*
*விரைஉறு நறுமலர் ஏந்தி - பெரிது உவந்து*
*ஏரகத்து உறைதலும் உரியன்* (திருமுருகு. 177-189)

சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள்,

*சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்*

*ஏரகமும் நீங்கா இறைவன் கை வேலன்றே* (சிலப். 24:8)

என்று குறிப்பிடுகின்றார்.

## ஐயூர்

ஐ என்றால் அழகு, எனவே அழகிய ஊர் என்ற பொருளில் அமைந்து ஐயூர் எனப் பெயர் பெற்றிருக்கிறது. தலைவன் என்ற பொருளும் இருப்பதால் தலைவனின் ஊர் என்ற பொருளிலும் அமைந்திருக்கலாம். ஐயூர், தஞ்சை மாவட்டத்தில் உள்ளது.

புறநானூற்றில் 21-ஆம் பாடலைப்பாடிய மூலங்கிழார் என்ற புலவரும், நற்றிணையில் 206, 334 ஆகிய பாடல்களையும், குறுந்தொகையில் 123, 206, 322 ஆகிய பாடல்களையும், அகநானூற்றில் 216-ஆம் பாடலையும், புறநானூற்றில் 51, 228, 314, 399 ஆகிய பாடல்களையும் பாடிய முடவனார் என்ற புலவரும் ஐயூரைச் சேர்ந்தவர்கள்.

## கடம்பனூர்

கடம்பன் என்னும் சொல் ஒரு பழைய குடியையும், முருகன் என்ற பொருளையும் குறிக்கும் சொல். 'முரட்டுத்தன்மை வாய்ந்த ஒரு பழைய குடியச் சார்ந்தவனின் ஊர் என்ற பொருளில் இவ்வூரின் பெயர் அமைந்ததோ என்று எண்ணத்தோன்றுகிறது.'[20] சாண்டில்யன் என்ற சங்ககாலப் புலவர் இவ்வூரினர். எனவே கடம்பனூர்ச் சாண்டில்யன் எனப்பெயர் பெற்றார்.

குறுந்தொகை 307ஆம் பாடல் கடம்பனூர்ச் சாண்டில்யன் பாடியது. திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் கடம்பனூர் எனும் ஊர் உள்ளது. இவ்வூர், சங்ககாலத் தொன்மையான ஊர் என இங்குக் கிடைத்த கல்வெட்டு (S.I.I. Vol.VIII No. 571) சான்று பகர்கின்றது.

## கயத்தூர்

கயத்தூர் என்பது நீர்நிலை காரணமாக உண்டாகிய பெயர். கயம் என்ற சொல் குளம் என்னும் நீர்நிலையைக் குறிக்கும். கிழான் என்ற சங்ககாலப் புலவர் இவ்வூரினர். ஆகவே கயத்தூர் கிழான் எனப் பெயர் பெற்றார்.

குறுந்தொகை 354-ஆம் பாடல் கயத்தூர் கிழான் பாடியது ஆகும். கயத்தூர், தஞ்சாவூர் மாவட்டத்தில் நன்னிலம் வட்டத்திலுள்ளது.

**கழாஅர்**

சோழநாட்டில் காவிரிக்கரையில் இருந்த ஊர் கழாஅர்.

*மாசுஇல் மரத்த பலி உண்காக்கை*
*வளிபொரு நெடுஞ்சினை தளியொடு தூங்கி*
*வெல்போர்ச் சோழர் கழாஅர் கொள்ளும்* (நற். 281:1-3)

கழாஅர் மத்தி என்னும் மன்னனுக்குரியதாக இருந்துள்ளது.

*முள்அரைப் பிரம்பின் மூதரில் செறியும்*
*பல்வேலு மத்தி, கழாஅர் அன்னஎம்*
*இளமை சென்றுதவத் தொல்ல.'.தே* (அகம். 6:19-21)

நறுவடி மாஅத்து விளைந்து உகுதீம்பழம்
நெடுநீர்ப் பொய்கைத் துடுமென விழுஉம்
கைவண் மத்தி, கழாஅர் அன்ன (ஐங். 61:1-3)

காவிரியில் நீர்ப்பெருக்கு வரும்போது கழார்ப் பெருந்துறையில் நீராட்டுவிழா நடந்துள்ளது.

*கழார்ப் பெருந்துறை விழவின் ஆகும்* (அகம். 222:5)

இந்நீராட்டு விழா மிகச்சிறப்பாக நடந்ததாகத் தெரிகிறது. சோழன் கரிகாலன் இந்த விழாவிற்குத் தன்னுடைய சுற்றத்தோடு வந்து கண்டு மகிழ்ந்தான் என்று அகநானூறு குறிப்பிடுகின்றது.

*ஒலிகதிர்க் கழனி, கழாஅர் முன்துறைக்*
*கலிகொள் சுற்றமொடு கரிகால் காணத்*
*தண்பதம் கொண்டு, தவிர்ந்த இன்இசை*
*ஒண்பொறிப் புனைகழல் சேவடிப் புரளக்*
*கருங்கச்சு யாத்த காண்பின் அவ்வயிற்று*

*இரும்பொலம் பாண்டில், மணியொடு தெரிப்பப்*

*புனல்நயந்து ஆடும் அத்தி அணிநயந்து* (அகம். 376:4-10)

சங்க இலக்கியம் குறிப்பிடும் இக்கழாஅர் தற்போது திருச்சிராப்பள்ளி மாவட்டத்திலுள்ளது.

கீரன் எயிற்றி என்றும் கீரன் எயிற்றியன் என்றும் வழங்கப்பெற்ற சங்ககாலப்புலவர் இவ்வூரினர். ஆதலால் கழார்க்கீரன் எயிற்றி என்றும் கழார்க்கீரன் எயிற்றியன் என்றும் பெயர் பெற்றார்.

குறுந்தொகையில் 35, 261, 330 ஆகிய பாடல்களும், அகநானூற்றில் 168, 217, 235, 294 ஆகிய பாடல்களும் கழார்க்கீரன் எயிற்றியன் பாடியவை ஆகும்.

**கழுமலம்**

கழுமலம் என்னும் பெயருடைய ஓரூர் சேரமன்னன் குட்டுவன் என்பவனுக் குரியது என்று சங்க இலக்கியம் கூறுகிறது. பெரும்பூட் சென்னி என்ற மன்னனின் வரலாற்றோடு இக்கழுமலம் என்ற ஊர் தொடர்புடையது என்றும் கூறுகிறது.

சேரனுக்குரிய கழுமலம் என்னும் ஊரை முற்றி அதன் கண்ணிருந்த கணையன் என்னும் தலைமைப் படைத்தலைவனுட்பட அவ்வூரைக் கைப்பற்றித் தன் நாட்டோடு கூட்டியவன் பெரும்பூட்சென்னி என்னும் சோழ மன்னன்.

பழையன் சோழ மன்னனுடைய படைத்தலைவன் இவனை நன்னன் முதலிய ஆறு படைத்தலைவர்களும் தத்தம் படையோடு கூடியிருந்த பாசறையைப் படை கொண்டு தாக்கிப் பெரும்பாலோரைக் கொன்று வீழ்த்திப்பின்னர் அப்பகைவர் படைக்கலனால் விழுப்புண் பட்டு மாய்ந்தனன். இக்களம் கண்டு பெரும்பூட்சென்னி என்னும் சோழமன்னன் வெகுண்டு எழுந்து கழுமலம் என்னும் ஊரைத் தாக்கி அங்கிருந்த கணையன் என்னும் சேரமன்னனுடைய படைத்தலைவர்களும் தலைவனாகிய மறவனையும் அக்கழுமலம் என்னும் ஊரையும் கைப்பற்றினான் என்பது வரலாறு.

'சோழ வளநாட்டில் திருக்கழுமல வளநாடு என்று ஒன்று இருந்ததாகவும் அதன் தலைநகரமே கழுமலம் என்றும் கூறப்படுகிறது' தஞ்சை மாவட்டத்தில் சீர்காழி வட்டத்தின் தலைநகரமாகிய சீர்காழிக்குக் கழுமலம் என்ற பெயர் இருந்துள்ளது. இவ்வூர் காவிரிப்பூம்பட்டனத்தை அடுத்திருப்பதால் சோழர்களின் பட்டத்து யானையை இங்கே கட்டியிருப்பது வழக்கம் என்றும், 'கழுமலத்தியாத்த களிறு' என்ற பழமொழிப் பாட்டுத்தொடர் இதையே குறிக்கிறது என்றும் கருதுகின்றனர்.[21]

சோழநாட்டுக் கழுமலம் ஒரு காலத்தில் சேரர் ஆட்சியிலிருந்து பெரும்பூட் சென்னியால் மீட்கப்பட்டது என்பது தெளிவு.

*பருந்து படப் பண்ணிப் பழையன் பட்டெனக்*
*கண்டது நோனானாகித் திண்டேர்க்*
*கணையனகப் படக் கழுமலந் தந்த*
*பிணையலங்கண்ணிப் பெரும்பூட் சென்னி* (அகம். 44:11-14)

## கள்ளில்

ஆத்திரையன் என்ற சங்ககாலப்புலவர் கள்ளில் என்னும் ஊரைச் சேர்ந்தவர். ஆதலின் கள்ளில் ஆத்திரையன் எனப் பெயர் பெற்றார். பெரும்பாலும் மக்கள் வாழும் வீட்டைக் குறிக்கும் 'இல்' என்பது சில பழமையான ஊர்ப்பெயர்களில் சேர்ந்திருக்கிறது.

குறுந்தொகையில் 293-ஆம் பாடலும், புறநானூற்றில் 175, 389 ஆகிய பாடல்களும் கள்ளில் ஆத்திரையன் பாடியவை. 'கள்ளில்' தற்போது 'அன்பில்' என மருவியுள்ளது. திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் இவ்வூர் உள்ளது.

## காவிரிப்பூம்பட்டினம்

'ஏறத்தாழ 2000 ஆண்டுகளுக்கு முன் பண்டைய சோழ மன்னர்களின் தலைநகராகவும், துறைமுகமாகவும் காவிரிப்பூம்பட்டினம் விளங்கியது. பண்டையத் தமிழர்களின் கடல் வாணிகம் மிகவும் சிறந்து விளங்கியதற்குக் காவிரிப்பூம்பட்டினம் காரணமாகத் திகழ்ந்தது. இக்காவிரிபூம்பட்டினம் தமிழ்நாட்டின் ஒப்பற்ற துறை முகப்பட்டினம் ஆகும். வரலாற்றுச் சிறப்புமிக்க இப்பட்டினம் காவிரி கடலொடு கலக்கு மிடத்தில் அமைந்திருந்தது'[22]

'பெரிப்ளூசு இப்பட்டினத்தைக் கமரா (camara) எனவும், தாலமி கபேரிஸ் (kaberis emporion) எனவும் குறிப்பிட்டுள்ளனர். கி.பி. 5-ஆம் நூற்றாண்டில் புத்ததத்தர் இங்கிருந்த புத்த விகாரத்தில் தங்கியிருந்து பிராகிருத மொழியில் அபிதம்மவதாரம் என்னும் இலக்கியத்தை இயற்றியதாகக் கருதப்படுகிறது. இதில் இப்பட்டினம் காவேரிபட்டினம் எனக் குறிப்பிடப்படுகிறது. மேலும், அபிதம்மவதாரம் காவிரிப்பூம்பட்டினத்தின் எழில்மிகு தோற்றம், அமைப்பு, அங்கு வாழ்ந்த உயர்குடி மக்கள் மற்றும் அரிய வைரக்கற்கள் முதற்கொண்டு விற்கப்பெற்ற பெரிய கடைத்தெருக்கள் போன்றவை குறித்தும் பேசுவதை ஆய்வாளர்கள் ஏற்கனவே குறிப்பிட்டுள்ளனர்.'[23] மேலும், 'இங்குக் கிடைத்த புதை பொருள்களைக் கொண்டு இந்நகரம் கிறிஸ்துவுக்கு முற்பட்ட வாழ்க்கையையுடைய தென்பதை ஆராய்ச்சியாளர்கள் கண்டறிந்தனர்.'[24] எனவே காவிரிப்பூம்பட்டினம் தொன்மச் சிறப்புடையது என்பது தெளிவு.

## வேறுபெயர்கள்

காவிரி கடலொடு கலக்குமிடத்து அமைந்த நகரமாதலால் புகார் எனப்பட்டது. புகார் என்பது ஆற்றுமுகத்தைக் குறிக்கும். காவிரிப்பூம் பட்டினம் என்னும் முழுமையான பெயர் சங்க இலக்கியங்களில் காணப்படவில்லை. புகார், பூம்புகார், பெருநகரி, பட்டினம், காவிரிப்பட்டினம், காவிரிப்படப்பை நன்னகர் எனப் பல பெயர்களால் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும், கவீரபட்டணம், காகந்தி, கமரா, சபரிஸ், சம்பாபதி, சோழபட்டினம், கோலப்பட்டினம், மண்ணகத்து வான்பதி எனப் பல்வகையாக அழைக்கப்பட்டது.

## நகரமைப்பு

சோழர்களின் சிறப்பு மிகு தலைநகரமாகவும், துறைமுகமாகவும் விளங்கிய பூம்புகார் அன்று மருவூர்ப்பாக்கம், பட்டினப்பாக்கம் என்று இரண்டு பிரிவாகவும், நடுவில் நாளங்காடி எனும் பிரிவுமாக விளங்கியது. மருவூர்ப்பாக்கத்தில் உயர்ந்த மாட மாளிகைகள் இருந்தது. அங்கு யவனர், கூல வாணிகர், மீன் வாணிகர், பொற்கொல்லர், தச்சர், ஓவியம் தீட்டுவோர் முதலியோர் வாழ்ந்தார்கள்.

பட்டினப்பாக்கத்தில் அரசனின் மாளிகை இருந்தது. அகன்ற தேரோடும் தெருக்களும் அங்காடித் தெருக்களும் இருந்தன. வணிகர், மறையவர், மருத்துவர், சோதிடர் முதலியோர் இருந்தனர். அரண்மனையைச்சுற்றி முப்படைவீரர்களும், புலவர், பாணர், இசைவாணர், முத்து வேலை செய்வோர், நாழிகைக் கணக்கர் முதலியோரும் இருந்தனர். இங்கு நாளங்காடி ஆரவாரமிக்கதாய் விளங்கியது.

'ஒவ்வொரு பெரிய கடற்கரை நகரமும் இரண்டு பக்கங்களையுடையதாய் இருந்தது. அவற்றுள் ஒரு பாகம் ஊர் என்றும், மற்றொரு பாகம் பட்டினம் என்றும் அழைக்கப்பட்டன. பூம்புகார் ஒரு பாகம் மருவூர்ப்பாக்கம் என்றும் மற்றொரு பாகம் பட்டினப்பாக்கம் என்றும் பெயரிடப்பெற்றன.'[25]

'தாலமி, காவிரிபூம்பட்டினத்தைத் தலைச்சிறந்த பண்டகச் சாலையாகக் குறிப்பிட்டுள்ளார். காவிரி ஆற்றின் முடிவுப்பகுதி - கடலொடு கலந்த இடம் காவேரி என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார். தாலமியின் இந்தச் செய்திகளையெல்லாம் மெக்கிண்டல் தொகுத்துத்தந்துள்ளார்.'[26]

### புலவர்கள்

குறுந்தொகையில் 342 ஆம் பாடல் காவிரிப்பூம்பட்டினத்துக் கந்தரதத்தனார் பாடியது. 297-ஆம் பாடல் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணன் பாடியது. 347 ஆம் பாடல் காவிரிபூம்பட்டினத்து சேந்தன் கண்ணன் பாடியது. அகநானூற்றில் 107, 123, 285 ஆகிய பாடல்கள் காவிரிப்பூம்பட்டினத்துக்காரிக் கண்ணனார் பாடியவை. 103, 271 ஆகிய பாடல்கள் காவிரிப்பூம்பட்டினத்துக் கண்ணனார் பாடியவை. புறநானூற்றில் 57, 58, 169, 171, 353 ஆகிய பாடல்கள் காவிரிபூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் பாடியவை.

### சங்க இலக்கியங்களில் காவிரிப் பூம்பட்டினம்

பண்டைய பூம்புகார் நகரின் பெருமையைச் சங்க இலக்கிய நூலான பட்டினப்பாலை விரிவாகப் பேசுகிறது. அகநானூறு, புறநானூறு ஆகிய நூல்களும் புகாரைச் சிறப்பிக்கின்றன. சங்க காலத்தில் பூம்புகார் மிகவும் பெரிய நகரமாகக் காட்சியளித்தது. காப்பிய நூல்களான சிலப்பதிகாரம், மணிமேகலை முதலியனவும் புகார் நகரின் சிறப்பைக் கூறுகின்றன.

### நற்றிணையில்

நற்றிணையில் பூம்புகாரில் உள்ள சாய்க்காடு பற்றியும், புகார்த்துறைமுகத் திற்கருகில் அமைந்துள்ள கலங்கரை விளக்கு பற்றியும் பேசப்பட்டுள்ளது.

*பூக்கெழு படப்பைச் சாய்க்காட் டன்ன* (நற். 73)

*கங்குன் மாட்டிய கனைகதி ரொண்சுடர்* (நற். 219)

### ஐங்குறுநூற்றில்

*கைவண் மந்தி கழாஅர் அன்ன* (ஐங். 61)

என ஐங்குறுநூற்றில் பூம்புகாரில் உள்ள கழாஅர் முன்னுரை பற்றிக் குறிப்பிடப் பட்டுள்ளது.

### பதிற்றுப்பத்தில்

*குறும்பல் யாணர்க் குரவை யயரும்*
*காவிரி மண்டிய சேய்விரி வனப்பிற்*
*புகார்ச் செல்வ* (பதிற்று. 8:3-7)

எனப் பதிற்றுப்பத்தில் அரிசில்கிழார் புகார் நகரைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

### அகநானூற்றில்

கழார், சாய்க்கானம், பட்டினம், பெருந்துறை என்றெல்லாம் அகநானூற்றில் பூம்புகார் பற்றிக்குறிப்பிடப்பட்டுள்ளன.

*பல்வேறு மந்தி கழாஅர் அன்ன* (அகம். 6:8)

என்றும்,

*கொடுஞ்சுழிப் பகாஅர்த் தெய்வ நோக்கிக்*
*கடுஞ்சூள் தருகுவென் நினக்கே* (அகம். 110:4-5)

என்றும்,

*கழைமாய் காவிரிக்கடல் மண்ட பெருந்துறை* (அகம். 123:9)

என்றும்,

*கைசெய் பாவைத் துறைக்கண் இறுக்கும்*
*மகர நெற்றி வான்றோய் புரிசைச்*
*சிகரந் தோன்றாச் சேணுயர் நல்லிற்*
*புகார்...* (அகம். 81:19-22)

என்றும்,

*பூவிரி நெடுகழி நாப்பண் பெரும் பெயர்க்*
*காவிரிப் படப்பை பட்டினத் தன்ன* (அகம். 205:7-9)

என்றும்,

*கழாஅர்ப் பெருந்துறை விழவின் ஆகும்* (அகம். 222:6)

என்றும்,

*பல்வேல் மத்தி கழாஅர் அன்ன* (அகம். 226:9)

என்றும்,

*மலிபுனல் பொருத மருதோங்கு படப்பை*
*ஒலிகதிர்க் கழனிக் கழாஅர் முன்றுறைக்*
*கலிகொள் சுற்றமொடு கரிகால் காண* (அகம். 376:7-9)

இவ்வாறு பூம்புகார் பற்றி அகநானூற்றில் குறிப்பிடப்படுகின்றது.

## புறநானூற்றில்

*மீட்பாய் களையாது மிசைப்பரள் தோண்டாது*
*புகாஅர்ப் புகுந்த பெருங்கலம் தகாஅர்*
*இடைப்புலப் பெருவழிச் சொரியும்*
*கடற்பல் தாரத்த நாடு* (புறம். 30:6-9)

என்றும்,

*பூவிரி புதுநீர்க் காவிரி புரக்கும்*

*தண்புனற் படப்பை என்மூர்* (புறம். 166:8-9)

என்றும்,

*காவிரி அணையும் தாழ்நீர்ப் படப்பை*

*நெல்விளை கழனி* (புறம். 385:7-8)

இவ்வாறு புறநானூற்றில் பூம்புகார், படப்பை என்றும் புகார் என்றும் சிறப்பிக்கப் பட்டுள்ளதை அறியலாம்.

## பொருநராற்றுப்படையில்

பொருநராற்றுப்படையும் பட்டினப்பாலையும் பூம்புகாரின் வளர்ச்சி பெற்ற நகரமைப்பை விவரிக்கின்றன. பரிசில் பெறாத பொருநனுக்குப் பரிசில் பெற்று வந்த பொருநன் கரிகால் பெருவளத்தானிடம் ஆற்றுப்படுத்துகிறான். அப்பொழுது கரிகாலனின் இருப்பிடம், அவன் சிறப்புகள், சோழநாட்டின் வளம், காவிரியின் வனப்பு போன்றவைகள் பற்றிய செய்திகளும் பொருநராற்றுப்படையில் விளக்கப்பட்டுள்ளன.

*பேர்யாழ் முறையுளிக் கழிப்பி, நீர் வாய்த்*

*தண்பணை தழீஇய தளரா இருக்கை*

*நன்பல் ஊர நாட்டொடு* (பொருந. 168-170)

என்று பூம்புகார் சூழ்ந்த ஊர்கள் குறிக்கப்பட்டுள்ளன. காவிரி பாய்ந்து கடலொடு கலந்து இச்சோழநாட்டு வளத்தை நான்கு திணை நிலங்களும் மயங்கிய வளம் நிறைந்த பகுதியாகப் பொருநராற்றுப்படை பாடுகின்றது.

## பட்டினப்பாலையில்

பொருநர் ஆற்றுப்படையில் பூம்புகாரின் சிற்றூர் வாழ்வுச் சித்திரங்கள் புலப்படுத்தப்பட்டிருக்க பட்டினப்பாலையில் பேரூர் வாழ்வு நிலைகள் புலப்படுத்தப்பட்டுள்ளன. பேரூர் வாழ்வு நிலைகள் செழும்பாக்கம், சோணாடு, கடிநகர், பெருந்துறை, செழுநகர், பட்டினம் என்றெல்லாம் விவரிக்கப்பட்டுள்ளன.

*அகல்நகர் வியன் முற்றம்* (பட்டினப். 20)

என்றும்,

*கொழும் பல்குடிச் செழும் பாக்கத்துக்*
*குறும் பல்லூர் நெடுஞ்சோணாட்டு* (பட்டினப். 27-28)

என்றும்,

*புலிப் பொறிப் போர்க் கதவின்*
*திருத்துஞ்சும் திண்காப்பு* (பட்டினப். 40-41)

என்றும்,

*பூதம் காக்கும் புகலரும் கடிநகர்* (பட்டினப். 57)

என்றும்,

*தேர் ஓடத் துகள் கெழும் திருவீதி* (பட்டினப். 47)

என்றும்,

*தொல்சீர்த் துறக்கம் ஏய்க்கும் பெருந்துறை* (பட்டினப். 105)

என்றும்,

*நெடுங்கால் மாடத்து ஒள்ளெரி* (பட்டினப். 111)

என்றும்,

*பல்வேறு உருவின் பதாகை நீழல்*
*செல்கதிர் நுழையாச் செழுநகர்* (பட்டினப். 182-183)

என்றும் வரும் அடிகள் பூம்புகாரின் நகர வாழ்க்கையின் சிறப்பினைப் புலப்படுத்துகின்றன. *மொழிபல பெருகிய பழிதீர் தேஎத்துப்*(பட்டினப். 216) என்ற அடி, பூம்புகாரில் பல்வேறு மொழிகள் பேசும் மக்கள் கலந்து வாழ்ந்ததை விவரிக்கின்றன.

பொருநராற்றுப்படையில், பூம்புகாரின் வேளாண்மை, மீன்பிடி தொழில்கள் நிறைந்த சிற்றூர் - பேரூர் வளர்ச்சி நிலை தெரிகின்றது. பட்டினப்பாலையிலும் அத்தொழில்கள் நிறைந்த வளர்ச்சியடைந்த பூம்புகார், 'குறும்பல் ஓர் நெடுஞ்சோணாடு' என்று போற்றப்படும் நிலை புலனாகிறது. அதனைத் தொடர்ந்து சிலப்பதிகாரத்தில் பூம்புகாரின் திட்டமிட்ட நகரமைப்பும் மக்களின் வாழ்வுச்சிறப்பும் தெரியவருகின்றன.

## சிலப்பதிகாரத்தில்

மருவூர்ப்பாக்கம், பட்டினப்பாக்கம், நாளங்காடி என்ற பகுதிகளைக் கொண்டு விளங்கிய பூம்புகாரைச் சிலப்பதிகாரம் தெளிவாகச் சுட்டுகிறது.

*வேயா மாடமும் வியன்கல இருக்கையும்*

*மான்கட் காலதர் மாளிகை இடங்களும்*

*கயவாய் மரங்கிற் காண்போர்த் தடுக்கும்*

*பயன்ற வறியா யவனர் இருக்கையும்*

*... .... ...*

*... ... ...*

*சிறுகுறுங் கைவினைப் பிறர் பிறர்வினை யாளரொடு*

*மருவின்றி விளங்கும் மருவூர்ப்பாக்கம்* (சிலம்பு. 5:7-39)

என வரும் முப்பத்து மூன்று அடிகள் மருவூர்ப்பாக்கம் பற்றியும், அங்குப் பல்வேறு தொழில்கள் செய்வோர் பற்றியும் குறிப்பிடுகின்றன. வேளாண்தொழில், மீன்பிடி தொழில் போன்ற பல்வேறு சிறுதொழில்கள் புரிவோர் வாழ்ந்த பகுதியாக மருவூர்ப்பாக்கம் காணப்படுகிறது.

*பீடு கெழு சிறப்பில் பெரியோர் மல்கிய*

*பாடல்சால் சிறப்பில் பட்டினப்பாக்கமும்* (சிலம்பு. 5:57-58)

என வரும் அடிகள் பட்டினப்பாக்கம் பற்றிய விரிவான செய்திகளையும் அங்கு வாழ்ந்த மக்களின் செல்வச் செழிப்பையும் அங்குக் காணப்படும் பல்வேறு 'நாளங்காடி' பொழில் நிறைந்த சோலையாகத் திகழ்ந்தமையையும் விளக்குகின்றன.

## மணிமேகலை காட்டும் பூம்புகார்

பூம்புகாரை மணிமேகலை ‘திருவிழைமூதூர்’ எனச் சிறப்பிக்கிறது. சிலப்பதிகாரம் கூறும் பூம்புகார் பற்றிய செய்திகளைக் காட்டிலும் மணிமேகலை குறிப்பிடும் செய்திகளில் புராணக் கதைகளும், புனைவுகளும் அதிகமாகக் காணப்படுகின்றன. சாத்தனார் பூம்புகார் நகரத்தைப் ‘பூங்கொடி’ எனப் போற்றுகிறார். போற்றுதற்குரிய எல்லைகளைக் கடந்தவள் புகார்ப்பூங்கொடி; பன் மலர் பூத்த அகழிகள் அவளுக்குச் சிலம்படிகள்; மதில்கள் அவளுக்குத் தோள்கள்; கற்பகத் தரு நிற்கும் கோயிலும் வச்சிரக் கோட்டமும் அவளுக்கான மார்புகள்; சோழனது அப்பற்ற கோயில் அவளின் திருமுகம் எனும் கற்பனைகளோடு பூம்புகாரைப் பாடுகிறார்.[27]

நிலவையும் கதிரையும் தோடுகளாகச் சூடியவள் பூம்புகார்ப்பூங்கொடி என வருணித்துள்ளார். சங்கப்புலவர்கள் நகரத்தினைப் பெண்களுக்கு உவமையாகக் கூறியுள்ளனர். இளங்கோவடிகளும் காவிரியையும், வையை ஆற்றினையும் பெண்களாகப் போற்றியுள்ளார். சாத்தனார் பூம்புகார் நகரத்தினைப் பெண்களுக்கு உவமையாகக் கூறாமல் பெண்ணாகவே பாவித்து ‘பூம்புகார்ப் பூங்கொடி’ என வருணித்துப் புதுமரபினை உண்டாக்கியுள்ளார். சிலப்பதிகாரத்தில் குறிப்பிடும் பூம்புகாரின் ஐந்து மன்றங்களில் ‘பூதச்சதுக்கம்’ பற்றிய குறிப்புகள் மட்டும் மணிமேகலையில் உண்டு.

*மடித்த செவ்வாய் வல்லெயிறு இலங்க*
*இடிகுரல் முழக்கத்து இடும்பை செய்திடும்*
*தொடுத்த பாசத்து தொல்பதி நரகரைப்*
*புடைத்துணும் பூதம்* (மணி. 1:21-24)

*புலிகணத் தன்னோர் பூத சதுக்கத்து*
*கொடித்தேர் வேந்தன் கொற்றம் கொள்கென*
*இடிக்குரல் முழகத்து இடும்பலி ஓதை* (மணி. 7:78-80)

என வரும் அடிகளில் பூதச்சதுக்கம் பற்றியும் நரகரைப் புடைத்துண்ணும் பூதம் பற்றியும், வீரர்கள் பூதத்திற்குப் பலியிடும் ஓசைகள் பற்றியும் விளக்கப்பட்டுள்ளன. பல நாட்டுக் கலைஞர்கள் வாழ்ந்த புகார்நகரத்தினை மணிமேகலை,

*மதக விளைஞரும், மராட்டக் கம்மரும்*

*அவந்திக் கொல்லரும், யவனத் தச்சரும்*

*தண் தமிழ் வினைஞர் - தம்மொடு கூடிக்*

*கொண்டு இனிது இயற்றிய, கண் கவர் செய்வினைப்*

*பவளத் திரள் கால், பல் மணிப் போதிகை*

*தவள நித்தியத் தாமம் தாழ்ந்த*

*கோணச் செய்தி மாண் வினை விதானத்து*

*தமனியம் வேய்ந்த வகைபெறு வளப்பின்*

*பைஞ் சேறு மெழுகாப் பசும் பொன் மண்டபம்* (மணி. 19:109-122)

தொல்பொருள் ஆய்வுத்துறையினர் புகார்ப் பகுதியில் நடத்திய ஆய்வுகளில் கிடைத்த பண்டை சோழர்கால நாணயங்கள், உரோமபுரி நாணயங்கள், பெரிய செங்கற்கள், கிணறுகள், புத்தபாதம் விகாரம் ஆகிய யாவும் பண்டைய புகார் நகரின் பெருமையை உறுதிப்படுத்துகின்றன.

தொல்பொருள் ஆய்வுத்துறையினர் பூம்புகார்ப் பகுதிகளான மேலையூர், கீழையூர் மணிக்கிராமம், வானகிரி ஆகிய பகுதிகளில் ஆய்வினை நிகழ்த்தியுள்ளனர். மேலையூர் என்ற இடத்தில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வில் பல்லவனீச்சுரம் என்ற கோயிலுக்கருகில் தோண்டிய குழியில் புத்தப்பள்ளி ஒன்று கிடைக்கப்பெற்றுள்ளது. புத்தவிகாரம் ஒன்றும், புத்த படிவம் ஒன்றும், புத்த பாதமும், கருப்பு சிவப்பு நிறங்கள் கொண்ட மண்பாத்திரங்களும், யானை மற்றும் புலி உருவங்கள் பொறிக்கப்பட்ட சதுர வடிவலான சங்க காலக் காசுகளும், அரிய கல்மணிகளும் பானை ஓடுகளும் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன.

'1927-ஆம் ஆண்டு காவேரிப்பூம்பட்டினத்தில் மேலையூர் என்ற பகுதியில், அதாவது இப்பொழுது புத்த விஹாரம் கிடைத்துள்ள பகுதியில் போதிசத்வைத்ரேயரின் செப்புத்திருமேனி ஒன்று பூமிக்கடியிலிருந்து கிடைத்துள்ளது. அது இப்பொழுது சென்னை அருங்காட்சியகத்தில் உள்ளது. மிகவும் எழில் வாய்ந்த இச்செப்புத்திருமேனி தங்க முலாம் பூசப்பட்டு விளங்குகிறது. இது எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்தது.'[28]

‘காவிரிப்பூம்பட்டினம் அகழாய்வுக் கண்டு பிடிப்புகளில் மிகமுக்கியமானதாகக் கருதப்படுவது மேலையூரில் உள்ள பல்லவனீச்சுரம் எனும் கோயிலுக்கு அருகில் தோண்டிய குழியில் கிடைக்கப்பெற்ற புத்தப்பள்ளி ஆகும். இப்பள்ளியில் 8 சதுர அடி பரப்பளவு கொண்ட ஏழு அறைகள் இருந்தன. இவை புத்தமதத் துறவிகள் தங்குவதற்காக ஏற்படுத்தப்பட்டிருக்க வேண்டும்’.[29]

சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய காப்பியங்களில் பூம்புகாரில் புத்த சமயம் சிறப்பாக இருந்ததை மேலையூரில் கிடைத்த புத்தபாதம், புத்த சிலை ஆகியவை உறுதி செய்கின்றன. பூம்புகாரில் மணிக்கிராமம் என்னும் இடத்தின் அருகில் உள்ள கிழார்வெளி என்ற இடத்திலும் படகுத்துறை ஒன்று இருந்ததைத் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை வெளிப்படுத்தியுள்ளது. மணிக்கிராமத்தில் பண்டையக் காலத்தில் மணிகள் செய்யும் தொழிற்கூடங்களும் அவற்றினை விற்பனை செய்யும் தெருக்களும் இருந்திருக்கின்றன.

**ஐவகை மன்றங்கள்**

இளங்கோவடிகள் பூம்புகாரில் ஐந்து மன்றங்கள் இருந்ததை விரிவாகக் குறிப்பிட்டுள்ளார். அவை வெள்ளிடை மன்றம், இலஞ்சி மன்றம், நெடுங்கல் மன்றம், பூதச் சதுக்கம், பாவை மன்றம் எனும் மூன்றைப் பட்டினப்பாலை குறிப்பிடவில்லை.

இலஞ்சி மன்றமும், பூதச்சதுக்கமும் பட்டினப்பாலையில் ‘இருகாமத் தினையேரி’ என்றும் ‘முரண்களரி’ என்றும் குறிப்பிட்டுள்ளன. மணிமேகலை இம்மன்றங்களைப் பற்றிக் கூறாமல் ஐந்து வகை வனங்களைப் பற்றி மட்டுமே கூறுகின்றது. மணிமேகலை காலத்தில் ஒருவேளை இம்மன்றங்கள் கடல்கோள் போன்ற காரணங்களால் அழிந்திருக்கலாம்.

இன்றைய காலக்கட்டத்தில் நெடுங்கல் மன்றம், சிலப்பதிகாரக் கலைக்கூடம் மாதவியின் நெயகற்சிலை, கலைக்கூடச் சுற்றுச்சுவற்றில் கண்ணகியின் வரலாற்று நிகழ்ச்சிகள் வடிவமைக்கப்பட்டுள்ளன.

### கோவில்கள்

சோழரின் ஆட்சிக் காலத்தில் பூம்புகாரில் பல ஆலயங்கள் தோற்றுவிக்கப்பட்டன. சிவன், முருகன், திருமால், பலதேவன் இவர்களுக்கும் வெள்ளையானை, வச்சிரப்படை, ஞாயிறு, திங்கள், முருகனின்வேல் இவற்றிற்கும் வர்த்தமான புத்தர், கிராமதேவதை, வீரர் போன்றோர்க்கும் கோயில்கள் பல இருந்தன. செங்கல், மண், மரம், உலோகம் இவற்றினால் ஆலயங்கள் உருவாக்கப்பட்டிருந்தன.

இந்திரவிழாவின் போது பூம்புகார் மக்கள் வச்சிரக் கோட்டத்திலிருந்த யானை மீது முரசினை ஏற்றி ஐராவதக் கோட்டத்திற்கு எடுத்துச்செல்வர். கற்பகத்தருக் கோட்டத்தில் கொடி ஏற்றம் செய்து இந்திர விழாவினைத் தொடங்குவர்; காவிரி நன்னீரால் இந்திரனை நீராட்டுவர்; இந்நிலையில் பூம்புகாரில் உள்ள பல்வேறு கோயில்களிலும் விழாக்கள் நடக்கும். விழாக்கள் மூலம் பூம்புகார் மக்களின் சமய ஆன்மீகப் பண்பாடு வெளிப்படும்.

*பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்*
*ஆறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்*
*வால்வளை மேனி வாலியோன் கோயிலும்*
*நீல மேனி நெடியோன் கோயிலும்*
*மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்*
*மாமுது முதல்வன் வாய்மையின் விழாஅ*
*நான்மறை மரபின் தீ முறை ஒருபால்*
*நால்வகைத் தேவரும் மூவறு கணங்களும்*
*பால்வகை தெரிந்த பகுதித் தோற்றத்து*
*வேறுவேறு கடவுளர் சாறு சிறந்தொடு பால்* (சிலம்பு. 5:169-178)

என இளங்கோவடிகள் பூம்புகார் நகரக் கோயில்களைக் கூறிச் செல்கிறார். மேலும்,

*அமரர் தருக்கோட்டம் வெள்யானைக் கோட்டம்*
*புகர்வெள்ளை நாகர்தம் கோட்டம் பகல்வாயில்*
*உச்சிக்கிழான் கோட்டம் ஊர்க்கோட்டம் வெல்கோட்டம்*

*வச்சிரக் கோட்டம் புறம்பணையாள் வாழ்கோட்டம்*

*நிக்கந்தக் கோட்டம் நிலாக் கோட்டம்* (சிலம்பு. 9:9-13)

எனப் பூம்புகார் நகரக் கோட்டங்களையும் இளங்கோவடிகள் குறிப்பிடுகின்றார்.

**பூம்புகார் இன்றைய நிலை**

சங்க கால முடிவு வரை பண்டைய சோழரின் தலை நகராகவும், துறைமுகமாகவும் விளங்கிய புகார் நகரம் கடல்கோள் காரணமாகப் பிற்காலத்தில் சிறப்பிழந்திருக்கிறது. 'வாணிகப் புகழ்பெற்றிருந்த காவிரிப்பூம்பட்டினம், கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் புயல் காற்றடித்து வெள்ளப்பெருக் கெடுத்து நீரில் மூழ்கிவிட்டதை மணிமேகலை குறிப்பிடுகிறது. ஆனால் இப்பட்டினம் நெடுங்காலம் புகழ்ப்பெற்றிருந்தது. பிற்காலச் சோழர் காலத்திலும் காவிரிப்பூம்பட்டினம் புகழ்ப்பெற்றிருந்தது. பிறகு இப்பட்டினம் சிறப்புக் குன்றிச் சிறிது சிறிதாகப் பெருமை குறைந்து இப்பொழுது குக்கிராமமாக இருக்கிறது.'[30]

பூம்புகாரின் வரலாற்றுப் பின்னணிகளின் மூலம் பூம்புகார் நகரமைப்பு, வளர்ச்சிநிலை, சமுதாய நிலை, மக்கள் வாழ்வு பற்றிய செய்திகள் தெளிவாகின்றன. பத்துப்பாட்டில் காணப்பெற்ற பூம்புகாரின் நிலை, இரட்டைக் காப்பியங்களான சிலப்பதிகாரம் மணிமேகலைக் காலங்களில் வளர்ச்சிப்பெற்றுச் செழுமையடைந்த நகராகக் காட்சியளிக்கின்றது. சிலம்பில் பூம்புகாரின் உச்சநிலை வளர்ச்சியையும் மணிமேகலையில் பூம்புகாரின் அழிவையும் அறியலாம்.

மணிமேகலை காலத்தில் பூம்புகார் கடல் கொள்ளப்பட்ட பிறகு பூம்புகாரின் பண்பாட்டு மையம் முக்கியத்துவம் இழந்துவிட்டது. 'சென்ற மூவாயிரம் ஆண்டுகளில் கடற்கரையோர அமைப்பில் பல புவியியல் மாறுபாடுகள் ஏற்பட்டுள்ளன. புகழ்பெற்ற பண்டைய துறைமுகங்கள் சில பிற்காலத்தில் அழிந்து போயின. சில தம் சிறப்பில் குன்றிவிட்டன. பண்டைய துறைமுகங்களான காயலும், கொற்கையும் இப்போது மணல் மேடிட்டுக்கிடக்கின்றன. கடல் விலகிச் சென்று விட்டது. பூம்புகார் கடலில் மூழ்கிவிட்டது. மாபெரும் நகரம் செழித்தோங்கியிருந்த அந்த இடத்தில் மீனவர் குப்பங்களே எஞ்சியுள்ளன,'[31] என்று பூம்புகாரின் அழிவைப் பற்றி வரலாற்று அறிஞர் கே.கே. பிள்ளை அவர்கள் விளக்கியுள்ளார்.

உலக வாணிக நகரமாகச் சிறந்து விளங்கிய பூம்புகார் நாகரிகப் பரவலுக்குக் களமாகவும், பண்பாட்டு மையமாகவும் விளங்கியுள்ளது. சங்க இலக்கியங்களும், காப்பியங்களும், தேவார், திருத்தொண்டர் புராணம் முதலிய இலக்கியங்களிலும், புத்த ஜாதகக் கதைகள், புத்தவம்சக்கதா, அபிதம்மாவதாரம் போன்ற பௌத்தம் பற்றிய பிராகிருத நூல்களிலும், தாலமி, பிளினி போன்ற வெளிநாட்டவர் குறிப்புகளிலும், பார்க்குக்கல்வெட்டு, சாய்க்காடு, பல்லவனீச்சரம், திருவெண்காடு முதலான கோயில்களின் கல்வெட்டுகள் ஆகியவற்றிலும் பூம்புகார் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன.

## குடந்தை

குடந்தைவாயில் என்றும், குடந்தை என்றும், குடவாயில் என்றும் கூறப்படுவன எல்லாம் ஒரே ஊரின் பெயரேயாகும். சோழர் குடந்தை என்று கூறப்படுவதால் இவ்வூர் சோழனுக்குரியதாக இருந்திருக்க வேண்டும் என்பது தெளிவு.

உ.வே. சாமிநாதையர், பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர், பெருமழைப் புலவர் சோமசுந்தரனார் போன்றோர் சங்க இலக்கியப்பாடல்களுக்கு உரை எழுதும் போது குடந்தை வாயில் என்றும், குடவாயில் என்றும் குறிக்கப்பெற்ற ஊரே இன்று குடவாசல் என்று வழங்கும் ஊராகும் என்று கூறியுள்ளனர். இவ்வூர் தஞ்சை மாவட்டத்தில் நான்னிலம் வட்டத்திலுள்ளது.'[32]

இல்லின் வாய் அல்லது வீட்டின் வாய் என்று பொருள்படும் வாயில் என்ற சொல்லுடன் வழங்கப்பெறும் சில ஊர்ப்பெயர்களில் குடந்தைவாயில் அல்லது குடவாயில் என்னும் இந்த ஊரும் ஒன்று. ஊர்கள் அமைந்துள்ள திசையை அவற்றின் பெயர் உணர்த்தும் நிலையும் இப்பெயரில் அமைகின்றது. முற்காலத்தில் சிறந்து விளங்கிய ஒரு பெருநகரின் மேல்வாசலாக அமைந்த இடம் நாளடைவில் ஓர் ஊராக அமைந்து குடவாசல் என்று பெயர் பெற்றிருக்க வேண்டும்.

கோச்செங்கட் சோழன் தன்னோடு போர் செய்து தோல்விவுற்ற சேர மன்னனைக் குடவாயிற் கோட்டம் என்னும் சிறைக்கோட்டதில் அடைத்து

வைத்திருந்தான் என்ற செய்தி, குடவாயிலில் ஒரு சிறைக்கோட்டம் அமைந்து இருந்த நிலையை உணர்த்துகின்றது. குடவாசலில் அமைந்திருந்த பழைய கோட்டை மதில்கள் பற்றிய செய்திகளைத் தேவாரமும் உணரத்துகிறது.

குடந்தை என்று நாலாயிரதிவ்யப்பிரபந்த பாடல்களிலும் தேவாரப்பாடல் களிலும் குறிக்கப்படும் ஊர் இன்றைய கும்பகோணம் ஆகும். இது குட மூக்கு என்றும் குறிக்கப்படுகிறது. சங்க இலக்கியத்தில் கூறப்பெற்ற குடந்தை, குடந்தைவாயில், குடவாயில் என்பது தற்காலத்தில் குடவாசல் என்ற ஊரினைக் குறிக்கின்றது.

ஓர் ஊரின் பெயர் காலப்போக்கில் பின்னர் வேறொரு பெயராகத் திரிதலும், இப்பெயரே பிறிதோர் ஊருக்குப் பெயராக அமைதலும் ஆகிய தன்மையைக் காணமுடிகிறது.

நற்றிணையில் 27, 212, 379 ஆகிய பாடல்களையும், குறுந்தொகையில் 281, 369 ஆகிய பாடல்களையும், அகநானூற்றில் 35, 44, 60, 79, 119, 129, 287, 315, 345, 366, 385 ஆகிய பாடல்களையும் புறநானூற்றில் 242 ஆம் பாடலையும் பாடிய கீர்த்தனார் என்ற புலவரும், குறுந்தொகையில் 79-ஆம் பாடலைப் பாடிய கீரனக்கன் என்ற புலவரும் இவ்வூரினைச் சேர்ந்தவர்கள்.

*தேர் வண் சோழர் குடந்தை வாயில்*
*மாரி அம்கிடங்கின் ஈரிய மலர்ந்த*
*பெயல் உறுநீலம் போன்ற விரலே* (நற். 379:7-9)

என்றும்,

*பொங்கடி படிகயம் மண்டிய பசுமிளை*
*தண் குடவாயில் அன்னோள்*
*பண்புடை ஆகத்து இன்துயில் பெறவே* (அகம். 44:17-19)

என்றும்,

*கொற்றச் சோழர் குடந்தை வைத்த*

*நாடுதரு நிதியினும் செறிய*

*அருங்கடிப் படுக்குவள், அறன்இல் யாயே* (அகம். 44:17-19)

என்று சங்க இலக்கியப் பாடல்களில் குடந்தை, குடவாயில் பற்றிய பதிவுகள் காணப்படுகின்றன.

**குராப்பள்ளி**

குராப்பள்ளியில் துஞ்சியதால் சோழன் பெருந்திருமாவளவன் குராப்பள்ளித் துஞ்சிய சோழன் பெருந்திருமாவளவன் எனப்பெயர் பெற்றான். புறநானூற்றில் 58, 60, 197 ஆகிய பாடல்கள் குராப்பள்ளியில் துஞ்சிய மன்னனைப் பற்றிப்பாடப்பட்டவை.

குராப்பள்ளி என்பது குராமரங்கள் அடர்ந்த பகுதியால் பெற்ற ஊர்பெயராகும். குராப்பள்ளியைப் பற்றிய வேறு செய்திகள் அறிய முடியவில்லை.

**குறுக்கை**

குறுக்கைப் பறந்தலையில் அன்னி என்றும் மன்னன் திதியனோடு போரிட்டு, அவன் காவல் மரமாகிய புன்னையை வெட்டி வீழ்த்தினான் என்றும் சங்க இலக்கியம் கூறுகிறது. போர் நடைபெற்ற அந்தப் போர்க்களம் அமைந்த ஊர்ப்பெயராகிய குறுக்கை என்பதனோடு இணைந்து குறுக்கைப் பறந்தலை எனப்பெற்றது.

*அன்னிக் குறுக்கைப் பரந்தலை திதியன்*

*தொல்நிலை முழுமுதல் துமியப் பண்ணி*

*புன்னை குறைந்த ஞான்றை* (அகம். 45:9-11)

என்றும்

*அன்னி குறுக்கைப் பறந்தலை, திதியன்*

*தொல் நிலை முழுமுதல் துமியப் பண்ணிய*

*நன்னர் மெல்இணர்ப் புன்னைப் போல* (அகம். 134:11-13)

என்றும் அகநானூறு குறிப்பிடுகின்றது.

வேளாளர் குலத்தினரில் ஒரு பிரிவினர் குறுக்கையர் குடியினர். குறுக்கையர் குடியினர் வாழ்ந்த நிலப்பகுதி குறுக்கை எனப்பெயர் பெற்றிருக்கிறது. 'அட்ட வீரட்டத்தலங்களுள் காமனை எரித்த தலமாதலின் திருக்குறுக்கை வீரட்டம் என்று வழங்குகிறது'[33] அப்பர் இக்கோயில் இறைவனை அடைவுத் திருத்தாண்டகம் என்ற பகுதியுள் பாடுகிறார். வீரட்டம் என்ற முடிவு கொண்ட தலப்பெயர்களைச்சுட்டும் போது, குறுக்கை வீரட்டத்தையும்' சுட்டுகின்றார். எனவே வீரட்டம் கோயில் என்பதும், குறுக்கை என்பதே ஊர்ப்பெயர் என்பதும் தெளிவாகிறது.

குறுக்கை என்னும் பெயருடன் தஞ்சை மாவட்டத்து மயிலாடுதுறை வட்டத்தில் ஒன்றும் (தற்போது நாகை மாவட்டம்), திருச்சி மாவட்டத்தில் லால்குடி வட்டத்தில் ஒன்றும் ஆக இரண்டு ஊர்கள் உள்ளன. சங்க இலக்கியம் சுட்டும் தொல் பழமையான கொற்கை, நாகை மாவட்டம் மயிலாடுதுறை வட்டத்திலுள்ளது என்று இங்குக் கிடைத்த பழமையான கல்வெட்டினால் அறியமுடிகிறது. (S.I.I. Vol.XXIII No. 301)

## துறையூர்

துறையூர் ஓடைகிழார் என்ற புலவர் ஒருவர் பாடிய சங்க இலக்கியப்பாடல் ஒன்றில் 'தண்புனல் வாயில் துறையூர்' என்ற அடி இடம்பெற்றுள்ளது. மேலும் இப்புலவர் ஊரால் பெயர் பெற்றவர். நீர்த்துறையின்கண் அமைந்த ஊர் துறையூர்ஆகும். 'நாள்தோறும் குளிர்ந்த நீர் ஓடும் வாய்த்தலைகளையுடைய துறையூர்' என்று சங்க இலக்கியம் கூறுகிறது.

*நினக் கொத்தது நீ நாடி*
*நல்கினைவிடுமதி பரிசில் அல்கலும்*
*தண்புனல் வாயிற் துறையூர் முன்துறை*
*நுண்பல மணலினு மேத்தி*
*உண்குவம் பெரும நீ நல்கிய வளனே* (புறம். 136:23-27)

துறையூர் என்ற பெயருடன் விழுப்புரம் மாவட்டத்தில் ஓர் ஊரும், திருச்சி மாவட்டத்தில் லால்குடி வட்டத்தில் ஓர் ஊரும், முசிறி வட்டத்தில் ஓர் ஊரும் உள்ளன. முசிறி வட்டத்தில் உள்ள துறையுரே சங்க இலக்கியம் சுட்டும் துறையூராகும் என்பதற்கு இங்குக் கிடைத்த கல்வெட்டு (S.I.I. Vol.VIII No. 337) சான்று பகர்கின்றது.

## நாலூர்

சங்க இலக்கியத்தில் 'நாலூர்க்கோசர் நன்மொழி'(குறுந். 15:3) என்பது போல் கோசரைக்குறிக்கும் இடங்களிளெல்லாம் நாலூர் என்ற அடையுடனே குறிக்கப்பட்டுள்ளது. 'நான்கு ஊரிலுள்ள கோசர் என்றோ, நாலூர் என்ற ஊரிலுள்ள கோசர் என்றோ எண்ண இடமளிக்கிறது.'[34]

சங்க இலக்கியத்தில் குறிக்கப்பெறும் இந்நாலூர் தஞ்சை மாவட்டம் பாபநாசம் வட்டத்தில் உள்ளது.

## நியமம்

நியமம் என்று சுட்டப்பட்டுள்ள ஊர் செல்லூருக்குக் கிழக்கே இருந்த ஓர் ஊர் என்றும், கோசர் என்பவருக்கு உரியது என்றும் சங்க இலக்கியம் கூறியுள்ளது.

*அருந்திறற் கடவுள் செல்லூர்க் குணா அது*
*பெருங்கடல் முழக்கிற்றாகி யாணர்*
*இரும்பிடம் படுத்த வடுவுடை முகத்தர்*
*கடுங்கண் கோசர் நியமம் ஆயினும்* (அகம். 90:9-12)

என்றும்,

*நெடுங்கொடி நுடங்கும் நியம மூதூர்க்*
*கடுந்தேர்ச் செல்வன் காதல் மகனே* (நற். 45:4-5)

என்றும் நியமம் பற்றிய பதிவுகள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன.

நகரம் அல்லது இடம் எனப்பொருள் தரும் இயமம் என்னும் சொல் நாளடைவில் ஒரு குறிப்பிட்ட ஊருக்குப் பெயராய் அமைந்துள்ளது. 'கோடிக்கரையை 'நிகம் (Nigam) என்ற பெரிப்புளுஸ் என்ற கிரேக்க நூலாசிரியர் குறிப்பிடுகிறார். இக்கிரேக்க நூலாசிரியர் 'நிகம்' என்று கூறும் ஊர்ப்பெயர் சங்க நூல்களில் நியமம் என்று வரும் பெயராகும் என்பர்.'[35] காரைக்குடிக்கு அருகில் உள்ள நேமத்தாம்பட்டி என்ற நியமம் நெல்லை மாவட்டத்தில் உள்ள நேமமும் நியமம் என்ற ஊரே என்றும் கருத்து உள்ளது.

'நொச்சி நியமம் என்ற பெயருடன் ஒரு நியமம் இருந்ததாக, நொச்சி நியமங்கிழார் என்ற புலவரின் பெயரால் அறிய முடிகிறது. திருச்சிக்கு அருகிலுள்ள நொச்சியம் என்னும் ஊரே நொச்சிநியமம் ஆகும்.'[36]

சங்க இலக்கியம் குறிப்பிடும் நியமம் தற்போது தஞ்சை மாவட்டத்தில் உள்ளது.

## நீடூர்

நீடுதல் என்றால் பரத்தல் அல்லது செழித்தல் என்னும் பொருளையுடைய சொல்லாகும். செழிப்பு மிகுந்த ஊர் நீடூர் எனப்பெயர் பெற்றிருக்கிறது. நீடூர், 'அப்பர், சுந்தரர் பாடல்பெற்ற தலமாகும். இக்கோயில் தலமரமாக மகிழமரம் அமைகிறது. எனவே இதன் காரணமாக மகிழாரண்யம், மகிழவனம் என்ற பிற பெயர்களும் இதற்கு அமைகின்றன. ஊழிக்காலத்தும் அழியாது நீடித்திருக்கும் தலமாதலின் இது நீடூர் என்று பெயர் பெற்றது என்பர்.'[37]

*யாழிசை மறுகின் நீடூர் கிழவோன்* (அகம். 266:10)

என்று அகநானூறு நீடூரைக் குறிப்பிடுகின்றது.

நீடூர் சங்ககாலத்தில் பெரியதோர் ஊராகவும், செழிப்பான வளமிக்க ஊராகவும் இருந்துள்ளது. திருவாரூர் மாவட்டம், மயிலாடுதுறை வட்டத்தில் தற்போது நீடூர் உள்ளது.

## நெய்தலங்கானல்

சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னியை ஊன் பொதி பசுங்குடையார் பாடியது (புறம்-10) என்ற தொடர் நெய்தலங்கானல் என்ற ஊர்ப்பெயர்ப் பற்றி எண்ணத்தைத் தோன்றுவிக்கிறது. இது இளஞ்சேட் சென்னியின் நகரம்.

*மலைத்தல் போகிய, சிலைத்தார் மார்ப,*
*செய்துஇரங் காவினை, சேண்விளங் கும்புகழ்*
*நெய்தலங் கானல் நெடியோய்* (புறம். 10:10-12)

நெய்தலங்கானல் தஞ்சை மாவட்டத்தில் உள்ளது.

## பிடவூர்

பிடவு என்பது ஒருவகை மரம். அம்மரத்தால் பிடவூர் என்று பெயர்பெற்றிருக்கிறது இவ்வூர். சோழநாட்டுப்பிடவூர் கிழான் மகன் பெருஞ்சாத்தனை மதுரை நக்கீரர் பாடிய பாடல் என்ற தொடர் இவ்வூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன் என்ற வள்ளல் என்று தெரிகிறது.

*செல்லா நல் இசை உறந்தைக் குணாது*
*நெடுங்கை வேண்மான் அருங்கடிப் பிடவூர்*
*அறப்பெயர்ச் சாத்தன் கிளையேம், பெரும* (புறம். 395:19-21)

பிடவூர் திருச்சி மாவட்டத்தில், திருச்சி வட்டத்தில் உள்ளது.

## பொறையாறு

சங்க காலத்தில் இப்பகுதியில் பொறையர் என்னும் குறுநில இனத்தவர் வாழ்ந்ததால் இப்பெயர் ஏற்பட்டிருக்கிறது.

'வலிமை என்னும் பொருளுடைய பொறை என்னும் சொல்லடியாக இவ்வூர்ப்பெயர் பொறையாறு எனப்பட்டது என்றும், ஊர்த்தலைவன் வலிமையுள்ள ஒரு பெருந்தலைவனாக இருந்து அவன் வலிமை காரணமாகவே அவனது ஊரும் பெயரும் பெற்றது எனவும் குறிப்பிடப்படுகிறது.'[38]

கல்லாடனார் என்ற சங்ககாலப்புலவரால் பாடப்பெற்ற பொறையாற்றுக் கிழான் என்பவன் பொறையாற்றின் தலைவனாக விளங்கியவன். அவன் 'பெரியன்' என்றே குறிக்கப்பெறுகிறான்.

*நறவுமகிழ் இருக்கை நல்தேர்ப் பெரியன்*
*கள்கமழ் பொறையாறு அன்ன என்*
*நல்தோள் நெகிழ மறத்தல், நுமக்கே* (நற். 131:7-9)

பொறையாறு, நாகை மாவட்டம் தரங்கம்பாடி வட்டத்திலுள்ளது.

**மிழலை**

'சோழர் காலக் கல்வெட்டுகளிலும் இலக்கியங்களிலும் மிழலை நாடு மிழலைக்கூற்றம் என்னும் இரண்டு தொடர்கள் காணப்படுகின்றன. ஆராய்ச்சி வல்லுநர்கள் சிலர் இவ்விரண்டும் ஒன்றே என்று கருதிய நிலையில் சதாசிவப் பண்டாரத்தார், மிழலைநாடு என்பது சோழ மண்டலத்தில் இருந்த ஒன்பது வளநாடுகளுள் ஒன்றாகிய இராசேந்திர சிங்க வளநாட்டின் உள்நாடுகளுள் ஒன்று குறிப்பிடுகிறார்.[39]

மேலும் இவர், 'இராசேந்திரன் சிங்க வளநாடு என்பது காவிரியாற்றில் வடகரையிலிருந்த ஒரு பெரு நிலப்பரப்பாகும். இந்த வளநாடு இருபத்திரண்டு நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது என்பதனை இவரது கல்வெட்டு ஆராய்ச்சி வெளிப்படுத்துகிறது. இவற்றுள் ஒன்றே மிழலைநாடு என்று ஆய்ந்துரைக்கிறார்.'[40]

மிழலை நாடு எனப்படுவது சோழ கேரளபுரம், சேய்ஞலூர், திருவாப்பாடி, மிழலை திருந்துதேவன்குடி முதலான ஊர்களைத் தன்னகத்துக் கொண்டதாகும் எனக் குறிப்பிடும் பண்டாரத்தார், இந்த மிழலைநாட்டின் வரலாற்றுச் சிறப்பை உணர்த்தியதோடு, மிழலைநாட்டு ஊர்களின் சிறப்பையும் விளக்குகிறார். மிழலை நாட்டில் உள்ளதாகக் கல்வெட்டில் உணர்த்தப்படும் சோழகேரளபுரம் என்று இக்காலத்தில் சோழபுரம் என வழங்குவதாகவும், சண்டேசுவரநாயனார் தோன்றிய சேய்ஞலூர் என்பது இன்று சேங்கனூர் என வழங்குவதாகவும் இவர் குறிப்பிடுகிறார்.

சங்க இலக்கியம் குறிப்பிடும் மிழலை, சோழபுரத்திற்குத் தெற்கே ஒன்றரை மையில் உள்ள ஓர் ஊர் எனவும், அது மிழலை நாட்டின் தலைநகரம் எனவும் சதாசிவப் பண்டாரத்தார் குறிப்பிடுகிறார். மிழலை தற்போது திருவாரூர் மாவட்டம் மயிலாடுதுறை வட்டதிலுள்ளது.

*ஓம்பா வீகை மாவேள் எவ்வி*
*புனலம்புதவின் மிழலை யொடு* (புறம். 24:18-19)

இந்த மிழலையானது சங்ககாலத்தில் பெருமிழலை என வழங்கப்பெற்றது. அறுபத்து மூன்று நாயின்மார்களுள் ஒருவரான பெருமிழலைக் குறும்ப நாயனார்

வாழ்ந்து வீடெய்தியது நன்னிலத்திற்கு அண்மையிலுள்ள திருவீழிமிழலை என்று பலர் கருதி வந்துள்ளனர். ஆயினும் சுந்தர் மிழலை நாட்டு மிழலை, வெண்ணிநாட்டு மிழலை என்று இருவிதமான மிழலையைக் குறிப்பிடுவதையும், சேக்கிழார் தமது பெரியபுராணத்தில் குறும்ப நாயனாரது ஊர் 'மிழலை நாட்டு மிழலை' எனக் குறிப்பிடுவதையும், எனவே குறும்ப நாயனாரது மிழலை திரு வீழி மிழலையிலிருந்து வேறுபட்டது என்பதை அறியலாம்.

**முகையலூர்**

புறநானூற்றில் 181, 265 ஆகிய பாடல்களைப் பாடிய சிறு கருந்தும்பியார் என்ற சங்க காலப்புலவர் முகையலூரைச் சார்ந்தவர். தஞ்சை மாவட்டத்தில் தஞ்சைவட்டத்தில் முகையலூர் உள்ளது.

**வல்லார்**

வல்லார் என்ற ஊரில் இருந்த வள்ளல் பண்ணன் என்பவன், வல்லார் கிழான் பண்ணன் எனப்பெற்றான். வலிமையுடையவர் எனப்பொருள்படும் வல்லார் என்னும் சொல் வலிய வீரர்கள் தங்கியிருந்த குடியிருப்புகளடங்கிய ஊருக்குப் பெயராய் அமைந்துள்ளது. வல்லார், தஞ்சை மாவட்டம் திருவையாறு வட்டத்திலுள்ளது.

*மன்ற விளவின் மனைவீழ் வெள்ளில்*
*கருங்க ணெயிற்றி காதல் மகனொடு*
*கான இரும்பிடிக் கன்று தலைக்கொள்ளும்*
*பெருங்குறும் புடுத்த வன்புல விருக்கைப்*
*புலாஅலம்பிற் போரருங் கழமிளை*
*வலாஅரோனே வாய்வாட் பண்ணன்* (புறம். 181:1-16)

**வெண்ணி**

வெறுந்தரை அல்லது மணற்பாங்கான தரை என்று பொருள்படும். வெண்ணி என்னும் இவ்வகையான நில அமைப்புப்பகுதியில் அமைந்த காரணத்தால் இவ்வாறு பெயர் பெற்றுள்ளது. சேரனும் பாண்டியனும் கரிகாலன் இளையன் என எண்ணி, அவன் மீது போர் தொடுக்க, அவர்களுடன் போர் புரிந்து கரிகாலன் வென்ற இடமே வெண்ணியாகும். போரில் புறப்புண் அடைந்த சேரன் வடக்கிருந்து இறந்தான்.

வெண்ணி, திருவெண்ணியூர், வெண்ணிப்பறந்தலை என்று அழைக்கப்படும் இவ்வூர், இன்று கோயில் வெண்ணி என்று அழைக்கப்படுகிறது. தஞ்சை மாவட்டம் நீடாமங்கலம் வட்டத்திலுள்ளது.

கரிகாலனைப்பாடிய குயத்தியார் (புறம். 66) என்னும் புலவர் இவ்வூரினர். ஆகவே வெண்ணிக்குயத்தியார் எனப் பெயர் பெற்றார்.

*இரும்பனம் போந்தைத் தோடும், கருஞ்சினை*
*அரவாய் வேம்பின் அம்குழைக் தெரியலும்,*
*ஓங்கிருஞ் சென்னி மேம்பட மிலைந்த*
*இருபெரு வேந்தரும் ஒருகளத்து அவிய,*
*வெண்ணித் தாக்கிய வெரு வரு நோன்தாள்,*
*கண்ணார் கண்ணி, கரிகால் வளவன்* (பொருந. 143-148)

என்றும்,

*வாளை வாளின் பிறழ நாளும்*
*பொய்கை நீர் நாய் வைகுதுயில் ஏற்கும்*
*கைவண் கிள்ளி வெண்ணி சூழ்ந்த*
*வயல் வெள் ஆம்பல் உருவ நெறித்தழை*
*ஐதகலல்குல் அணி பெறத் தைஇ,*
*விழவின் செலீஇயர் வேண்டும் மன்னோ* (நற். 390:1-16)

என்றும்,

*கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலைப்*
*பொருது புண் நாணிய சேரலாதன்*
*அழிகள மருங்கின் வாள் வடக்கிருந்தென,*
*இன்னா இன் உரை கேட்ட சான்றோர்*
*அரும்பெறல் உலகத்து அவனொடு செலீஇயர்,*
*பெரும் பிறிது ஆகியாங்கு* (அகம். 55:10-15)

என்றும்,

*காய்சின மொய்ம்பின் பெரும் பெயர்க்கரிகால்*

*ஆர்கலி நறவின் வெண்ணி வாயில்*

*சீர்கெழு மன்னர் மறலிய ஞாட்பின்*

*இமிழ் இசை முரசம் பொருகளத்து ஒழிய,*

*பதினொரு வேளிரொடு வேந்தர் சாய*

*மொய்வலி அறுத்த ஞான்றை*

*தொய்யா அழுந்தூர் ஆர்ப்பிகம் பெரிதே* (அகம். 246:8-14)

என்றும்,

*களி இயல் யானைக் கரிகால் வளவ*

*சென்று, அமர்க்கடந்த நின் ஆற்றல் தோன்ற*

*வென்றோய்! நின்னினும் நல்லன் அன்றே*

*கலிகொள் யாணர் வெண்ணிப்பறந்தலை*

*மிகப்புகழ் உலகம் எய்தி*

*புறப்புண் நாணி, வடக்கிருந் தோனே* (புறம். 66:3-8)

என்றும் வெண்ணிப்பற்றிய பதிவுகள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன.

## வேளூர்

மண் எனப் பொருள்படும் வேள் என்ற சொல், நில அமைப்பால் பெற்ற பெயராகப் பெயர்ப்பெற்றுள்ளது. நாகை மாவட்டம் நாகை வட்டத்தில் தற்போது ‘கீவளூர்’ என வேளூர் மருவியுள்ளது.

*நல்மரம் குழிஇய நனை முதிர்சாடி*

*பல்நாள் அரித்த கோஒல் உடைப்பின்*

*மயங்குமழைத்து வணியின் மறுகு உடன் பனிக்கும்*

*பழப்பல் நெல்லின் வேளூர் வாயில்* (அகம். 166:1-4)

என அகநானூற்றில் வேளூர் பதிவுச்செய்யப்பட்டுள்ளது.

## சோழநாட்டுப் புலவர்கள்

1. அரிசில் கிழார் - குறு - 193, பதிற்று - 71 முதல் 80, புறம்- 146, 230, 281, 285, 300, 304, 342
2. ஆடுதுறை மாசாத்தனார் - புறம். 237
3. ஆதிமந்தி - குறு. 31
4. ஆர்காடு கிழார் மகனார் வெள்ளை கண்ணத்தனார் - அகம். 64
5. ஆலங்குடி வங்கனார் - அகம். 106, குறு. 8.45, நற். 230, 330, 400, புறம். 319
6. ஆலியார் - புறம். 298
7. ஆவூர் கிழார் - புறம். 222
8. ஆவூர் கிழார் மகனார் வெள்ளை கண்ணனார் - அகம். 202
9. ஆவூர் காவிதிகள் சாதேவனார் - அகம். 159, நற். 264
10. ஆவூர் மூலங்கிழார் - அகம். 24, 156, 341, புறம். 38, 40, 166, 177, 178, 196, 261, 301
11. இடைக்காடனார் - அகம். 139, 194, 274, 284, 304, 374, குறு. 251. நற். 142, 316, புறம். 42.
12. இரும்பிடர்த்தலையார் - புறம். 3
13. உறையூர் இளம்பொன் வாணிகனார் - புறம். 264
14. உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் - புறம். 13, 127, 135, 374, 375
15. உறையூர் கதுவாய்ச் சாத்தனார் - நற். 370
16. உறையூர் சல்லியங் குமரனார் - குறு. 309
17. உறையூர்ச் சிறுகந்தனார் - குறு. 257
18. உறையூர் பல்காயனார் - குறு. 374
19. உறையூர் மருத்துவன் தாமோதரனார் - அகம். 133, 257, புறம். 60, 170, 321
20. உறையூர் முதுக்கண் சாத்தனார் - குறு. 133, புறம். 27, 30, 325
21. ஐயர் முடவனார் - அகம். 216, குறு. 123, 206, 322, நற். 206, 334, புறம். 51, 228, 314, 399

22. ஐயர் மூலங்கிழார் - புறம். 21
23. கடலூர்ப் பல்கண்ணனார் - நற். 380
24. காவிரிப்பூம்பட்டினத்துக் கந்தரத்தனார் - குறு. 342
25. காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் - அகம். 107, 123, 285, குறு. 297. நற். 237, புறம். 57, 58, 169, 171, 353
26. காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார் - அகம். 103, 271, நற். 389.
27. காவிரிப்பூம்பட்டினத்துச் சேந்தன் கண்ணன் - குறு. 347
28. காவிரிம்பூம்பட்டினத்துப் பொன்வணிகனார் மகனார் நப்பூதனார் - பத்து முல்லைப்பாட்டு
29. கிடங்கில் காவிதிக் கீரங்கண்ணனார் - நற். 218
30. கிடங்கில் காவிதிப் பெருங்கொற்றனார் - நற். 364
31. கிடங்கில் குலபதி நக்கண்ணனார் - குறு. 252
32. குடவாயிற் கீரத்தனார் - அகம். 44, 60, 79, 119, 129, 287, 315, 345, 366, 385, குறு. 79, 281, 369, நற். 27, 42, 212, 379, புறம். 242
33. கொள்ளம் பக்கனார் - நற். 147
34. கோக்குளமுற்றனார் - குறு. 98, நற். 96
35. கோப்பெருஞ்சோழன் - குறு. 20, 53, 129, 147, புறம். 214, 215, 216
36. கோவூர்கிழார் - குறு. 65, நற். 393, புறம். 31, 32, 33, 41, 44, 45, 46, 47, 68, 70, 308, 373, 382, 386, 400
37. சல்லியங்குமரனார் - நற். 141
38. செம்பியனார் - நற். 102
39. செல்லூர் கிழார் மகனார் பெரும்பூதங் கொற்றனார் - அகம். 250, குறு. 218, 358, 363, நற். 30
40. செல்லூர் கோசிகன் கொற்றனார் - அகம்.66
41. சோணாட்டு முகையலூர்ச் சிறுகருந்தும்பியார் - புறம். 185, 265

42. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் - புறம். 173

43. சோழன் நல்லுருத்திரன் - புறம். 190

44. சோழன் நலங்கிள்ளி - புறம். 73, 75

45. தாயங்கண்ணனார் - அகம். 105, 132, 149, 213, 237, 319, 357, குறு. 319, நற். 219, புறம். 356, 397

46. தாயங்கண்ணியார் - புறம். 250

47. துறையூர் ஓடைகிழார் - புறம். 136

48. நல்லாவூர் கிழார் - அகம். 86, நற். 154

49. நெய்தற் சாய்த்துய்த்த ஆவூர்கிழார் - அகம். 112

50. பெருந்தலைச் சாத்தனார் - அகம். 13, 224, நற். 262, புறம். 151, 164, 165, 205, 209, 294

51. பேரெயின் முறுவலார் - குறு. 17, புறம். 239

52. பொத்தியார் - புறம். 217, 220, 221, 222, 223

53. மாங்குடி மருதனார் - அகம். 89, குறு. 164, 173, 302, நற். 120, 123, பத்து மதுரைக்காஞ்சி, புறம். 24, 26, 313, 335, 372, 396

54. முதுகூத்தனார் - அகம். 137, 329, புறம். 331, குறு. 229, 353, 371, 390, நற். 28

55. வெள்ளை குடி நாகனார் - நற். 158, 196, புறம். 35

முதலிய புலவர்கள் சோழ நாட்டைச் சார்ந்தவர்கள்.

சோழநாட்டின் எல்லை மற்றும் சிறப்பு, சங்க இலக்கியத்தின் வழி அறியலாகும் சோழநாட்டின் ஊர்களான, அம்பர், அரிசில், அழுந்தூர், அழும்பில், ஆடுதுறை, ஆலங்கானம், ஆலங்குடி, ஆவூர், இடைக்காடு, உறந்தை, எருக்காட்டூர், எருமை வெளி, எறிச்சலூர், ஏணிச்சேரி, ஏரகம், ஐயூர், கடம்பனூர், கயத்தூர், கழாஅர், கழுமலம், கள்ளில், காவிரிப்பூம்பட்டினம், குடந்தை, குராப்பள்ளி, குறுக்கை, கழுமலம், துறையூர், நாலூர், நியமம், நீடூர், நெய்தலங்கானல், பிடவூர், பொறையாறு, மிழலை, முகையலூர், வல்லார், வெண்ணி, வேளூர் போன்ற ஊர்களின் சிறப்பு மற்றும் இன்றைய நிலை, சோழநாட்டுப்புலவர்கள் போன்றத்தரவுகள் இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளன.

## அடிக்குறிப்புகள்

1. நீலகண்ட சாஸ்திரி, கே.ஏ.,- சோழர்கள், ப. 26
2. Tanjore Gazetteer 1 p. 15
3. தஞ்சாவூர் கையேடு (Manual), ப.க் 4-5, திருச்சிராப்பள்ளி கையேடு (Manual) பக். 2-3
4. சந்திரசேகரன், மெய், தஞ்சாவூர் மாவட்ட ஊர்ப்பெயர்கள், ப. 192
5. ஆசிரியர் குழு, புகழ் மணக்கும் வைணவத் தலங்கள், ப. 88
6. ஆளவந்தார். ஆர்., இலக்கியத்தியல் ஊர்ப்பெயர்கள், ப. 71
7. மேலது, ப. 73
8. மேலது, ப. 74
9. சத்தியமூர்த்தி, அ.ம., இந்திய இலக்கியச்சிற்பிகள், சதாசிவப்பண்டாரத்தார், ப. 79
10. ஆளவந்தார். ஆர்., மு.கு.நூ., ப. 80
11. சிலம்பு - நாடுகாண் காதை - 219-245
12. மேலது - நாடுகாண் காதை - 1-11
13. துர்காதேவி. கி., சங்கத்தமிழ் நகரங்கள், ப. 18
14. மேலது, ப. 23
15. சேதுப்பிள்ளை, ரா.பி. ஊரும் பேரும், ப. 72
16. ஆளவந்தார். ஆர்., மு.கு.நூ. ப. 87
17. ஸ்ரீ சுப்ரமணிய சேத்திரம் (ஆங்கில நூல்), ப. 5
18. இராசமாணிக்கனார், மா., - பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 78
19. மங்களமுருகேசன், ந.க. அடிகளின் ஆறுபடைவீடுகள், ப. 79
20. ஆளவந்தார். ஆர்., மு.கு.நூ. ப. 97
21. மேலது, ப. 102
22. துர்காதேவி. கி., மு.கு.நூ., ப. 56
23. ஜெயக்குமார், பா., தமிழகத்துறைமுகங்கள், ப. 20
24. இராசமாணிக்கனார், மா. மு.கு.நூ., 28

25. Meerindle Indian Andt query - vol XII p. 332.

26. மணி 5:109-122

27. கனகசபை, வி. ஆயிரதெண்ணூறு ஆண்டுகட்குட்பட்ட தமிழகம், ப. 124

28. ஜெயக்குமார், ப., தமிழகத்துறைமுகங்கள், ப. 25

29. அறுவர், பூம்புகார், ப. 14

30. வேங்கடசாமி, மயிலைசீனி, பழங்கால தமிழர் வாணிகம், ப. 89

31. பிள்ளை. கே.கே., தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், ப. 19

32. ஆளவந்தார். ஆர்., மு.கு.நூ., ப. 110

33. சேக்கிழார் வழியில் சிவத்தலங்கள், ப. 189

34. ஆளவந்தார். ஆர்., மு.கு.நூ., ப. 148

35. சாமி. பி.எல்., இலக்கிய ஆய்வு, ப. 128

36. கலைக்களஞ்சியம், தொகுதி 6, ப. 614

37. சேக்கிழார் வழியில் சிவத்தலங்கள், ப. 78

38. ஆளவந்தார். ஆர்., மு.கு.நூ. ப. 162

39. சத்தியமூர்த்தி, இந்திய இலக்கியச் சிற்பிகள், சதாசிவப்பண்டாரத்தார், ப. 71

40. தி.வை. சதாசிவப்பண்டாரத்தார், ஆய்வுக்கட்டுரைகள், ப. 100

## பாண்டிய நாடும் எல்லையும்

பழந்தமிழ்நாட்டை ஆண்ட மூவேந்தர் பேரரசுக்களைக் காட்டிலும் மூத்த குடியினர் பாண்டியரே ஆவர். இவர்களின் தோற்றம் கூறமுடியாத அளவிற்குத் தொன்மை வாய்ந்ததாகக் கருதப்படுகின்றது. "குமரிக் கண்டத்தில் தோன்றிய ஆதி மனித சந்ததியினரே பாண்டியராக உருப்பெற்றிருக்கலாம் என்பது பொதுவாக நிலவும் கருத்தாகும். இந்து சமுத்திரத்தில் மூழ்கிவிட்டதெனக் கருதப்படும் குமரிக்கண்டத்தில் 72 நாடுகளுக்கும் தலைநகராகத் தென்மதுரை விளங்கியது. தென்மதுரை கடற்கோளினால் அழிவுற்ற பிறகு, அழியாது எஞ்சியிருந்த நாடுகளின் தலைநகராகக் கபாடபுரம் விளங்கியது. இரண்டாம் கடற்கோளினால் அந்நாடும் அழிவுற்ற பிறகு தற்போதுள்ள மதுரை பாண்டியர்களின் தலைநகராயிற்று."[1]

## பாண்டிய நாட்டின் எல்லைகள்

பாண்டிய நாடு தமிழகத்தின் தென்கோடியில் கிழக்கே வங்காளவிரிகுடாக் கடலையும், தெற்கே குமரிக்கடலையும் மேற்கே அரபிக்கடலையும் எல்லைகளாகக் கொண்டிருந்தது. "யவனர் இம்மூன்று கடல்களையும் செங்கடல் என்னும் பொருட்பட எரித்திரையக்கடல்"[2] என்று அழைத்தனர். பாண்டியநாட்டுக்கும் இலங்கைக்கும் இடையில் கடல் உள்ளது. இராமேசுவரத்திற்கு வடபால் உள்ள கடற்பகுதி 'பாக்' கடலிணைப்பு என்னும் தெற்கிலுள்ள சிறுபகுதி 'மன்னார் வளைகுடா' என்றும் வழங்கப்படுகின்றன. "இக்கடற் பகுதியைப் பெரிபுளூஸ் நூலில் 'ஆர்கலஸ்' (Argalus) என்றும் தாலமி ஆர்கலிக்கடல் (orgalic sea) என்றும் குறிப்பிடுகின்றனர். இதனால் 'ஆர்கலிக்கடல்' என்னும் பெயர் இப்பகுதிக்கு வழங்கியதாகக் கொள்ளலாம்."[3]

இப்போது இராமேசுவரம் இருக்கும் பாம்பன்தீவு முற்காலத்தில் பாண்டிய நாட்டோடு இணைந்திருந்தது. நானூறு ஆண்டுகளுக்கு முன் போர்ச்சுகீசியர் வந்து வாணிகம் செய்த காலத்தில் பெரும்புயல் ஒன்று அடித்து இந்நிலப்பகுதி கரைந்து தீவாக உருக்கொண்டது. ஆகையால் சங்க காலத்தில் இந்தத் தீவு பாண்டிய நாட்டோடு இணைந்திருந்தது. "பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் இப்போதுள்ள இலங்கைத்தீவும் பாண்டிய நாடும் இணைந்து ஒரே நிலப்பரப்பாக இருந்தது"[4]

கன்னியாகுமரிக்குத் தெற்கிலும் கிழக்கிலும் அக்காலத்தில் நிலங்கள் இருந்தன. பின்னர் அவ்வப்போது தோன்றிய புயல்களினாலும் கடல் கொந்தளிப்பினாலும் கரைந்தும் சிதைந்தும் அந்நிலப்பகுதிகள் மறைந்து போயின. இப்பொழுது இலங்கை என்று வழங்கப்பெறும் நிலப்பகுதி சங்க காலத்தில் 'ஈழம்' எனப் பெயர் பெற்றிருந்தது.

இலங்கை தனியாகப் பிரிந்துபோன பிறகும் எஞ்சியிருந்த நிலப்பகுதிகளில் பல கொஞ்சம் கொஞ்சமாகக் கடலில் மூழ்கிப்போயின. மூழ்கிப்போன பகுதிகளில் பல பாண்டியருடைய ஆட்சியில் இருந்தன. "பாண்டிய அரசர்கள் அமைத்திருந்த தலைச்சங்கம், இடைச்சங்கம் என்ற இரண்டு தமிழ்ச்சங்கங்களும் கடலில் மூழ்கிப்போன நாட்டில் இருந்தன என்று பழைய செவிவழிச் செய்தி கூறுகிறது."[5]

சிலப்பதிகாரமும் கலித்தொகையும் இறையனார் அகப்பொருள் உரைப்பாயிரமும் பாண்டிய நாட்டின் தெற்கே பரவியிருந்த நிலப்பகுதிகள் கடலில் மூழ்கிப் போனதைப் பற்றிக் கூறுகின்றன.

*ப஁றுளி யாற்றுடன் பன்மலை அடுக்கத்துக்*
*குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள* (சிலப். 11:19-20)

*மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவரின்*
*வெலிவின்றி மேற்சென்று மோவர் நாடு இடம்படப்*
*புலியொடு வில்நீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை*
*வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்* (கலி. 104:1-4)

*அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்து கடல் கொள்ளப்பட்ட*
*மதுரையும் கபாடபுரமும் என்ப*[6]

"இலங்கை வரலாற்றைக் கூறும் மகாவம்சம் இச்செய்தியை வலியுறுத்துகிறது"[7] அக்காலத்தில் குமரித்துறை புண்ணிய தீர்த்தமாகக் கருதப்பட்டது. "கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் குமரித்துறையில் இருந்து இலங்கைப்பக்கமாகக் கடலில் இடையிடையே பாறைகற்கள் காணப்பெற்றதை மணிமேகலை கூறுகிறது (மணி. 5:37).

இந்திய நாட்டுமக்கள் காசிக்குச்சென்று கங்கையில் நீராடிய பிறகு குமரித்துறையிலும் நீராடினர், "பாண்டிய நாட்டிற்குத் தெற்கே இலங்கை வரையில்

இருந்து பின்னர் மூழ்கிப்போன நிலம் 'லெமூரியா' என்றும் 'குமரிக்கண்டம்' என்றும் கூறப்படுகின்ற பழங்காலப் பெரிய நிலப்பரப்பு அன்று. இப்பொழுது இந்தியப் பெருங்கடல் என்று கூறப்படுகின்ற பெரிய நிலப்பரப்பு மிகப்பழைய காலத்தில் ஆப்ரிக்காக் கண்டம் முதல் ஆஸ்திரேலியா வரையில் பரந்த பெரிய நிலமாக இருந்தது என்றும் அதற்கு 'லெமூரியா' என்னும் பெயர் வழங்கியதென்றும் பின்னர் அக்கண்டம் மறைந்துபோய் இந்தியப் பெருங்கடல் தோன்றியதென்றும் நிலப்பொதியியல் அறிஞர்கள் கூறுகின்றனர். மிகப் பழங்காலத்தில் இருந்த லெமூரியாக் கண்டம் வேறு; சங்க காலத்தில் கன்னியாகுமரிக்கு அருகிலே இருந்து மறைந்து போன நிலப்பரப்பு வேறு."[8]

### மேற்கு எல்லைப்பகுதி

சங்க காலத்துப்பாண்டிய நாடு மேற்குக்கரைப்பக்கத்தில் இப்போதைய தென் திருவாங்கூர் வரையில் பரவி இருந்தது. பொதிகைமலை நாடும் நாஞ்சில் நாடும், தென் திருவாங்கூர் வரையில் பாண்டிய நாட்டுடன் சேர்ந்திருந்தன. ஆய் என்னும் வேள் அரசர் பொதிகைமலை நாட்டை அரசாண்டார். பாண்டிய அரசர்களைச் சேர்ந்திருந்த ஆய்சிற்றரசர்களின் நாடு மேற்குக் கடற்கரை வரையில் விரிந்து இருந்தது.

### வடக்கு எல்லைப்பகுதி

முதுகோடி (தனுக்கோடி) பாண்டிய நாட்டைச் சேர்ந்திருந்தது.

*வென்வேற் கவுரியர் தொன்முது கோடி* (அகம். 70-13)

தென்வெள்ளாறும் அதன் பகுதியாகிய கொடும்பாளும் பாண்டிய நாட்டின் வட எல்லைகளாகும். கொடும்பாளூரையாண்ட குறுநில மன்னர்கள் இருங்கோவேள் என்பவராவர். கொடும்பாளூர் இன்று புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ளது. திண்டுக்கல் பாறையும் கோடைக்கானல் மலைகளும் பாண்டியநாட்டின் வடக்கே இருந்தன. கோடைக்கானலில் தென்னவன் மறவனான கோடைப் பொருநன் பாண்டியருடைய சேனாதிபதியாக இருந்தனன். "வள்வாய் அம்பின், கோடைப் பொருநன்" (அகம். 13-10) பன்றி மலைகள் எனப்படும் வராக மலைகளும் பாண்டிய

நாட்டின் வடபகுதியில் இருந்தன. அரபிக்கடலை அடுத்திருந்த வேணாடு சங்ககாலத்தில் பாண்டிய நாட்டைச் சேர்ந்திருந்தது. இவ்வாறாகப் பாண்டியநாட்டின் சங்ககால எல்லைகள் அமைந்திருந்தன.

## இன்றைய நிலை

இன்று தமிழகம் மாவட்ட வாரியாகப் பிரிந்த பிறகு திருநெல்வேலி, இராமநாதபுரம், தூத்துக்குடி, சிவகங்கை, திண்டுக்கல், கன்னியாகுமரி, மதுரை போன்ற மாவட்டங்கள் பாண்டிய நாட்டின் சங்ககால ஆட்சிப்பகுதிகளாகும். எனவே சங்க இலக்கியத்தின் ஊடாக அறியப்பெறும் பாண்டிய நாட்டின் ஊர்ப்பெயர்களை விளக்கம் கண்டு அடையாளம் காணும் முறையில் இவ்வியல் அமைகின்றது.

## அதங்கோடு

அதங்கோடு என்னும் ஊரில் வாழ்ந்த ஆசான் அதங்கோட்டாசான் எனப் பெயர் பெற்றார். பிறந்து வாழ்ந்த ஊரால் பெயர்பெற்றவர்கள் சங்க காலப் புலவர்கள் பலர். தொல்காப்பியர் தம் நூலை நிலந்தரு திருவிற் பாண்டியன் அவைக்களத்தில் அதங்கோட்டாசானுக்கு ஐயந்திரிபறத் தெரிவித்தார் என்று பனம்பாரனார் இயற்றிய சிறப்புப்பாயிரம் கூறுகிறது.

“கன்னியாகுமரியிலிருந்து திருவனந்தபுரம் செல்லும் பெருவழியில் உள்ள கல்குளம் வட்டத்தில் உள்ள திருவிதாங்கோடுதான் இந்த அதங்கோடு என்றும், அதங்கோடு என்ற ஊர்ப்பெயரே திரு என்ற சிறப்படையுடன் திருவதங்கோடு என வழங்கப்பெற்றதாகவும், திருவதங்கோடு நாளடைவில் திருவிதாங்கோடு என்று மெல்ல மெல்ல மாற்றம் பெற்றதாகவும் கருதுகின்றனர்.”[9] திருவிதாங்கோடு என்று திரிந்த பெயரே நாட்டின் பெயராகவும் வழங்குகின்றது.

ஆசிரியரை ஆசான் என்று வழங்கும் முறையை இன்றும் கொண்டுள்ள கன்னியாகுமரி மாவட்டத்தைச் சேர்ந்ததே இவ்வூர் என்பது தெளிவு. அதங்கோடு என்ற ஊர் பண்டைக்காலத்தில் சிறப்புடைய பேரூராய் விளங்கியது என்பதற்குரிய அடையாளமாக இவ்வூரில் பழைய கோட்டை, மதில் முதலியன சிதைந்த நிலையில் உள்ளன. அதங்கோடு என்ற பெயருடன் விளவங்கோடு வட்டத்திலும் ஓர் ஊர் உள்ளது.

'கோடு' என்னும் பொதுக்கூறு உச்சி என்ற ஒரு பொருளைத் தரும் சொல். 'அதவம்' என்பது ஒரு மரப்பெயர் என்று குறுந்தொகைப் பாட்டொன்றால் அறிய முடிகின்றது.

*ஆற்று அயல் எழுந்த வெண்கோட்டு அதவத்து*
*எழுகுளிறு மிதித்த ஒரு பழம்போலக்*
*குழைய கொடியோர் நாவே* (குறுந். 24:3-5)

எனவே, அதவங்கோடு என்ற ஊர்ப்பெயர், விளங்கோடு என்பது போல மரப்பெயரால் பெற்ற ஓர் ஊர்ப்பெயர் அல்லது அதவமரங்கள் நிறைந்த மலைப்பகுதி என்னும் பொருளில் பெற்ற பெயராகும்.

*நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து*
*அறங்கரை நாவின் நான்மறை முற்றிய*
*அதங்கோட் டாசாற் கரில்தபத் தெரிந்து* (தொல். சிறப்புப்பாயிரம், 9-11)

அதங்கோடு அதவங்கோடாகத் திரிந்திருக்கலாம் என்பது அறியமுடிகிறது.

**அரையம்**

அரையம் என்ற ஊர்ப்பெயர் கபிலரால் புறநானூற்றுப் பாடலொன்றில் குறிக்கப் பெற்றுள்ளது. பாரி மகளிரை ஏற்றுக்கொள்ளாத இருங்கோவேளை நோக்கிப் பாடிய பாடல்.

இரண்டு பகுதியான பெயரையுடையது (சிற்றரையம், பேரரையம்) என்றும், புகழ்ந்து பாடிய கழாஅத்தலையாரை இகழ்ந்ததனால் அழிவுற்றத்து என்றும் பின்வரும் பாடலில் கூறப்பட்டுள்ளது. அரை என்ற மரப்பெயர் (Ripal) காரணமாக இவ்வூர் அரையம் எனப் பெயர் பெற்றுள்ளது.

*இருபால் பெயரிய உருகெழு மூதூர்*
*கோடிபல அடுக்கிய பொருள் நுமக்கு உதவிய*
*நீடுநிலை அரையத்துக் கேடும்கேள், இனி!*
*நுந்தை தாயம் நிறைவுற எய்திய*
*ஒலியற் கண்ணிப் புலிகடி மாஅல்!*

*நும்போல் அறிவின் நுமருள் ஒருவன்*

*புகழ்ந்த செய்யுள் கழா அத்தலையை*

*இகழ்ந்ததன் பயனே; இயல் தேர் அண்ணல்!* (புறம். 200:6-13)

'இருபால் பெயரிய உருகெழு மூதூர்' என்ற புறநானூற்றுப்பாடலில் சுட்டப்பட்டுள்ள அழிந்துபோன பழைய நகரம் பேரரையம், சிற்றரையம் என இரு பிரிவாக இருந்ததாகப் பழைய உரையாசிரியர் குறிப்பிலிருந்து காணமுடிகின்றது. "அழிந்து பட்ட இந்த அரையம் என்ற பெருநகரம்தான் ஹரப்பா என்ற பி.எல்.சாமியின் கருத்து இருபிரிவாக இருந்த சிந்துவெளி நகரத்தையும், சிந்துவெளி நாகரிகத்தின் சிதைவையும் நினைவுபடுத்துவதாக ஐராவதம் மகாதேவன் கூறியுள்ளார்."[10]

பாகிஸ்தானில் இன்றும் அரை (Arai, Aray,), அரைய (Araia), அரையன் (Araian, Arayan) என்ற இடப்பெயர்கள் வழக்கில் உள்ளன என்பதையும் இவற்றில் அரையன் என்ற ஊர்ப்பெயர்கள் ஹரப்பாவிற்கு மிக அருகில் வழங்குகிறது (ஹரப்பாவின் அட்சரேகை 30.6333 (வ)/தீர்க்கரேகை 72.8666 (கி), அரையனின் அட்சரேகை 32.4950 (வ) / தீர்க்கரேகை 72.3200 (கி) என்பதையும் இவ்வாய்வின் மூலம் பதிவுசெய்ய விரும்புகிறேன்.

## அலைவாய் செந்தில்

அலைவாய், செந்தில் இரண்டு பெயர்களும் திருச்செந்தூரின் பழம்பெயர்கள் என்பது அறிஞர்தம் கருத்து.[11] இந்த இரண்டு பெயர்களும் திருச்செந்தூர் என்பதன் பழம்பெயர்கள் என்று கருத்து சொல்லும் அறிஞர் பலரும் எந்த நிலையில் இரண்டும் ஒரூரைக் குறித்தன. அதற்குரிய சான்றுகள் என்னென்ன? என எதனையும் சொல்லவில்லை. சங்க இலக்கியத்திற்கு உரை எழுதிய உ.வே.சாவும்[12] ஒத்த பாடற்பகுதிகள் எனப் பிற இலக்கியக் குறிப்புகளைக் காட்டுகின்றாரே தவிர விளக்கம் தரவில்லை. ஆய்வாளர்களும் இதனையே தொடர்ந்து எழுதி வருகின்றனர். எனவே இப்பயிற்சிகளை மேலும் மீளாய்வு செய்யவேண்டிய நிலை அமைகிறது.

### அலைவாய்

இப்பெயர் இரண்டு இடங்களில் சங்க இலக்கியங்களில் பயின்று வந்துள்ளது. 1. அகநானூறு 266 ஆம் பாடல், 2. திருமுருகாற்றுப்படை

அகநானூற்றுப் பாடலில் தலைவன் உரைத்த சூள் அதாவது சத்தியம்தான் துன்பத்தைத் தருகிறது எனக்கூறி, அச்சூள் உரைத்த இடமாக அலைவாயினைக் குறிப்பிடுகின்றாள் தலைவி. இதனைப் பரணர்,

*திருமணி விளக்கின் அலைவாய்*

*செருமிகு சேயொடு உற்ற சூளே* (அகம். 266:21-22)

என அமைக்கின்றார்.

அலைவாயிலில் சேயோன் காணப்பட்டுள்ளான். இவன் செருமிகு சேயோனாகக் கருதப்பட்டுள்ளான். திருமணிகளால் செய்யப்பட்ட விளக்குகள் அமைக்கப் பட்டுள்ளன. மலை இருந்துள்ளது. மயில்கள் அருகேயுள்ள மருத நிலங்களில் காணப்பட்டுள்ளன. அவை அங்குள்ள உழவர்களின் ஆரவாரிப்பில் குன்றுகளில் வந்து தங்கின போன்ற பல விளக்கங்களை இப்பகுதி தருகிறது.

மருதநிலமும், உழவர்களின் ஆரவாரமும் இப்பகுதியை வளமிக்கப் பகுதியாகக் காட்டுகின்றன. மேலும் மக்கள் வாழ்வு செம்மையாக இருந்தமையை இங்குள்ள முருகன் கோயில் வழிபாடு, விளக்குகளின் வருணனை, இரவிலும் தெய்வ வணக்கம் இருந்தமை போன்ற செய்திகள் வலியுறுத்துகின்றன.

திருமுருகாற்றுப்படை தரும் அலைவாய் பற்றிய குறிப்பு, இந்த அளவிற்கு விளக்கத்தைத் தரவில்லை எனினும் முருகன் தலம் என்பதனைத் தெளிவாக்குகிறது.

முருகன் அலைவாயிலில் இருக்கும் தன்மையை, ஆறுமுகங்களுடனும், பன்னிரு கைகளுடனும் பல இசைக் கருவிகள் முழங்க, பல்கொடி மஞ்ஞை வெல்கொடி அகவ, விசும்பு வழியாக விரைந்து,

*உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர்*

*அலைவாய்ச் சேறலும் நிலைஇய* (திருமுருகு. 124-125)

பண்புடையவன் என நக்கீரர் சொல்லும் தன்மை தெளிவாக்குகிறது.

இங்கு அலைவாய் என்ற பெயர் குறிப்பிடப்படுகிறது. முருகன் இங்கு நிலைத்துக் காணப்பட்டான் என்பது தெரிகிறது. மேலும் உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர்

அலைவாய் என்று சொல்லும் தன்மையில் அன்றோ அல்லது பண்டைக் காலம் தொட்டோ மக்களால் வழிபடப்பட்ட முருகத்தலமாக இது இருந்திருத்தலும் தெளிவாகிறது.

சங்கப் பாடல்களில் அலைவாய் என்று வரும் இக்குறிப்புகள் தவிர, தொல்காப்பியம் நச்சினார்க்கினியரின் களவியல் உரையில் (சூ. 23) வரும் எடுத்துக்காட்டுப் பாடலும், கச்சியப்பசிவாச்சாரியரின் கந்தபுராணம் கடவுள் வாழ்த்து 13 ஆம் பாடல்.

*சீரலைவாய் வரு சேயைப் போற்றுவோம்*

என்ற அடியும் ந. கல்யாண சுந்தரத்தால் எடுத்துக் காட்டப் படுகின்றன.''[13] செவிவழிச் செய்தியாக இத்தலம் பற்றிய சிறப்புக் கருதி இவர்களால் குறிப்பிடப்பட்டதா? இல்லை இவர்கள் காலத்தும் இப்பெயர் வழங்கப்பட்டதா? இத்தலம் வழிபடப்பட்டதா? என்பன தெளிவு பெறவில்லை. நச்சினார்க்கினியர் தாம் காட்டிய எடுத்துக்காட்டுப் பாடல் யாரால் பாடப்பட்டது என்பதைச் சுட்டவில்லை எனினும்

*வரைவயிறு கிழித்த நிழல்திகழ் நெடுவேல்*
*நிகழ்பூண் முருகன் தீம்புனல் அலைவாய்*

என்ற கருத்து அமைந்த அப்பாடலை நோக்க, இதுவும் தமிழகத்தின் பழம் இலக்கியச் சாயலையே பெற்றிருப்பது போன்று தோற்றம் தருகிறது.

எனவே இக்குறிப்புகளை வைத்து நோக்க, பழந்தமிழகத்தில் அலைவாய் முருக வழிபாட்டுத்தலமாகத் திகழ்ந்திருந்தமை தெளிவாகிறது.

## செந்தில்

செந்தில் என்ற பெயரைப் புறநானூறு மட்டும் சுட்டுகிறது. பாண்டியன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறனை, மதுரை மருதனிள நாகனார் பாடிய பாடல் இது (55) அரசன் நீண்டகாலம் வாழ வாழ்த்தும் புலவர்,

*நீ நீடுவாழி! நெடுந்தகை! தாழ்தீர்*
*வெண்டலை புணரி அலைக்கும் செந்தில்*

*நெடுவேள் நிலைஇய காமர் வியன்றுறை*

*கடுவளி தொகுப்ப ஈண்டிய*

*வடுவாழ் எக்கர் மணலினும் பலவே* (புறம். 55:17-21)

எனச் செந்தில் முருகன் தலமென்பதை எடுத்துரைக்கின்றார்.

கடற்கரை மணலினும் பலகாலம் வாழ வேண்டும் என வாழ்த்தும் புலவர், முருகன் நிலைபெற்று விளங்கும் விருப்பத்திற்குரிய அகன்ற துறையாகிய செந்தில் கடற்கரையை இங்குச் சுட்டுகின்றார்.

எனவே அலைவாய் போன்று வேறு எந்த விளக்கமும் இங்குக் கிடைக்காத நிலையில் இப்பாடலில் செந்தில் முருகன் நிலைபெற்ற விருப்பத்திற்குரிய அகன்ற துறை என்ற கருத்தினை மட்டும் தருகிறது.

இந்நிலையில் இவ்விரண்டு பெயர்களையும் நோக்க, இரண்டும் கடற்கரை சார்ந்த முருகன்தலம் என்ற பொருண்மையில் ஒன்றுபடுவது தெரிகிறதே தவிர, பிற எந்த விளக்கமும் இவை இரண்டும் ஒன்று என்ற எண்ணத்திற்கு அரணாக இல்லை. எனவே எந்த நிலையில் இவற்றை ஒன்றென எண்ணினர் என்பதும் புலப்படவில்லை.

இங்குச் 'செந்தில் நெடுவேள் நிலைஇய' என்று அமையும் நிலையில், செந்திலாகிய நெடுவேள் நிலை பெற்ற கடற்கரை எனவும் பொருள் கொள்ளலாம். ஆயின் செந்தில் என்பது அன்று முருகனைக் குறித்து வழங்கியதா எனக்காண வேண்டும். சிலப்பதிகாரம், குன்றக்குரவையில் முருகன் தலங்கள் பற்றிப் பேசும் இளங்கோவடிகள்,

*சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்*

*ஏரகமும் நீங்கா இறைவன் கைவேலன்றே* (சிலப். 24.8.1-2)

எனக் குறிப்பிடுவதால் இங்குச் செந்தில் முருகனின் பெயராக அன்று சுட்டப்படாமல் தலப்பெயராகக் குறிக்கப்பட்டமை தெரிகிறது.

சங்க இலக்கியம் தரும் இவ்வூர்ப் பெயர்கள் பற்றிய விளக்கங்கள் இவையே. இவற்றைக் கொண்டு இவை இரண்டும் திருச்செந்தூரின் பழம்பெயர்கள் என்பதை எவ்வாறு உறுதியாகக் கூறுவது என்பது சிந்தித்தற்குரியது.

எனினும் செந்தில் திருச்செந்தூரின் பழம்பெயராக இருக்கலாம் என்பது இப்பெயர் சுட்டும் ஓர் எண்ணம். செந்தில் + ஊர் = செந்திலூர் முருகனின் சிறப்புக் காரணமாக, திருஅடை அணைந்து, திருச்செந்திலூர் பின்னர்த் திருச்செந்தூர் ஆக வாய்ப்பு உள்ளது.

## தொடர்பான பிற செய்திகள்

அலைவாய் என்ற பெயரினைத் திருச்செந்தூருடன் தொடர்புபடுத்தி உரைத்தலுக்கு வாய்ப்பு இல்லாத நிலையில் இவை குறித்து மேலும் சில எண்ணங்கள் ஆய்விற்குரியனவாக அமைகின்றன.

1. அலைவாய்க் கரை என்ற பெயர்
2. அலைவாய் என்பது கபாடபுரத்தின் பெயராகச் சுட்டப்படும் தன்மை
3. இன்றைய திருச்செந்தூர் கோயில் முன்பு சிவன் கோயிலாக இருந்தது என்ற கருத்து.
4. அலைவாய் என்ற சொல் பற்றிய ஆய்வு

தன்னுடைய ஆய்வில் 'அலைவாய்க் கரை' என்ற பெயர் இன்றும் அருகேயுள்ள வீரபாண்டிய பட்டின மக்களால் வழங்கப்படுகிறது என்கிறார் ந. கல்யாண சுந்தரம்."[13]

நாட்டுப்புறப் பாடல்களிலும் அலைவாய்க்கரை என்று திருச்செந்தூர் சுட்டப்படுகிறது."[14]

எனவே அண்மைக் காலத்திலும் மக்களிடம் மரபாக இவ்விரண்டும் ஒன்று என எண்ணும் மனப்போக்கு இருந்து வருவதைக் காண்கின்றோம்.

திருச்செந்தூர் முருகன் கோயில் வரலாற்றை ஆய்வு செய்த ந. கல்யாண சுந்தரம். "தமிழ் இலக்கிய வரலாற்றாசிரியர் எம்.எஸ். பூரணலிங்கம் இரண்டாம் தமிழ்ச் சங்கமிருந்த இடம் கபாடபுரம் எனக் குறித்துப் பிறைக் கோட்டுள் அலைவாய் எனக் குறித்துள்ளார்" என்றதொரு எண்ணத்தைத் தருகிறார்.[15] எனவே கபாடபுரத்திற்கு அலைவாய் என்ற பெயருண்டு என்ற கருத்து இங்கு வெளிப்படுகிறது. மேலும் 'குன்று

எறிந்த குமரவேள் சங்கத்தில் இருந்ததை நக்கீரர் குறிப்பிடுகின்றார்' போன்ற செய்திகளை எல்லாம் சொல்லி, 'கபாடபுரத்தின் பகுதியாக இவ்வூர் விளங்கியிருக்கலாம்[16] எனத் திருச்செந்தூர் பற்றிய தம் சிந்தனையை உரைக்கின்றார். எனவே எம்.எஸ். பூரணலிங்கம் குறிப்பிட்ட கபாடபுரத்தின் இன்னொரு பெயர் அலைவாய் என்பதற்குரிய வேறு ஏதேனும் சான்றுகள் கிடைக்கின்றதா எனக் காணல் வேண்டும்.

மதுரைக்கு மற்றொரு பெயர் கூடல். தவிர ஆலவாய் என்றதொரு பெயரும் சுட்டப்பட்டது. இந்த ஆலவாய் பற்றிய ஆராய்ச்சி இது அலைவாயின் திரிபாக இருக்கலாம் என்ற ஊகத்தினைத் தந்தது. எனவே கபாடபுரத்திற்கு அலைவாய் என்றதொரு பெயர் இருந்தது என்பது தெளிவானால் மதுரையின் இன்னொரு பெயராகச் சுட்டப்பட்ட ஆலவாயிலுடன் இதனை இணைத்து நோக்கலாம். இரண்டாம் சங்கம் இருந்து கடல்கொள்ளப்பட்டதாகச் சுட்டப்படும் கபாடபுரம் பெற்றிருந்த அலைவாயில் என்ற பெயரை மூன்றாம் சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த, கூடல்நகருக்குப் பழைமையின் நினைவாகத் தமிழர் சூட்டியிருக்கலாம். இவை அனைத்தும் மேலும் சான்றுகள் கிடைக்கும் வரையிலும் ஊகங்களாகவே நிற்றல் இயலும்.

இன்றைய திருச்செந்தூர் முருகன் கோயில் முதலில் சிவன் கோயிலாக இருந்தது என்ற எண்ணமும்[17] வேறுபட்ட எண்ணங்களும்[18] அறிஞர்களால் எடுத்தியம்பப் படுகின்றன.

எனவே திருச்செந்தூர் கோயிலின் வரலாறு, இக்கோயில் கட்டப்பெற்ற ஆண்டு, இக்கோயில் தொடர்பான ஆண்டுவாரியான கல்வெட்டுகள், இலக்கியச் சான்றுகள் போன்றவற்றை முறையாக, காலவாரியாக ஆராயின்தான் இக்கோயில் பற்றியும், இத்தலம் பற்றியும் உண்மையான வரலாற்றை அறிதல் இயலும்.

இவற்றுடன், அலைவாய் என்ற பெயரின் சொல் ஆய்வும் இவ்வாய்வுக்கு மிகவும் தேவையான ஒன்று.

பண்டைத் தமிழகத்தில் நிலத்திற்கு ஏற்பவும் பல விதமான அந்தந்த இயற்கைச் சூழலுக்கு ஏற்பவும், இடம், ஊரின் பெயர் சூட்டும் மரபு இருந்ததை ஊர்ப்பெயர் வரலாறு

தருகிறது. இந்நிலையில், ஆற்றங்கரை, கடற்கரைசார்ந்த நெய்தல் பகுதிகளும் பெயர் பெற்றன. கரை, துறை, பாக்கம், பட்டினம் போன்றன அவற்றுள் சில. ஆயின் இங்கு அலைவாய், செந்தில் இரண்டு பெயர்களும் கடற்கரை ஊர்கள் பெற்ற பெயர்களாகச் சுட்டப்படினும் இரண்டும் நெய்தல் நிலப்பகுதியைக் குறித்த பிற பொதுப் பெயர்களைப் போன்று அமையாது சிறிது வேறுபாட்டுடன் அமைகின்றன. வாய், இல் என்ற பொதுக் கூறுகளை இவை கொண்டு இலங்குகின்றன.

வாய் என்ற பொதுக் கூறினைப் பல பெயர்களில் நாம் காணமுடியாவிடினும், வாயில் என்ற பொதுக் கூறு கொண்ட பல ஊர்ப்பெயர்களைக் காணமுடிகின்றது. ரா.பி. சேதுப்பிள்ளை இப்பெயர் பற்றிக் கூறும்போது வாயில் என்பதற்கு இல்லின் வாய், வீட்டின் வாய் என்பது பொருள் என்று கூறுகின்றார். குடவாயில், குணவாயில், மேலவாசல், தலைவாசல், புன்னைவாயில், பிலவாயில் என வாயில் இடம்பெறும் ஊர்ப்பெயர் களையும் எடுத்துக் காட்டுகின்றார்.[19]

எனவே இந்நோக்கில் அலைவாயினை நோக்க அலையை வாயிலாகக் கொண்டது என்ற பொருள் அமைகிறது. அலையை வாயிலாக உடையது என்ற பொருள், ஊர் அல்லது இடம் என்பதற்குப் பொருந்துவதைவிட, இங்குக் கோயிலின் வாயில் எனக் கொண்டால் மேலும் பொருத்தமானதாக அமையும் எனத் தோன்றுகிறது (குமரி அம்மன் கோயில் வாசல் கடலை நோக்கி அமைந்திருப்பது ஒப்பு நோக்குதற்குரியது). எனவே முருகன் கோயிலின் வாசல் அலையை நோக்கியதாக அதன் அருகாமையில் அமைந்த காரணம் கருதி முருகன் கோயிலே அலைவாய் என்று அழைக்கப்பட்டு இருந்திருக்கலாமோ என்ற கோணத்திலும் இதனை அணுகலாம். இப்பொருளில் பாடற் பயிற்சிகளை நோக்கவும், இக்கருத்துப் பொருந்தக் காண்கின்றோம்.

*உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர்*

*அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பே....* (திருமுருகு. 124-125)

*திருமணி விளக்கின் அலைவாய்ச் செருமிகுசேய்* (அகம். 266:21-22)

*திகழ்பூண் முருகன் தீம்புனல் அலைவாய்*

(நச்சினார்க்கினியரின் எடுத்துக்காட்டுப் பாடல்)

மேலும், இங்கு Pre-Pallvan Tamil Index-இல் செந்தில் என்பதற்கு அளிக்கப்படும் பொருள் அரணாக அமைவதையும் சிறப்பாகக் குறிப்பிடலாம்.

Centil-Tiruccentur

Murugan has a shore temple there, known as (Tiru) Siralaivai

Tirumurugarrupatai, puram 55-18, Silap-xxiv-47

இந்நிலையில் பண்டைத் தமிழகத்தில் புகழ் பெற்றிருந்த சீரலைவாய், நக்கீரரால் ஆற்றுப்படைத் தலமாகச் சுட்டப்பட்ட சீரலைவாய் பின்னர் தம் செல்வாக்கு இழக்க நேர்ந்ததன் காரணம் என்ன? அருகருகேயிருந்த இரண்டு தலங்களில் ஒன்றாகிய அலைவாய்க் கோயில் கடல் கொள்ளப்பட, செந்தில் புகழ்பெறத் தொடங்கியதா? போன்ற பல கேள்விகள் இங்கு எழுகின்றன.

எனவே முற்கூறியபடி, இக்கோயிலின் வரலாறு, கோயில் இருக்கும் தலத்தின் வரலாறு, அருகாமைப் பகுதி வரலாறு குறிப்பாகக் கபாடபுரம் போன்றனவற்றை எல்லாம் காலமுறையிலான ஆய்வுக் கண்ணோட்டத்தில் மேலும் ஆய்வுச்செய்ய வேண்டியுள்ளது.

**அள்ளூர்**

நன்முல்லையார் என்ற சங்ககாலப்புலவர் இவ்வூரினராதலின் அள்ளூர் நன்முல்லையார் என ஊரால் பெயர் பெற்றார். இவர் பெண்பாற் புலவர். குறுந்தொகை 32, 67, 68, 93, 96, 140, 157, 202, 237 ஆகிய பாடல்களும், அகநானூறு 46-ஆம் பாடலும் புறநானூற்று 306-ஆம் பாடலும் அள்ளூர் நன்முல்லையார் பாடியவை.

அள் என்ற சொல் செறிவு என்னும் பொருளது. நெல் செறிந்த ஊர் அள்ளூர் எனப் பெயர் பெற்றுள்ளது. ''பிண்டட நெல்லின் அள்ளூர்'' என்ற அகநானூற்றுப் பாடல் அடி இதை வலியுறுத்தும்.

*ஒளிறுவாள் தானைக் கொற்றச் செழியன்*
*பிண்ட நெல்லின் அள்ளூர் அன்ன என்*
*ஒண்டொடி நெகிழினும் நெகிழ்க* (அகம். 46:13-15)

பாண்டியனின் அள்ளூர் நெற்குவியலையுடையது என்றும் அவ்வூர் போன்ற நலமுடையவள் தலைவி என்றும் பெண்ணின் நலம் பாராட்டப்பெற்றுள்ளது.

அள்ளூர் என்ற பெயரில் தஞ்சை மாவட்டத்தில் ஓர் ஊர் உள்ளது. சங்க இலக்கியத்தில் குறிப்பிட்டுள்ள அள்ளூர் சிவகங்கை மாவட்டத்தில், சிவகங்கை வட்டத்தில் உள்ளது மேலும் இவ்வூரில் கிடைத்த பழமையான கல்வெட்டு (S.I.I. Vol.xviii No. 522) இவ்வூரின் தொன்மையை உணர்த்துகிறது.

**ஆய்குடி**

ஆய் என்ற குலத்தில் வந்த ஆய் அண்டிரன் என்னும் வள்ளலின் ஊர் ஆய்குடி. இவ்வூர் பொதியமலை நாட்டைச் சார்ந்தது. பொதியமலை என்பது பழனி மலையைக்குறிக்கும். பழனிக்கு அருகில் இன்றும் இவ்வூர் உள்ளது. பழனி திண்டுக்கல் மாவட்டத்தைச் சார்ந்துள்ளது.

தெற்கில் ஆய்குடி என்ற ஒன்று இல்லையாயின் இந்தப் பரந்த உலகமே கீழ் மேலதாகி நிலைகுலையும் என்கிறார் முடமோசியார் என்ற புலவர்.

*தென்திசை ஆஅய்குடி இன்றாயின்*
*பிறழ்வது மன்னோ, இம் மலர்தலை உலகே* (புறம். 132:8-9)

ஆய் அண்டிரன் ஆண்டநாடு மலைநாடு என்பதை,

*ஆஅய் நல்நாட்டு அணங்குடைச் சிலம்பில்* (அகம். 198-14)

என்றும்,

வாழைப் பூங்கண்ணி வாய்வாள் அண்டிரன்
*குன்றம் பாடின கொல்லோ* (புறம். 131:2-3)

என்ற அடிகளாலும் அம் மலைப் பொதியிலே இருந்தது என்பதை,

*கழல் தொடி ஆஅய் மழை தவழ் பொதியில்* (புறம். 28-5)

என்ற அடிகளால் தெளிவாக உணரலாம்.

ஆய் அண்டிரன் காலத்தில் சிறந்திருந்த ஊர் ஆய்குடி என்ற இவ்வூரில் கிடைத்த கல்வெட்டு (S.I.I. Vol.v No. 726) தெரிவிக்கின்றது. அண்டிரன் ஆயர்குடியினன். இவனுடைய குலத்தினராகிய ஆயர்கள் வாழ்ந்த பகுதியாக இது இருந்திருக்கிறது. எனவே ஆயர்குடி என்பது ஆய்குடியாக மருவியுள்ளது.

### ஆவினன் குடி

ஆவிக்கோமானின் குடியினர் வாழ்ந்த ஊர் 'ஆவிக்குடி' என வழங்கப்பெற்று நாளடைவில் ஆவிநன்குடி என்றாகியுள்ளது.[20]

ஆவிக் கோமானுக்குரிய நகர் பொதினி என்று மாமூலனார் குறிப்பிடுகின்றார்.

*முருகன் நற்போர் நெடுவேள் ஆவி*
*அறுகோட்டு யானைப் பொதினி ஆங்கண்* (அகம். 1:3-4)

என்றும்,

*குழவு உறழ் திணிதோள் நெடுவேள் ஆவி*
*பொன்னுடை நெடுநகர்ப் பொதினி அன்ன* (அகம். 61:15-16)

என்று அகநானூற்றில் இரண்டு இடங்களில் பொதினியைக் குறிப்பிடுகின்றார். இவ்விரு இடங்களிலும் இவ்வூர் நெடுவேளாவிக்குரிய நகராகவே குறிப்பிடப்படுகின்றது. ஆவினன் குடி என்ற பெயர் திருமுருகாற்றுப்படையில் குறிக்கப்படுகிறது.

*தாவில் கொள்கை மடந்தையொடு சின்னாள்*
*ஆவினன்குடி யசைதலு முரியன்* (திருமுருகு. 175-176)

திருமுருகாற்றுப்படை சங்க இலக்கியத்துள் காலத்தால் பிற்பட்டது என்ற கருத்துப்படி அணுகினால் ஆவியர் தலைவர் இருந்து அரசாண்டமை பற்றிப் பொதினி, ஆவினன்குடி என்ற மற்றொரு பெயரில் வழங்கத் துவங்கிப் பழைய பெயரை இழந்துவிட்டது எனலாம்.[21] பொதினி என்ற பெயர் பிற்கால எழுத்துச்சான்றுகள் எவற்றிலும் காணப்படவில்லை.

'இளநீர் - இளநி, பதநீர் - பதனி என்றும் வழங்கினார் போல பொதிநீர் என்பதே பொதினி என்றாவது' என்கிறார் மொ. அ. துரையரங்கனார்.[22] 'பொதினிமலை மரங்கள் நிறைந்து விளங்கியதால் பழங்களும் நிறைந்திருந்தன; பழத்தில் பொதிந்த நிரையொட்டிப் பொதினி எனப்பட்டது' என்கிறார் அவர்.[23]

பொதியம், பொதியில் என்ற பெயருடைய மலைகள் இருந்ததைச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.[24] எனவே பொதினி என்பதுவும் மலையினைக் குறித்து ஏற்பட்ட பெயராகலாம். பொதிந்து அல்லது செறிந்திருக்கும் மலையின் இயல்பையொட்டிப் பொதி என்ற வேர்ச்சொல் மலையினைக் குறிக்கலாம்.

இப்பொதினி என்பதே ஆவிநன்குடி என மாறி இப்பொழுது பழனி என வழங்குகிறது. பழனி என்னும் பெயர் பழனிமலையிலுள்ள சடையவர்மன் வீரபாண்டியனின் (கி.பி. 1253-1274) கல்வெட்டில் முதன் முதலாகக் குறிக்கப்படுகிறது.[25] 'பழநீர் என்பதே பழனி என்றானது' என்கிறார் மொ. அ. துரையரங்கனார்.[26] எனினும் வயல்களைக் குறிப்பிடும் பழனம் என்பதையொட்டிப் பழனி என்றாயிருக்கலாம் (தஞ்சை மாவட்டத்தில் பழனம் என்பதையொட்டிய திருப்பழனம், பழனக்குடி என்னும் ஊர்கள் உள்ளன). மேலும் 15-ஆம் நூற்றாண்டினரான அருணகிரிநாதரின் திருப்புகழிலும்[27] 17-ஆம் நூற்றாண்டில் எழுந்த வையாபுரிப்பள்ளிலும்[28] பழனி, பழனாபுரி என்று பாடப்பெற்றுள்ளது இக்கருத்தை உறுதி செய்கிறது.

ஆவினன்குடி என்ற பெயர் இடைக்காலத்தில் மறைந்து 'சித்தன் வாழ்வு' என்ற பெயர் வந்துவிட்டது என்பது 'இனிச் சித்தன் வாழ்வென்று சொல்லுகின்ற ஊர் முற்காலத்து ஆவியன்குடி என்ற பெயர் பெற்றதென்றுமாம்' என்ற நச்சினார்க்கினியரின் உரையிலிருந்து தெரிகின்றது.[29] சித்தன் என்பது பிள்ளையாரைக்குறிக்குமென்று அவர் மேலும் குறிப்பதால், இப்பெயர் பிள்ளையார் வணக்கம் சிறப்புப் பெற்ற 7ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட காலத்தில் ஏற்பட்டிருக்கலாம்.

சங்ககாலத்தையடுத்து முருக வணக்கம் சிறப்புக்குன்றி மீண்டும் 13, 14 ஆம் நூற்றாண்டுகளுக்குப்பின் சிறப்புப் பெற்றமையால் முருகன் உறையும் பதியாகக் குறிக்கப்பெற்ற ஆவினன்குடி என்ற பெயர் இடையே மறைந்து, மீண்டும் கந்தபுராணம், திருப்புகழ் போன்றவற்றில் குறிக்கப்பெறுகின்றது.[30] இலக்கிய வழக்கில் ஆளப்பட்ட ஆவினன்குடி என்ற பெயர் 'திரு ஆவினன்குடி' என்று சிறப்பு குறித்த அடைபெற்று இன்றளவும் பழனியைக் குறித்து வழங்குவதால், சங்ககாலத்து ஆவினன்குடியே இன்றைய பழனி எனலாம். பொதினி என்பது மலையினையொட்டிய பெயராயின் பழனியில் மலையுள்ளதால் சங்க காலத்துப் பொதினியே இன்றைய பழனி என்பது மேலும் உறுதிப்படுகிறது.

பழனிக்கு வையாபுரி என்ற மற்றொரு பெயரும் சிறு வழக்காக உள்ளது. வையாவிக்கோப்பெரும் பேகன் என்பான் பெயரால் இப்பெயர் உண்டாகியதென்றும் வையாவிப்பேரூர் அல்லது வையாவிபுரி என்ற பெயர் இவ்வாறு திரிந்திருக்கலா மென்றும் மொ.அ. துரையரங்கனார் கூறுகிறார்.[31] கல்வெட்டுகளில் பழனி சார்ந்த பகுதிகள் வைகாவூர்நாடு எனக்குறிக்கப்படுகின்றன. வையாவியூர் என்பது வையாவூர் என மாறிப்பின் வைகாவூர் என மாறியிருக்கிறது. (வையை-வைகை என்றும் பொதியை - பொதிகை என்னும் மாறியுள்ளது காண்க). வையாவூர் என்பது வடமொழியாக்கமாக வையாபுரி என மாறியிருக்கிறது.

## இருந்தையூர்

இறைவன் அடியார்களுக்குக் காட்சியளிக்கும் திருக்கோலங்களால் சில ஊர்கள் பெயர் பெற்றுள்ளன. சென்னைக்கும் அரக்கோணத்திற்கும் இடையில் 'நின்றவூர்' என்னும் ஊர் உள்ளது. அங்குத் திருமால் நின்ற கோலத்தில் காட்சி அளிக்கின்றார். அதனால் அவ்வூர் நின்றவூர் எனப்பெற்றது.

பாண்டியநாட்டில் வைகைக்கரையில் திருமால் இருந்தருளும் கோலத்தைப் பரிபாடல் கூறுகிறது. இவ்வாறு காட்சியளித்த இடம் 'இருந்த வளம்' எனப்பெற்றது சிலப்பதிகாரத்தில் துன்பமாலையில்,

*ஆயர் முதுமக ளாடிய சாயலாள்*
*பூவும் புகையும் புனைசாந்துங் கண்ணியும்*
*நீடுநீர் வையை நெடுமா லடியேத்தத்*
*தூவித் துறைபடியப் போயினாள்* (சிலப். 18:2-5)

மாதிரி குரவைக் கூத்து ஆடிய பின்னர் வையைக் கரையிலிருந்த நெடுமலையின் கோவிலுக்கு வழிபடச் சென்றதாகக் கூறப்படுகிறது. 'வையை நெடுமால் ஸ்ரீ இருந்தவளம் உடையார்' என்று அரும்பத உரையாசிரியர் குறித்துள்ளார்.

இருந்தவளம் என்பதன் சுருக்கமே இருந்தையென்பது. பரிபாடல் திரட்டில் இடம்பெற்ற ஊரும் இதுவே. பின்னர் நாளடைவில் இருந்தையூர் என மருவியுள்ளது.

*மருந்தாடும் தீம்நீர் மலிதுறைமேய*

*இருந்தையூர் அமர்ந்த செல்வ* (பரி. திரட்டு. 1:4-5)

மாதரி வையைக் கரையிலிருந்த நெடுமாலை வழிபடச் சென்றதாகக் கூறப் பட்டுள்ளதால், அந்நெடுமால் கோவில் மதுரைக்கு அண்மையில் இருந்ததாக வேண்டும். திருமால் கிடந்த கோலத்தில் காட்சி அளிக்கும் கோயிலாகக் கூடலழகர் கோயில் இன்றைய மதுரையில் இருக்கிறது. மதுரையில் தெற்கு மாசி வீதியும் மேலை மாசி வீதியும் கூடுகின்ற இடத்திற்கு அருகில் கூடல் அழகர் கோவில் இருக்கிறது. இந்தப்பகுதியே பரிபாடல் திரட்டில் கூறப்படுகின்ற இருந்தையூர் ஆகும். இன்று இவ்வூர்ப்பெயர் மறைந்து தற்கால மதுரையில் ஒரு பகுதியாகவே திகழ்கிறது.

இருந்தையூரில் கொற்றன் என்ற சங்ககாலப் புலவர் ஒருவர் இருந்துள்ளார். அவர் இருந்தையூர்கொற்றன் எனப்பெற்றார். குறுந்தொகை 355-ஆம் பாடல் அவர் பாடியது.

விழுப்புரம் மாவட்டம் திருக்கோவிலூர் வட்டத்திலும் இன்று இருந்தை என்று ஓர் ஊர் உள்ளது.

## இலவந்திகைப்பள்ளி

பாண்டியன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறனைப் புறநானூற்றில் 55, 56, 57, 196, 198 ஆகிய பாடல்களில் முறையே மதுரைமருதன் இளநாகனார், மதுரைக்கணக்காயனார் மகனார் நக்கீரர், காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார், ஆவூர் மூலங்கிழார், வடம வண்ணக்கன் பேரிசாத்தனார் ஆகியோர் பாடியுள்ளனர்.

பாண்டியன் நன்மாறன் இறந்ததாகப் பிற்காலச் சான்றோரால் கூறப்படுகிறான்.[32] இலவந்திகை என்ற சொல் வாவிசூழ்ந்த பொழிலைக் குறிக்கும். பள்ளி நகரமாக அமைய பொழில் அமைந்த நகரமெனப் பெயர் பெற்றுள்ளது. கன்னியாகுமரி மாவட்டம், நாகர்கோவில் அருகில் இலவந்திகைப் பள்ளி உள்ளது.

### ஊணூர்

ஊணூர் தழும்பன் என்ற வள்ளலுக்குரியதாக இருந்துள்ளது (போரில் பெற்ற தழும்பால் பெயர் பெற்றவன் தழும்பன்). இவ்வூர் கடிமதில் வரைப்பினையுடையது. பழைய பல்வேறு நெற்கூடுகளையுடையது.

*இரும்பன்பாண் ஒக்கல் தலைவன்! பெருப்புண்*

*ஏ எர் தழும்பன் ஊணூர் ஆங்கண்*

*பிச்சைசூழ் பெருங்களிறு போல, எம்*

*அட்டில் ஓலை தொட்டனை நின்மே* (நற். 300:9-12)

*பிடிமிதி வழுதுணைப் பெரும் பெயர்த் தழும்பன்*

*கடிமதில் வரைப்பின் ஊணூர் உம்பர்* (அகம். 227:17-18)

ஊணூர் பழைய பல்வேறு நெற்கூடுகளையுடையதாக அறியப்படுகின்றது.

*பழம்பல் நெல்லின் ஊணூராங்கண்* (அகம். 220:13)

தழும்பனுக்கு உரிய ஊர் ஆதலின் தழும்பனூர் என்றும் ஊணூர் கூறப்பட்டுள்ளது.

*வாய் மொழித் தழும்பன் ஊணூரன்ன*

*குவளை உண்கண் இவளை...* (புறம். 348:5-6)

'வாய்மொழித் தழும்பனூர் அன்ன' - என்ற பாட வேறுபாடும் உள்ளது.[33] மதுரை மாவட்டம், உசிலம்பட்டி வட்டத்தில் ஊனூர் உள்ளது.

**ஒக்கூர்**

ஒக்கூர் மாசாத்தனார், ஒக்கூர் மாசாத்தியார் என்ற சங்க இலக்கியப் புலவர்களால் ஒக்கூர் என்ற ஊர் அறிய முடிகின்றது. அகநானூற்றில் 14-ஆம் பாடலையும், புறநூனூற்றில் 248-ஆம் பாடலையும் ஒக்கூர் மாசாத்தனார் பாடியுள்ளார். குறுந்தொகையில் 126, 139, 186, 220, 275 ஆகிய பாடல்களையும், புறநானூற்றில் 279-ஆம் பாடலையும் ஒக்கூர் மாசாத்தியார் என்ற பெண்பாற் புலவர் பாடியுள்ளார்.

ஒக்கல் என்பது சுற்றம் என்று பொருள்படும்.

*தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு*

*ஐம்புலத்தா றோம்பல் தலை* (திருக்குறள், 43)

என்ற திருக்குறளுக்கு உரை விளக்கம் தந்த பரிமேலழகர், ஒக்கல் - சுற்றம் என்று கூறிச்செல்கிறார்.[34] காவிரிப்புகும் பட்டினத்து நகரத்து மரபினர் (செட்டியார்) உறவினர்

(ஒக்கல்) வாழும் ஊர் ஒக்கூர் என ஆயிற்று என ஒரு பொருள் கூறலாம்.[35] மற்றொரு முறையாக ஒக்கும் + ஊர் என்று பிரித்து மற்றொரு ஊரை ஒக்கும் ஊர் என்று பொருள் காணமுடிகின்றது. மாற்று + ஊர் மாத்தூர் என வழங்குவது போல மற்றொரு ஊரை ஒத்திருப்பது எதனை என்று அறிய முடியாது எனினும் ஒக்கூரின் பின்னணியாக அங்கு வாழும் சான்றோர் - புலவர்களைக் கொண்டு ஒருவாறு உணரலாம்.

கல்வி நலஞ்சான்ற இவ்வொக்கூர் மாசாத்தனார் - மாசாத்தியார் பாடல்கள் சங்கப் பாடல்களில் தொகுக்கப்பட்டுள்ளதால், கடல் கோளில் காவிரிப்புகும் பட்டினம் அழியும் முன்பே அதாவது சங்க காலத்திற்கு முன்பே ஒக்கூர் விளங்கியிருக்கிறது.[36] மதுரை மாவட்டம், மதுரை (வடக்கு) வட்டத்தில் ஒக்கூர் உள்ளது.

**ஒல்லையூர்**

ஒல்லை என்ற சொல் பழைமை என்ற பொருளையுணர்த்தும். ஊரின் பழைமை குறித்து ஒல்லையூர் எனப் பெயர் பெற்றுள்ளது. புதுக்கோட்டை மாவட்டத்தில் ஒலிமங்கலம் என்று அழைக்கப்படும் ஊரே ஒல்லையூர் ஆகும்.

*மன்பதைக் காக்கும் நீள்குடிச் சிறந்த*
*தென்புலங் காவலின் ஒரீஇப்பிறர்*
*வன்புலங் காவலின் மாறியாள் பிறக்கும்* (புறம். 71:17-19)

என்ற பாடலடிகள் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் தென்புலங்காவல் புரிந்த மன்னன், பாண்டிய நாட்டவன் என்பதனை உணர்த்துகிறது. எனவே ஒல்லையூர் பாண்டிய நாட்டுப் பகுதி என்பதனையும் குறிக்கிறது. ஒல்லையூர் நாடும் இருந்திருக்கிறது. இதனை,

*ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த*
*வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை*
*முல்லையும் பூத்தியோ, ஒல்லையூர் நாட்டே* (புறம். 242:4-6)

என்று புறநானூறு குறிப்பிடுகின்றது. பாண்டிய நாட்டின் வடவெல்லையில் ஒல்லையூர் நாடு ஒரு சிறு பகுதி. இச்சிறு பகுதியைச் சோழர் பறித்துக் கொண்டனர். பாண்டிய மன்னர்களால் ஒல்லையூர் மீட்க முடியவில்லை. பலமுறை சோழர் மேல் படை

கொண்டு தாக்கினார். வெற்றி கிட்டவில்லை. பூதப்பாண்டியன் பட்டம் பெற்று நாட்டை ஆளத் தொடங்கியதும் முன்னோரைத் தொடர்ந்து ஒல்லையூர் மீட்கப் போரிட்டான், வென்றான். ஆகவே ஒல்லையூர் தந்த (வென்ற) பூதப்பாண்டியன் ஆனான்.[37]

பூதப்பாண்டி என்ற ஊர் பூதப்பாண்டியன் என்னும் மன்னன் பெயரால் வழங்குகிறது. மன்னன் பெயரால் ஊர் பெயர் பெறும் வழக்கிற்கு இது ஒரு சான்று. இவ்வூர் கன்னியாகுமாரி மாவட்டம். நாகர்கோவிலுக்கு அருகாமையில் உள்ளது. அகநானூற்றில் 25-ஆம் பாடலும், புறநானூற்றில் 71-ஆம் பாடலும் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் இயற்றியவை.

ஒல்லையூர்க் கிழான் மகன் பெருஞ்சாத்தன் என்னும் வள்ளல் இவ்வூரைச் சேர்ந்தவன். குடவாயிற் கீரத்தனார் புறநானூற்றில் 242-ஆம் பாடலில் ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தனைப் பாடியுள்ளார்.

### கடியலூர்

கடியலூர் உருத்திரங்கண்ணனார் என்ற சங்க காலப் புலவர் இவ் ஊரினர். குறுந்தொகையில் 352-ஆம் பாடலும், அகநானூற்றில் 167-ஆம் பாடலும் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடியவை ஆகும். திருநெல்வேலி மாவட்டம் திருநெல்வேலி வட்டத்தில் கடியலூர் உள்ளது.

### கள்ளூர்

கடுவன் மள்ளனார் கள்ளூர் என்னும் ஊரைக் குறிப்பிடுகின்றார்.[38] மருத்ததிணைப் பாடலாக அமைந்துள்ள அவர் பாடலில்,

*தொல்புகழ் நிறைந்த பல்பூங் கழனி*
*கரும்பமல் படப்பைப் பெரும்பெயர்க் கள்ளூர்* (அகம். 259:14-15)

என்று கள்ளூர் மருதவளம் சிறந்ததாகக் குறிப்பிடப்படுகிறது. மேலும் தோழி தலைமகற்கு வாயில் மறுத்தது என்ற துறையில் பாடப்பெறும் இப்பாடலில் தலைவன் பரத்தையோடு வையையில் நீர்விளையாடினான் என்றும் பாடப்பெற்றுள்ளது. இவற்றிலிருந்து இவ்வூர் வையையாற்றினையொட்டிய மருத நிலங்கள் சூழ்ந்த இடத்தில் இருந்தது தெரிகின்றது.

தென்கரையிலுள்ள சேந்தன்செழியனின் (கி.பி. 620-650) கல்வெட்டு இவ்வூரைச் ‘சேந்தனேரிக் கட்டிக்கள்ளூர்’ என்று குறிப்பிடுகின்றது.[39] சேந்தன் ஏரி கட்டுவித்ததால் இவ்வூர் சேந்தனேரிக் கட்டிக்கள்ளூர் எனப்பட்டிருக்கவேண்டும். சடையவர்மன் சோழபாண்டியனின் கல்வெட்டு (கி.பி. 1065) ‘கட்டிக்கள்ளூர்’ என்று குறிப்பிடுகின்றது.[40] சோழப் பிரதிநிதியின் கல்வெட்டு ஆதலின் பாண்டியர் பெயரை விட்டிருக்கவேண்டும்.

தென்கரை, கடுவன் மள்ளனார் காட்டும் சூழலுக்கேற்ப அமைந்திருப்பதாலும் சேந்தனேரிக் கட்டிக்கள்ளூர், கட்டிக்கள்ளூர் என்னும் பெயர்கள் இவ்வூருக்குரிய பெயர்களாகக் கல்வெட்டுக்களில் இடம்பெறுவதாலும் சங்ககாலக் கள்ளூர், இன்றைய தென்கரையேயென முடிவு செய்யலாம்.

மாறவர்மன் பராக்கிரம பாண்டியனின் 3ஆம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டில் (கி.பி. 1090) இவ்வூர் பராக்கிரம பாண்டியபுரம் என்று குறிப்பிடப்படுகிறது.[41] தன் பெயரையொட்டி இப்பெயரை இவன் இட்டிருக்கவேண்டும். ஆனால் இவனது 11ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் (கி.பி. 1098) கட்டிக்கள்ளூர் என்னும் பழைய பெயரிலேயே இவ்வூர் குறிப்பிடப்படுகிறது.[42] சோழர்களுக்கு அடங்கியே இவன் ஆட்சி செய்திருக்கிறான். எனவே தன்பெயரில் ஊர்ப்பெயரை இட்டுக்கொண்டதைச் சோழர்கள் விரும்பாததால் மீண்டும் பழைய பெயரைக் குறிப்பிட்டிருக்கிறான் என்று மா. சந்திரமூர்த்தியும் வெ. வேதாசலமும் கருதுகின்றனர்.[43] குலசேகரபுரம் என்ற பெயரில் இவ்வூர் சடையவர்மன் குலசேகரனின் கல்வெட்டில் (கி.பி. 1194) குறிப்பிடப்படுகிறது.[44] தன் பெயரையொட்டி இப்பெயரைக் குலசேகரன் இட்டிருக்க வேண்டும். ஆனால் இப்பெயர்கள் பாண்டிய மன்னர்கள் காலத்திலேயே நிலைக்க வில்லையென்பதை மாறவர்மன் சுந்தரபாண்டியன் கல்வெட்டில் (கி.பி. 1236) இவ்வூர் மீண்டும் கட்டிக் கள்ளூர் என்று குறிப்பிடப்பட்டிருப்பதிலிருந்து அறியலாம்.[45] தென்கரையென்பது ஊருக்குரிய பெயராகத் திருமலைநாயக்கர் கல்வெட்டில் (கி.பி. 1623-1659) முதன்முதலாகக் குறிப்பிடப்படுகிறது.[46] எனினும் மாறவர்மன் ஸ்ரீவல்லபன் (கி.பி. 1132-1163) காலத்தில் வையையாற்றினையொட்டிப் பிரிக்கப்பட்ட வடகரை, தென்கரை என்னும் பிரிவுகள் இருந்ததை இவன் கல்வெட்டு உணர்த்துகின்றது.[47] இவ்வழக்கம் மக்கள் வழக்கில் இருந்து, இன்றளவும் நிலைபெற்றுவிட்டது எனலாம்.

தென்கரையென்னும் ஊர் இன்று வையையாற்றின் மேற்குக் கரையில்தான் இருக்கின்றது. மேற்கிலிருந்து கிழக்காக ஓடிவரும் வையையாறு முள்ளிப்பள்ளம் (வாடி.) என்னும் ஊரின் அருகே தெற்கு நோக்கித் திரும்பிவிடுகின்றது. அவ்வாறு தெற்காக ஓடும் வையையாற்றின் மேல்புறம் தென்கரை இருக்கிறது. முள்ளிப்பள்ளம் தெற்காகத் திரும்பும் முடக்கில் இருக்கிறது. தெற்காக ஓடும் வையையாறு தென்கரை தாண்டியவுடன் சோழவந்தானே நோக்கி மீண்டும் கிழக்கு நோக்கித் திரும்பிவிடுகின்றது. இதிலிருந்து வையையின் போக்கு இடைக்காலத்தில் சிறிது மாறியிருக்கிறது என்றும் இதனைத் தென்கரைஎன்னும் ஊர்ப்பெயரிலிருந்து உணரலாமென்றும் தெரிந்து கொள்ளலாம். முள்ளிப்பள்ளம் இருக்கும் பகுதி தென்கரையென்று சொல்லப்பட்டதென்பதும் இதன்வழித் தெரிகிறது.

## கானப்பேரெயில்

பாண்டியன் உக்கிரப்பெரு வழுதி கானப்பேரெயிலைக் கைப்பற்றினான் என்று புறநானூற்றில் கூறப்பெற்றுள்ளது. அதனால் கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெரு வழுதி எனப்பெயர் பெற்றான். அவனை ஐயூர் மூலங்கிழார் பாடிய பாடல் மூலம் அக்கோட்டையின் அகழியின் ஆழம், மதிலின் உயரம், மதிலின் மேல் அமைந்த ஞாயில், காவற்காடு ஆகியவற்றைப் பற்றி அறியமுடிகின்றது.[48] கானப்பேர் என்ற இடத்தில் அமைந்தமையால் கானப்பேரெயில் என்று அக்கோட்டையைக் குறித்துள்ளனர்.

இராமநாதபுரம் மாவட்டம் மானாமதுரைக்கு அருகில் உள்ள காளையார் கோயில்தான் கானப்பேர் ஆகும். சங்க காலத்தில் கானப்பேர் என்றிருந்த பெயர் தேவாரக் காலத்திற்குப் பிறகு காளையார் கோயில் என மாறியுள்ளது. திருஞானசம்பந்தர், சுந்தரரால் பாடப்பெற்ற திருத்தலமாக இவ்வூர் உள்ளது. கானப்பேரூர்,[49] கானப்பேர்[50] என்ற இரண்டு வடிவிலும் அமையும் இவ்வூர்ப்பெயர், பின்னர்க் கோயில் சிறப்பு, சைவப்பற்றுக் காரணமாகப் புராணக்கதை தொடர்பாகக் காளையார் கோயில் என்று அழைக்கப்பட்டு, பின்னர் ஊர்ப்பெயரே அவ்வாறாயிற்று என்று அறியமுடிகின்றது.[51]

காட்டுப்பகுதியில் அமைந்த ஊராக இது இருந்ததனைக் கானப்பேர் என்ற பெயர் சுட்டுகிறது. மேலும் பண்டு தொட்டே இதன் சிறப்புச் சங்க இலக்கியச் சான்றுகள் வழித் தெளிவுறுகிறது. இவ்வூர்ச் சிறப்பாக அன்று காணப்பட்டது என்பதனைக் 'கற்றார்கள் தொழுதேத்தும் கானப்பேர்' என்ற சேக்கிழாரின் கூற்றுத் தெளிவாக்கும்.[52]

காவார்ந்த பொழிற்சோலை கானப்பேர் என்பது திருஞானசம்பந்தர் கூற்று (313-7). கார் வயல் சூழ் கானப்பேர் உறைகாளையே என்பது சுந்தரர் பாடல் (84-1). மேலும் சிவபெருமான் திருவந்தாதியிலும் (51) இவ்வூர் சுட்டப்படுகிறது. கல்லாட தேவநாயனார் தம்முடைய தேவர் திருமறத்தில்,

*வாய்க்கலசத்து மஞ்சன நீரும்*
*கொண்டு கானப்பேருறை கண்ணுதல்*
*முடியிற் பூசை அடியாற் நீக்கி* (21:1-3)

என்று சுட்டிச்செல்லக் காண்கிறோம். இப்பாடலில் குறிப்பிடப்படும் சிவன் காளத்தியிலுறைபவன். எனவே இங்குக் கானப்பேருறை என்பது, கானகத்தில் உறையும் சிவன் எனக்கருதவே இடமளிக்கிறது. இந்நிலையில் 'கானப்பேரூர்' என்பது காட்டுப் பகுதியில் எழுந்த புதிய குடியிருப்பே என்பது தெளிவாக அமைகிறது. மேலும் கானப்பேர் என்பது பழைமையான ஊர் என்பது தெளிவாகத் தெரிகிறது.[53]

## கிள்ளிமங்கலம்

கிள்ளிமங்கலம் இன்றை கிண்ணிமங்கலம் ஆகுமென்பார் இரா. பி. சேதுபிள்ளை.[54] கிண்ணிமங்கலம் மதுரை மாவட்டம் திருமங்கலம் வட்டத்தில் உள்ளது. கிழார் என்ற புலவரும், அவர் மகனார் சேரகோவனாரும் இவ்வூரைச் சேர்ந்தவர்கள் ஆகவே கிள்ளிமங்கலங்கிழார் என்றும், கிள்ளிமங்கலங்கிழார் மகனார் சேர கோவனார் என்றும் பெயர் பெற்றனர்.

நற்றிணையில் 365-ஆம் பாடல் கிள்ளிமங்கலங்கிழார் மகனார் சேரகோவனார் பாடியது. குறுந்தொகையில் 76, 110, 152, 182 ஆகிய பாடல்கள் கிள்ளிமங்கலங்கிழார் பாடியவை ஆகும்.

## குமரி

தமிழ்நாட்டின் தென்கோடியில் ஒரு மாவட்டத்தின் பெயரால் விளங்குகிறது. இந்திய நாட்டின் தென் எல்லையாகக் கன்னியாகுமரியும் இந்திய நாட்டின் வட எல்லையாக இமயமலையும் தமிழ்நாட்டின் வட எல்லையாக வேங்கடமலையும் அமைந்திருக் கின்றன. வட எல்லையருகே கிழக்கேயிருந்து மேற்கேயுள்ள அகலம் மிகக் கூடுதலாக இருந்தும் தெற்கே அது படிப்படியாகக் குறைந்து கிழக்கேயும் மேற்கேயுமுள்ள கடற்கரைகள் இரண்டற இணைந்து விடுகின்றன. இவ்வாறு இணையும் முனையே கன்னியாகுமரி என்று வழங்கப்பெறுகின்றது.

## பெயர்க்காரணம்

பகவதிக்கும் தாணுமாலயனுக்கும் திருமண ஏற்பாடு செய்யப்பெற்றிருந்தது. நாரதர்சேவலைக் கூவவிட்டதால் விடிந்துவிட்டது. முகூர்த்த நேரம் தவறிவிட்டது என்று எண்ணி இறைவனாகிய தாணுமாலயன் சுசீந்திரத்துக்குத் திரும்பிவிடுகிறார். திருமணம் தடைப்பட்டு விடுகின்றது. இதனால் பகவதியம்மன் என்றும் கன்னியாக - குமரியாக இருந்து வருகிறார். அவர் அவ்வாறிருந்து தவம்புரியும் இடம் கன்னியாகுமரி ஆயிற்று என்பர்.[55]

கன்னி, குமரி என்னும் இரு சொற்களும் ஒரு பொருளையே குறிப்பன எனினும் இரண்டிற்குமிடையே நுண்ணிய வேறுபாடுள்ளது. குமரி பருவப் பெயராகவும் கன்னி மணமாகாத தன்மையைக் குறிக்கும் பெயராகவும் இருக்கின்றன. கன்னியாம்குமரி எனப்பெயர் இரட்டித்து அதன்வழி வலித்தல் விகாரத்தால் கன்னியாகுமரி எனப்பெயர் பெற்றது என்றும் கூறுவர்.

## வரலாறு

கன்னியாகுமரி வரலாற்றுப் பெருமையுடையது. நாஞ்சில் நாட்டுப் பொருநனைப் பற்றிப் புறநானூறு குறிப்பிடுகின்றது. இப்பகுதி ஏறத்தாழ ஓராயிரம் ஆண்டுகட்கு முன்னர்ப் பாண்டிய மன்னர்களால் ஆளப்பட்டு வந்தது என்பது பாண்டியன் அணை, பாண்டியன் கால்வாய், பூதப்பாண்டி, அழகிய பாண்டியபுரம் என்னும் பெயர்களால்

புலப்படுகின்றது. பின்னர் இப்பகுதி கன்னியாகுமரியாகவும் அதன் சுற்றுப்புறங்களும் சேர்ந்து புறத்தாயநாடு, நாஞ்சில் நாடு, வேணாடு என மூன்றாகப் பிரிந்தது. பாண்டியர், பிற்காலச்சோழர், விஜயநகரப் பேரரசர் எனப்பலர் இப்பகுதியை ஆண்டுள்ளனர்.

18-ஆம் நூற்றாண்டில் ஆர்க்காட்டு நவாபு கன்னியாகுமரிப்பகுதியை வேணாட்டு அரசனுக்குப் பரிசாக வழங்கினான். திப்பு சுல்தானின் படையெடுப்புக் காரணமாகத் திருவிதாங்கூர் அரசர்களுக்கும் ஆங்கிலேயருக்குமிடையே 1805-இல் ஓர் உடன்பாடு ஏற்பட்டது. அதன்படி திருவிதாங்கூர் அரசர்கள் 1947வரை ஆண்டுதோறும் 8 இலட்சம் ரூபாய் ஆங்கிலேயேருக்குக் கப்பம் கட்டி வந்தனர்.[56]

முதலில் திருவிதாங்கூர் அரசாலும் பின்னர்த் திருவிதாங்கூர் - கொச்சி அரசாலும் தமிழர்கள் புறக்கணிக்கப்பட்டதன் காரணமாக இப்பகுதி தமிழ்நாட்டுடன் இணைக்கப்பட வேண்டும் என்னும் இயக்கம் 1945இல் தொடங்கி 1956-இல் வெற்றி பெற்றது என்பர்.

**உயர்வு**

வங்காள விரிகுடாக்கடல், அரபிக்கடல், இந்தியப்பெருங்கடல் ஆகிய முக்கடல்களும் கூடி முழங்கும் ஓங்குபுகழ் சிறப்புடையது கன்னியாகுமரி. கதிரவன் தோன்றுவது, மறைவது ஆகிய இருபெரும் காட்சிகளையும் ஓரிடத்திருந்தே காணத்தக்க சிறந்த இடமாக இப்பகுதி விளங்குகின்றது. சித்திரைப்பவுர்ணமி நாளில் ஒரே நேரத்தில் சூரியன் மேற்கே சாய்வதையும் சந்திரன் கிழக்கே தோன்றுவதையும் ஒரு சேரக் காணலாம்.

பெருஞ்சோற்று உதியன் சேரலாதன் என்னும் மன்னனைப் புறநானூறு,

*நின் கடற் பிறந்த ஞாயிறு பெயர்த்தும்நின்*
*வெண்தலைப் புணரி குடகடற் குளிக்கும்*
*யாணர்வைப்பின் நன்னாட்டுப் பொருந* (புறம். 2:9-11)

எனக் குறிப்பிடுவது குமரித்துறையில் ஞாயிறு எழுவதும் மறைவதுமாகிய காட்சியையே ஆகும்.

## சங்க இலக்கியத்தில் குமரி

மதுரைக்காஞ்சி, பதிற்றுப்பத்து, புறநானூறு ஆகிய சங்க நூல்களில் கன்னியாகுமரி பற்றிய பதிவுகள் காணப்படுகின்றன.

*தென்குமரி வடபெருங்கடல்* (மதுரைக். 70)

*தென்அம் குமரியொடு ஆயிடை* (பதிற்றுப். 11-24)

*தெனாஅது உருகெழு குமரியின் தெற்கும்* (புறம். 6-2)

*தென்குமரி, வடபெருங்கல்* (புறம். 17-1)

இவ்வாறாக, கன்னியாகுமரியின் பதிவுகள் சங்க நூல்களில் காணப்படுகின்றன.

## குறுங்குடி

குடி என்னும் சொல் ஊர் என்ற பொருளைக் குறிக்கும். வெகு தொலைவில் இல்லாமல் அருகில் குறுகிய தொலைவில் உள்ள ஊர் குறுங்குடி எனப்பெயர் பெற்றிருக்கிறது. இவ்வூரினரான மருதன் என்ற சங்ககாலப்புலவர் குறுங்குடி மருதன் எனப் பெயர் பெற்றார். குறுந்தொகையில் 344 ஆம் பாடலும், அகநானூற்றில் 4-ஆம் பாடலும் குறுங்குடி மருதன் இயற்றியவை.

திருநெல்வேலி மாவட்டத்தில் இவ்வூர் உள்ளது. திருமாலின் வாமனாவதாரத் தோடு தொடர்புபடுத்தி இவ்வூரின் பெயர் திருகுறுங்குடி என வந்ததாகப் புராணச் செய்தி கூறுகிறது.[57]

## குன்றம்-குன்று

சங்க இலக்கியத்தில் பரங்குன்றம், பரங்குன்று, தண்பரங்குன்று, வேலாங்குன்று என்னும் வடிவங்கள் திருப்பரங்குன்றத்தைக் குறித்து வழங்குகின்றன.[58]

*அஞ்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும்*
*குன்று அமர்ந்து உறைதலும் உரியன்* (திருமுருகு. 76-77)

*தனி மழை பொழியும் தண் பரங்குன்றில்*
*கலிகொள் சும்மை, ஒலி கொள் ஆயம்* (மதுரைக். 263-264)

*இவ் வையையாறு என்றமாறு என்னை? கையால்*

*தலை தொட்டேன், தண் பரங்குன்று* (பரி.6:94-95)

*பரங்குன்று இமயக் குன்றம் நிகர்க்கும்* (பரி. 8:11)

*புலரா மகிழ்; மறப்பு அறியாது நல்கும்*

*சிறப்பிற்றே தண்பரங் குன்று* (பரி. 8:45-46)

*வருபுனல் வையை மணல் தொட்டேன்; தரு மணவேள்*

*தண் பரங்குன்றத்து அடி தொட்டேன் என்பாய்* (பரி. 8:61-62)

*கேட்டுதும் பாணி; எழுதும் கிணை-முருகன்*

*தான் தொழு தண்பரங்குன்றது* (பரி. 8:81-82)

*மண் பரிய வானம் வறப்பினும், மன்னுகமா,*

*தண்பரங்குன்றம்! நினக்கு* (பரி.8:129-130)

*மணி மழை தலைஇ யென, மா வேனில் கார் ஏற்று,*

*தணி மழை தலையின்று, தண்பரங்குன்று* (பரி.9:10-11)

*வித்தகத் தும்பை விளைத்தலான், வென் வேலாற்கு*

*ஒத்தன்று, தண்பரங்குன்று* (பரி.9:68-69)

*பாடல் சான்று பல் புகழ் முற்றிய*

*கூடலொடு பரங்குன்றின் இடை* (பரி. 17:22-23)

*சுனை மலர்த் தாது ஊதும் வண்டு ஊதல் எய்தா*

*அனைய பரங்குன்றின் அணி* (பரி. 17:38-39)

*தெய்வ விழவும் திருந்து விருந்து அயர்வும்*

*அவ்வெள் அருவி அணிபரங்குன்றிற்கும்* (பரி. 17:42-43)

*இரு நிலத்தோடும் இயைக! என ஈத்தநின்*

*தண் பரங்குன்றத்து, இயல் அணி நின் மருங்கு* (பரி. 19:4-5)

*நேர்வரை விரிஅறைவியல் இடத்து இழைக்கச்*

*சோபன நிலையது துணி பரங்குன்றத்து* (பரி. 19:65-66)

*நிரை ஏழ் அடுக்கிய நீள் இலைப்பாலை*

*அரைவரை மேகலை, அணி நீர்ச்சுழி*

*தரை விசும்பு உகந்த தண் பரங்குன்றம்* (பரி. 21:12-15)

*கொழுநன் மகிழ்தூங்கி, கொய்பூம்புனல் வீழ்ந்து*

*தழுவும் தகைவகைத்து தண்பரங்குன்று* (பரி. 21:44-45)

சேய்மாடக் கூடலும் செவ்வேள் பரங்குன்றம் (பரி. திரட்டு. 12-2)

*சூர் மருங்கு அறுத்த சுடர்இலை நெடுவேல்*

*சினம் மிகு முருகன் தண்பரங் குன்றத்து* (அகம். 59:10-11)

சுந்தரர், ஞானசம்பந்தர், மணிவாசகர் முதலானோரும் இவ்வூரைப் பரங்குன்றம் என்று பாடியிருக்கின்றனர்.[59] கலித்தொகை உரையில் நச்சினார்க்கினியர் திருப்பரங்குன்றம் எனத் 'திரு' என்ற அடைமொழியுடன் முதன் முதலாகக் குறிப்பிடுகிறார்.[60] சைவக்குரவர்களின் பாடல்பெற்ற தலம் என்ற சிறப்புகருதித் 'திரு' என்ற அடைமொழி சேர்க்கப்பட்டுள்ளது. பெரியபுராணமும் 'திருப்பரங்குன்றம்' என்றே இதனைக் குறிப்பிடுகிறது.[61] இக்காலம் முதல் கல்வெட்டுகளும் இலக்கியங்களும் இவ்வடிவத்தை மிகுதியும் கையாண்டுள்ளன. திருப்புகழில் 'பரங்கிரி' என்று புதுவடிவம் வந்துள்ளது.[62] வடமொழியாளர்களால் இவ்வாறு மொழிமாற்றம் செய்யப்பட்டு வழங்கியிருப்பினும் இது பின்னர் வழக்கில் நிலைக்கவில்லை.

பரன் என்னும் சிவன் உறையும் (அதாவது சிவன் கோயில் கொண்ட குன்றம்) என்னும் பொருளில் 'பரங்குன்றம்' அமைந்திருப்பதாகக் கருதினும் முருகன் வசியும் தலமாகவே இதனைச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. 'பரம்' என்பது உயர்ந்தது; எதற்கும் உட்படாதது (அதாவது முருகன் உறைவதனால்) என்னும் பொருளில் இம்மலை பரங்குன்றம் எனப்பட்டது என்கிறார் செ. போசு.[63]

தென்பரங்குன்றம் என்றும் இத்தலம் அழைக்கப்பட்டு வந்திருக்கிறது.[64] மலையின் தென்பாகத்தில் சிவனுக்குக் கோயில் இருப்பதாலும் 7, 8 ஆம் நூற்றாண்டுகளில் சிவ

வழிபாடு பெருகியமையாலும் சிவன்கோயிலை உட்கொண்டு ‘தென்பரங்குன்றம்’ என்றும் பெயரிட்டிருக்கலாம். பரமசினம், சத்தியகிரி, கந்தமாதனம், கந்தமலை என்றும் இக்குன்றம் புராணங்களில் பாடப்பட்டுள்ளது.[65]

இம்மலைக்குச் ‘சிக்கந்தர் மலை’ யென்ற பெயரும் வழங்கியிருக்கிறது.[66] முகமதியர்களின் ஆட்சி மேலோங்கிய வேளையில் இப்பெயர் வழக்கு வந்திருக்க வேண்டும். சிக்கந்தர் என்னும் இசுலாமியத் துறவியின் உடல் இங்கே அடக்கம் செய்யப்பட்டதால் இப்பெயர் வந்ததென்று சொல்லப்படுகிறது.

பரிபாடலில் 9,18 ஆகிய பாடல்களைப் பாடிய பூதனார் என்ற புலவர் குன்றத்தைச் சேர்ந்தவராதலின் குன்றம் பூதனார் எனப்பெயர் பெற்றார். மதுரை மாவட்டத்தில் இவ்வூர் உள்ளது.

**கூடலூர்**

மதுரைக் கூடலூர் கிழார் என்ற புலவரின் மூலம் கூடலூர் என்ற ஊர் அறிய முடிகின்றது. நற்றிணையில் 200, 380 ஆகிய பாடல்களையும், புறநானூற்றில் 299-ஆம் பாடலையும் பாடிய கிழாரும் கூடலூரைச் சேர்ந்தவர்கள். முதுமொழிக் காஞ்சியை இயற்றியவரும் ஐங்குறுநூறு தொகுத்தவருமான கிழார் என்ற புலவர் கூடலூரைச் சேர்ந்தவர்.

கி.பி. 1669 ஆம் ஆண்டுக் கூடலூர்க் கல்வெட்டு இவ்வூரைக் குலசேகரப் பெருமாள் கூடலூர் என்று குறிப்பிடுகின்றது.[67] இப்பெயர் கேரள மாநிலம் கோட்டயம் மாவட்டம் மீனாச்சிலுக்கு அருகிலுள்ள பூஞ்சார் என்னும் பகுதியை ஆண்டு வந்த கேரள அரசர்களின் பெயரால் ஏற்பட்டிருக்கிறது. இவர்களின் ஆட்சி மதுரை தென்மேற்குப் பகுதியில் இருந்தது என்பதைப் பல சான்றுகள் உறுதி செய்கின்றன.[68] ‘போடிநாயக்கனூர் வம்சாவளியில்’[69] போடிநாயக்கனூர் பகுதி முன்பு எவ்வாறு இருந்தது என்பதைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது, “இந்தச் சீர்மை வனசஞ்சாரமாய், வனாந்திரமாய், அவரூபமாய் அதிலே பத்து கிராமம் வரைக்கும் பூனையாத்து ராசாக்களுக்குள் குடித்தனஞ் செய்து கொண்டிருந்தார்கள்” என்று வருவதிலிருந்தும், போடி நாயக்கனூர் ஜமீன் எவ்வாறு தோன்றியதென்பதைக் குறிப்பிடும்பொழுது,

"அப்படிக் கொடுத்துவ யாறென்றால் மதுரைப் பாண்டிய ராசாக்களுக்குள் பாண்டிய தேசம் விட்டு மலைப்பள்ளத்துக்குச் சமீபமான பூணையாத்துத் தம்பிரான்களில் குலசேகரப் பாண்டிய பெரிய பொன்னும் பெருமாள் தம்பிரானவர்கள் வாங்கிக் கொண்டவர் யெங்கள் முன்னோர்களில் சக்குனாய்க்கர்" என்பதிலிருந்தும் பூனையாத்து அரசர்கள் இப்பகுதிகள் ஆண்டதும் குலசேகரப் பாண்டிய பெரிய பொன்னும் பெருமாள் என்னும் பெயரைச் சூட்டிக்கொண்டிருப்பதால் பாண்டிய வம்சத்தின் கொடிவழியினரென்பதும் தெரிகின்றது.[70] (பூஞ்சார் என்பது பூனையாறு என்று தமிழில் குறிப்பிடப்படுகின்றது. மலையாளத்தில் பூனையைப் பூச்சை என்பர்).

கே. பி. பத்மநாபமேனனும் பூஞ்சாறு அரசர்கள் பாண்டியநாட்டின் மதுரையிலிருந்து குடியேறிய மானவிக்கிரமகுலசேகரப் பெருமாள் வழிவந்தவர்களென்று குறிப்பிடுகின்றார்.[71] எனவே இவ்வூர் பூனையாற்று அரசர்களின் பெயரில் 'குலசேகரப்பெருமாள் கூடலூர்' எனப்பட்டிருக்கிறது. மதுரை மாவட்டத்தில் இவ்வூர் உள்ளது.

**கொற்கை**

பாண்டிய நாட்டின் புகழ்பெற்ற தொன்மையான துறைமுகப்பட்டினம் கொற்கை. கி.பி. 80-இல் நமது நாட்டுக் கடற்கரையைப் பார்வையிட்ட பெரிப்புளூஸ், 'கொற்கை என்பது கன்னியாகுமரிக்கு அப்பாலுள்ள துறைமுகம். அங்கு முத்தெடுக்கும் தொழில் நடைபெறுகிறது. தண்டிக்கப்பட்ட குற்றவாளிகள் அத்தொழிலைச் செய்கிறார்கள். கொற்கை பாண்டிய நாட்டைச் சேர்ந்தது'[72] என்று எழுதியுள்ளமை இந்நகரம் பாண்டிய நாட்டைச் சார்ந்ததே என்ற கருத்தை வலியுறுத்தும்.

எகிப்து நாகரிகம் நைல் ஆற்றங்கரையிலும், பாபிலோன் நாகரிகம் தைக்கிரீசு ஆற்றங்கரையிலும் மலர்ந்தன. சேரர் நாகரிகம் ஆன்பொருநை அரபிக் கடலில் கலக்கும் இடத்திலுள்ள முசிறியிலும், சோழர் நாகரிகம் காவிரி கடலில் கலக்கும் இடத்திலுள்ள பூம்புகாரிலும் பழங்காலப் பாண்டியர் நாகரிகம் தண்பொருநை கடலில் கலக்கும் இடத்திலுள்ள கொற்கையிலும், பிற்காலப் பாண்டியர்களின் நாகரிகம் வைகை ஆற்றங்கரையிலுள்ள மதுரையிலும் வளர்ச்சியடைந்தன.

தண்பொருநையின் சிறப்பும் கொற்கையின் புகழும் நெருக்கமுடையதாகும். கொற்கை தலைநகராகவும் துறைமுகப் பட்டினமாகவும் சிறப்புற்றுப் பெரியபட்டினமாக விளங்கியது. பூம்புகாரில் உள்ளதைப் போன்றே கொற்கையிலும் யவனச்சேரி, வெள்ளையன் இருக்கை முதலியனவும் மாளிகைகளும் கோயில்களும் அமைந்திருந்தன. துறைமுகமும் கலங்கரை விளக்கமும் மிகவும் சிறப்பாக அமைக்கப்பட்டிருந்தன.

கொற்கையின் கோட்டை வாயில் பொற்றகடுளாலும், முத்துகள் மணிகள் முதலியவற்றாலும் பதிக்கப் பெற்றுக் கவினுற விளங்கின. கொற்கையில் வாணிகத்தின் பொருட்டு யவனர்களும் அரேபியர்களும் தங்கிய இடமே இன்று காயல்பட்டினம் என்றழைக்கப்படுகிறது. கொற்கைத் துறைமுகம் முத்து, சங்கு குளிக்கும் இடமாய்த் திகழ்ந்துள்ளது. அங்குச் சங்கறுக்கும் தொழில் சிறப்புடன் நடைபெற்றுள்ளது என்பதை அகழாய்வு முடிவுகள் விளக்குகின்றன.

'பழைய பாபிலோன் நகரம் போல் கொற்கைப் பட்டினத்தின் கோட்டை வாயிற்கதவு பொன்னால் செய்யப்பெற்று முத்துக்களும் மணிகளும் பதிக்கப் பெற்று எழிலுற விளங்கியது.

கொற்கை மாநகரின் செல்வம் அளவிடற்கரியதாய் இருந்தது கொற்கை மாநகர மக்கள் உச்சி முதல் பாதம் வரை பொன்னாலும் மணியாலும் அணிகலன்கள் செய்து பூண்டிருந்தனர். அவர்கள் வீடுகளைப் பொற்குடங்களும் பொற்சொம்புகளும் பொன் வட்டில்களும் அணி செய்தன.

தில்லி சுல்தானின் தளபதி சேய்க் கமாலுதீன் என்ற முஸ்லீம் கொள்ளைக்காரன் கி.பி. 1293 ஆம் ஆண்டில் பாண்டிய நாட்டில் கொள்ளையடித்துச் செல்வங்களை டில்லிக்கு அனுப்பினான்.

கி.பி. 1310 ஆம் ஆண்டில் மாலிக்கபூர் என்பான், மதுரையில் சுந்தரபாண்டியன் அரண்மனையிலிருந்தும் காயலிலிருந்தும், கொற்கையிலிருந்தம் சூறையாடப்பட்ட பொருட்களின் மதிப்பு 10 கோடி பவுன்கள் என்று மதிப்பிடப்பட்டது. இவை பொன்காசுகளாகவும், பொன்கட்டிகளாகவும் மணிகள் பதித்த அணிகளாகவும் இருந்தன. இவைகள் யானைகள் மீதும் குதிரைகள் மீதும் ஏற்றப்பட்டுத் தில்லி சுல்தான் அரண்மனைக்கு அனுப்பப்பட்டன.[73]

தமிழ்நாட்டின் கீழைக் கடற்கரைப் பகுதியில் மிகவும் சிறந்து விளங்கிய கொற்கைத் துறைமுகப்பட்டினம் தமிழ்நாட்டின் வருவாயை அதிகப்படுத்தி நாட்டின் பொருளாதார நிலையை உயர்த்துவதில் பெரும்பங்கு வகித்துள்ளது. இக்கருத்தினை இரட்டைக் காப்பியங்களான சிலப்பதிகாரமும் மணிமேகலையும் குறிப்பிட்டுள்ளன. பாண்டிய அரசின் பொருளாதார முதன்மைக்கும், கடல் வாணிகத்திற்கும், மதிப்பு வாய்ந்த முத்துக்கும் சிறந்த துறைமுகப்பட்டினமாகக் கொற்கை விளங்கியது.

"கருங்கடலின் கரையிற் கட்டப்பட்ட வாணிகச் சிறப்பு மிக்க நகரங்கள் பாண்டியனது துறைமுகமாகிய கொற்கையை நினைவிற் கொள்ளும் வண்ணம் கோல்சிசு (Colchis) கோல்சாசு (Colchas) கொல்சிசு என்றெல்லாம் பலவாறாக அழைக்கப்பட்டு வந்தன. கொற்கை நீண்ட காலமாக இந்தியாவின் எல்லாச் செல்வங்கட்கும் களஞ்சியமாகவும் இந்தியாவிலிருந்து பொருள்களை ஏற்றுமதி செய்யவும், வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யவும் பயன்படும் வணிகப் பண்டகச்சாலையாகவும் விளங்கியது"[74]

"திருநெல்வேலி அரசியல் பொதுவரலாறு" "திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்" போன்ற நூல்களை எழுதிய கால்டுவெல் கொற்கையில் அகழாய்வு செய்ததில் மணற் பாறையும் சங்குகளும் சிப்பிகளும் இருந்ததைக் கண்டுபிடித்தார். மணற்பாறையின் பரப்பே முற்காலத்தில் கடற்கரையாக இருந்திருக்கலாம் என்று குறிப்பிட்டுள்ளார்.

இக்கொற்கைத் துறைமுகம் தாமிரபரணி ஆற்றின் முகத்துவாரத்தில் சங்ககாலப் பாண்டியர்களின் இயற்கைத் துறைமுகமாகப் புகழுடன் விளங்கியது. கொற்கை என்பதற்குப் படை அல்லது படைவீடு என்று கால்டுவெல் பொருள் கொள்கின்றார்."[75]

"சங்க கால முடிமன்னரின் தலை நகரங்களில் பாண்டியன் தலைநகரமே மிகவும் தொன்மையானதாகும். இந்த நகரம் இடைச் சங்க காலத்துக்குரியதாகத் தமிழகத்தின் தென் கிழக்குக் கடற்கரையில் இருந்ததாகக் கருதப்படுகிறது. இதுவே பாண்டியரின் துறைமுகமாகவும் இருந்தது. இதை வால்மீகி இராமாயணம் பாண்டிய கவாடம் என்று அழைத்துள்ளது."[76]

இத்தாலிய நாட்டு வணிகர் மார்க்கோபோலோ பழைய காயல் என்னும் பாண்டி நாட்டுத் துறைமுகத்தில் கப்பல் ஏறினார் என்பதை அவரது நாட்குறிப்பில் குறிப்பிட்டுள்ளார். பெரிப்புளுசு நூலாசிரியரும் வானநூல் வல்லுநருமான தாலமி என்பவர் கொற்கையை, கொற்கையான் ஆண்ட கோநகர் என்றும் பழம்பெரும்பட்டினம் என்றும் சிறப்பித்துள்ளார். அவர் வரைந்த படங்களில் கொற்கையும் இடம் பெற்றிருக்கிறது. கொற்கை ஒரு மாபெரும் வணிகத்துறை என்றும் சிறந்த துறைமுகப் பட்டினம் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

## சங்க இலக்கியங்களில் கொற்கை

சங்க இலக்கியங்களில் கொற்கை சிறப்புடன் போற்றப்பெற்றுள்ளது. கொற்கை தொடர்பான செய்திகள் நற்றிணை, ஐங்குறுநூறு, அகநானூறு, சிறுபாணாற்றுப்படை, மதுரைக் காஞ்சி, முல்லைப் பாட்டு ஆகிய இலக்கியங்களிலும், சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய காப்பியங்களிலும் வந்துள்ளன.

### நற்றிணையில்

கொற்கை பழம்பெரும் பாண்டிய மன்னர்களின் துறைமுகப்பட்டினம் கொற்கைத் துறைமுகத்தில் ஆழ்கடலில் உயர்ந்த நன்முத்துகள் விளைந்ததை

*முத்துப் படு பரப்பிற் கொற்கை முன்றுறை* (நற். 23-6)

என்று இடம் பெற்றுள்ளது.

### ஐங்குறுநூறு

*கொற்கை முன்துறை இலங்கு முத்து உரைக்கும்* (ஐங். 185-2)

என்றும்,

*இருங்கழிச் சேயிறா இனப்புள் ளாரும்*
*கொற்கைக் கோமான் கொற்கையம் பெருந்துறை* (ஐங். 188:1-2)

என்றும் கொற்கையைக் குறிக்கிறது.

### அகநானூற்றில்

*மறப்போர் பாண்டியர் அறத்தின் காக்கும்*
*கொற்கையம் பெருந்துறை முத்து* (அகம். 27:8-9)

*புகழ்மலி சிறப்பின் கொற்கை முன்றுரை*
*அவரிகதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து* (அகம். 201:4-5)

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. முத்துக் குளித்துக் கடற்பொருட்களைக் கொணரும் பரதவர்களை எதிர்பார்த்துச் சுற்றத்தார்கள் கடற்கரையில் காத்திருப்பார்கள். பரதவர்கள் கரையை அடைந்ததும் மகிழ்ச்சிப் பொங்கக் கூக்குரலிட்டு வரவேற்று ஆரவாரம் செய்வார்கள்.

இதனை,

*இலங்கிடும் பரப்பின் எறிசுறா நீக்கி*
*வலம்புரி மூழ்கிய வான்திமில் பரதவர்*
*ஒலிதலைப் பணிலம் ஆர்ப்பக் கல்லெனக்*
*கலி கெழு கொற்கை* (அகம். 350:10-13)

என்ற பாடல் படம்பிடித்துக் காட்டியுள்ளது.

### பத்துப்பாட்டில்

சிறுபாணாற்றுப்படை கொற்கைத் துறைமுகத்தின் சிறப்பினை மிக அழகாக விளக்கியுள்ளது.

*நோன் பகட்டுமணர் ஒழுகையொடு வந்த*
*மகாஅர் அன்ன மந்தி மட்வோர்*
*நகாஅர் அன்ன நளிநீர் முத்தம்*
*வாள்வாய் எருந்தின் வயிற்றகத் தடக்கித்*
*தோள்புற மறைக்கும் நல்கூர் நுசுப்பின்*
*உ ளரியல் ஐம்பால் உ மட்டியர் ஈன்ற*
*கிளர்பூ ண் புதல்வரொடு கிலுகிலியாடும்*
*தத்து நீர் வரைப்பின் கொற்கை* (சிறுபாண். 55-62)

உப்பு வணிகர் கொற்கையில் மண்டிக்கிடக்கும் உப்பை விற்றுத் திரும்பி வரும்வழியில் ஒரு குரங்குக் குட்டியையும் பிடித்து வந்தனர். அக்குரங்கு அவ்வணிகர்களுடைய குழந்தைகளோடு விளையாடி மகிழ்ந்தது. அக்குழந்தைகளோடு சேர்ந்து கொற்கைக் கடற்கரையில் கிடக்கும் கிளிஞ்சல்களை வைத்து விளையாடியது.

மதுரைக் காஞ்சி என்னும் நூல், மதுரையை மட்டுமன்றிக் கொற்கையின் சிறப்பினையும் விளக்கிக் காட்டுகிறது.

*பேருலகத்து மேஎந் தோன்றிச்*
*சீருடை விழுச்சிறப்பின்*
*விளைந்த முதிர்ந்த விழுமுத்தின்*
*இலங்குவளை இருஞ் சேரிக்*
*கட்கொண்டிக் குடிப்பாக்கத்து*
*நற் கொற்கை* (மதுரைக். 132-133)

இரட்டைக் காப்பியங்களான சிலப்பதிகாரமும் மணிமேகலையும் கொற்கையைச் சிறப்பித்துள்ளன.

*தண்செங் கழுநீர்த் தாதுவிரி பிணையல்*
*கொற்கை யம் பெருந்துறை முத்தொடு பூண்டு* (சிலப். 14:79-80)
*வாயிலோன், வாழி யெம் கொற்கை வேந்தே* (சிலப். 20-30)
*கொற்கைக் கொண்கன் குமரித்துறைவன்* (சிலப். 20-11)

என்று கொற்கையின் சிறப்பைப் பாடியுள்ளனர்.

கொற்கைத் துறைமுகம் என்றாலே பாண்டியர்களைப் பற்றிய நினைவு தோன்றும் வண்ணம் அந்தத் துறைமுகத்தின் சிறப்பினைப் புலவர்கள் எடுத்தியம்பியுள்ளனர். ‘கொற்கையம் பேரூர்’, ‘கொற்கை முன்றுறை நற்கொற்கையோர் நசைப் பொருநன்’, ‘கொற்கைக் கோமான்’, ‘கல்லெனக் கலிகெழு கொற்கை’ ‘கொற்கையம் பெருந்துறை முத்து’, ‘கொற்கைப் பொருநன்’, ‘முத்துப்படு பரப்பிற் கொற்கை’, ‘பேரிசைக் கொற்கைப் பொருநன்’ எனப் பல தொடர்களில் கொற்கையைப் புலவர்கள் சிறப்பித்துள்ளனர்.

## அகழாய்வு

கொற்கையில் முதன்முதலில் வரலாற்றுச் சிறப்புகளை வெளிப்படுத்திய பெருமை இராபர்ட் கால்டுவெல் என்பவரையே சாரும். அவர் கொற்கை ஆய்வின் போது அங்கு முதுமக்கள் தாழி இருந்ததைக் கண்டுபிடித்துள்ளார்.

1888-ஆம் ஆண்டில் கொற்கை சென்று, அங்குக் கிடைத்த பழங்காசுகளைச் சேகரித்துத் திருநெல்வேலி காசுகள் என்னும் நூலை எழுதினார். 1968-1969-ஆம் ஆண்டுகளில் தமிழக அரசின் தொல்பொருள் ஆய்வுத் துறையினர் ஆய்வு நடத்தினர். ஆய்வில் அங்கு உப்பளங்கழிகள் இருந்ததற்கான அறிகுறிகள் உள்ளதாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

பண்டைய தமிழ் எழுத்துகள் பொறிக்கப்பட்ட ஓடுகள், யவனநாட்டுப் பீங்கான் கோப்பைகள், மண்ணால் செய்யப்பட்ட பொம்மைகள், மணிகள், வளைகள், மோதிரங்கள் செய்வதற்கு அறுக்கப்பட்ட சங்குகளில் எஞ்சிய துண்டுகள் முத்துச் சிப்பிகள், பழங்காசுகள், முத்துக்களைத் தரம் பிரிக்கும் கற்கள் போன்ற பல பொருள்கள் கிடைத்துள்ளன. 1970ஆம் ஆண்டு வெளியிட்ட தமிழகம் என்னும் இதழ், “அகழாய்வின் போது ஏராளமான அளவிற்கு முத்துச் சிப்பிகள் கண்டு பிடிக்கப்பட்டதைக் கொண்டு, கொற்கை முத்துக்குளிப்பதற்கு ஒரு சிறந்த இடமாக இருந்தது என்பது உறுதிப்படுகிறது.”[77] என்பதைக் குறிப்பிட்டுள்ளது.

கொற்கையின் சிறப்பினையும், காயலின் தோற்றத்தினையும் கால்டுவெல் அவர்கள் திருநெல்வேலி மாவட்ட வரலாறு என்னும் நூலில் விவரித்துள்ளார்.

நெல்லை மாவட்டத்தில் நாங்குநேரி வட்டத்தில் திருக்குறுங்குடியில் உள்ள கல்வெட்டில் கொற்கைக்குச் செல்லும் வழிகள் இருந்தன என்று குறிப்பிடப்பட்டுள்ளது. கொற்கை குடநாட்டுப் பிரிவிற்குள் அடங்கி இருந்தது என்று அக்கல்வெட்டு எடுத்துக் காட்டுகிறது.

திருச்செந்தூர் கல்வெட்டு ஒன்று, குடநாட்டுக்கொற்கை என்று குறிப்பிடுகிறது. இஃதன்றிப் பல கல்வெட்டுகளில் கொற்கை இடம் பெற்றுள்ளது. இவைகளில் கொற்கை மதுராந்தக நல்லூர், மதுரோதய நல்லூர், மதிவரோதய நல்லூர் என்று பெயர் பெற்றுள்ளது.

## கொற்கையின் சுற்றுப்புறங்கள்

இன்றுள்ள கொற்கைச் சிற்றூரின் மேல்பகுதியில் அக்கசாலை ஈஸ்வரம் உள்ளது. கொற்கையின் நாணயங்கள் தயாரிக்கும் தொழிற்சாலைகள் அவ்வாறு நாணயங்கள் தயாரிக்கும் தெருவிற்கு அக்கசாலைத் தெரு என்று பெயர் சூட்டினர்.

"அக்கசாலை எனப் பெயர் கொண்ட சிற்றூர் ஒன்றும் கொற்கைக்கு அருகில் உள்ளது. ஜேம்ஸ் அர்னல் (James Hornell) என்ற அறிஞர் அக்கசாலை என்ற இடத்தைத் தோண்டிப் பல்வேறு நாட்டு நாணயங்களைக் கண்டறிந்துள்ளார்.[78]

## வெற்றிவேல் அம்மன் கோயில்.

அக்கசாலை ஈஸ்வரத்திற்கு நேர்க்கிழக்கில் கோயில் ஒன்று உள்ளது. அக்கோயிலுக்குச் செழியன் நங்கையெனும் வெற்றிவேல் அம்மன் கோயில் எனப் பெயரிடப்பட்டது.

## கொற்கை இன்றைய நிலை

பாண்டியர்கள் காலத்தே சிறப்புற்றிருந்த கொற்கை, இன்று தூத்துக்குடி மாவட்டம் திருச்செந்தூர் வட்டத்தில் சிற்றூராகக் காட்சியளிக்கின்றது. கொற்கையின் பெருமையை வரலாறுகளும், சங்கநூல்களும் எடுத்துக்காட்டுகின்றன. பாண்டியர்களுக்குப் பிற்காலத்தில் காயல் துறைமுகமானதால் கொற்கையின் மதிப்பு நாளடைவில் குறைந்தது.

கொற்கையில் இருந்த சுங்கச்சாவடி காயலுக்கு மாற்றப்பட்டது. கலங்கரை விளக்கமும் மாற்றப்பட்டது. மீன் பிடித்தொழிலும் சங்குகுளிக்கும் தொழிலும் காயல் பட்டினத்திற்கு மாற்றப்பட்டன.

கொற்கைப்பட்டினம் சீர்குறைந்து போனாலும் நிலவளமும் நீர்வளமும் சிறப்பாக இருப்பதால் இன்று அழகிய சிற்றூராய்க் காட்சியளிக்கிறது.

## கோடி

சங்க இலக்கியத்தில் 'தொள்முது கோடி' என்று சுட்டப்பெறும் கோடியக் கரை, இன்றைய ராமநாதபுர மாவட்டம் இராமேசுவரத்துக்கு அருகில் உள்ளது. கடலுட் செல்லும் தரைமுனை எனப்பொருள்படும் கோடி என்ற சொல்லே இவ்வூர் கடற் கரையில் அமைந்த ஊர் என்பதைக் காட்டுகின்றது.

அகநானூறு 70-ஆம் பாடலில் ‘தொன் முதுகோடி’ என்று அழைக்கப்படும் கோடிக்கரைப் பாண்டிய மன்னருக்கு உரியதாகக் கூறப்பட்டுள்ளது. இங்கு ஓசையிட்டுக் கொண்டிருந்த பறவைகளின் ஒலியை இராமன் நிறுத்தினான் என்று அகப்பாட்டு கூறுகிறது.

*வென்வேற் கவுரியர் தொன்முது கோடி*
*முழங்கிடும் பௌவம் இரங்கும் முன்துறை*
*வெல்போர் இராமன் அருமறைக்கு அவித்த*
*பல்வீழ் ஆலம் போல*
*ஒலி அவிந்தன்று இவ் அழுங்கல் ஊரே* (அகம். 70:13-17)

கோடிக்கரையில் பறவைகள் மிகுதியாக இருந்தனவாக அகநானூறு கூறும் செய்தி மிகவும் சிறப்பானதாகும். இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர்க் கோடிக்கரையில் பறவைகள் இருந்தமை பற்றி அகநானூறு கூறும் செய்தி இன்றும் உண்மையாக இருப்பது மிகவும் வியப்பானதாகும். எனவேதான் கோடிக்கரையைப் பறவைகள் புகலிடமாகத் (Bird santuary) தமிழக அரசு நிறுவியுள்ளது. கோடிக்கரை முற்காலத்தில் தமிழ்நாட்டின் தென்முனையிலிருந்து இலங்கைக்குச் செல்லக் குறுக்கு வழியாக இருந்ததாகத் தெரிகிறது. கோடிக்கரை முனைக்கும் (point calimere) இலங்கையிலுள்ள பேட்ரே முனைக்கும் (point pedro) 40 மைல் தூரம் உள்ளது.[79]

## சிறுகுடி

குடி என்னும் சொல் ஊர்ப்பெயர்களில் அமைந்து குடியிருப்பை உணர்த்து வதாகும். உறவு முறையையுடைய பல குடும்பத்தார் ஒரு குடியினராகக் கருதப்படுவர். இத்தகைய குடியினர் சேர்ந்து வாழும் இடம் குடியிருப்பு என்றும், குடி என்றும் சொல்லப்படும்.[80] அத்தகைய குடியிருப்புகள் பரப்பின் சிறுமையால் சிறுகுடி எனப்பெயர் பெற்றிருக்கிறது. குறிஞ்சி நிலத்து ஊர் சிறுகுடி எனப்பெயர் பெறும். கடற்கரை ஊரும் அப்பெயர் பெறுகின்றது. இவையெல்லாம் ஒரு குறிப்பிட்ட ஊரைக் குறிப்பன அல்ல.

சிறுகுடி என்ற பெயரில் தஞ்சை மாவட்டம் நன்னிலம் வட்டத்தில் ஓர்ஊர் உள்ளது. ஆனால் சங்க இலக்கியம் குறிப்பிடும் சிறுகுடி மதுரைமாவட்டம் நத்தம் வட்டத்திலுள்ளது.[81]

*வாணன் சிறுகுடி அன்ன* (நற். 340:9)

*மூதில் அருமன் பேரிசைச் சிறுகுடி* (நற். 367:6)

*தனக்கென வாழப் பிறர்க்கு உரியாளன்*
*பண்ணன் சிறுகுடிப் படப்பை நுண் இலைப்*
*புன்காழ் நெல்லிப் பைங்காய் தின்றவர்*
*நீர்குடி சுவையின் தீவிய மிழற்றி* (அகம். 54:14-17)

*பொய்கை சூழ்ந்த, பொய்யா யாணர்*
*வாணன் சிறுகுடி வடாஅது*
*தீம்நீர்க் கான்யாற்று அவிர் அறல் போன்றே* (நற். 117:15-19)

வெண்ணெல் அரிநர் மடிவாய்த் தண்ணுமை

*பல்மலர்ப் பொய்கைப் படுபுள் ஓப்பும்*
*காய் நெல் படப்பை வாணன் சிறுகுடி* (நற். 204:10-12)

*வாணன் சிறுகுடி வணங்குகதிர் நெல்லின்*
*யாணர்த் தண்பணைப்போது வாய் அவிழ்ந்த* (நற். 269:22-24)

*கிள்ளி வளவன் நல்இசை உள்ளி*
*நாற்ற நாட்டத்து அறுகாற் பறவை*
*சிறுவெள் ஆம்பல் ஞாங்கர் ஊதும்*
*கைவள் ஈகைப் பண்ணன் சிறுகுடி* (புறம். 70:10-13)

பண்ணன் என்ற வள்ளலுக்குரிய ஊராகச் சங்க இலக்கியம் கூறுகிறது. ஆகவே சிறுகுடி பண்ணன் என்னும் பெயர் பெற்றான். இப்பகுதியில் மிகுதியாக வாழும் கள்ளர் இனத்தவரின் ஒரு பிரிவினர் சிறுகுடி நாட்டுக்கள்ளர் எனப்படுவது இவ்வூரின் பழமையை உணர்த்துகிறது.

**சிறுமலை**

*இழையணி நெடுந்தேர்க் கைவண் செழியன்*
*மழைவிளை யாடும் வளங்கெழு சிறுமலை* (அகம். 47:15-16)

என்று அகநானூற்றில் ஆலம்பேரிச் சாத்தனாராலும்,

*மாவும் பலாவுச் சூழடுத் தோங்கிய*

*தென்னவன் சிறுமலை* (சிலப். 11:84-85)

என்று சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகளாலும் பாடப்பெறும் சிறுமலை திண்டுக்கல் மாவட்டம் திண்டுக்கல் வட்டத்தில் உள்ளது. செழியன், தென்னவன் என்ற பெயர்கள் பாண்டியர்களைச் சுட்டுவதாலும், சிலப்பதிகாரத்தில் மதுரைக்கு வரும் வழியில் உள்ள மலையாகச் சொல்லப்படுவதாலும் இன்றைய சிறுமலை முன்பும் இதே பெயரில் வழங்கியிருக்கிறது எனலாம்.

## திருமருத முன்துறை

'திருமருத முன்துறை' என்ற வழக்கே பின்னர், 'மதுரை' என மருவியதென்று என். சுப்பிரமணியம் கருதுகின்றார்.[82]

*தீம்புனல் வையைத் திருமருத முன்துறை* (பரி. 22-45)

என்றும்,

*உருபிடி சேர்ந்த முழக்கம் புரையும்*

*திருமருத முன்துறை சோபுனற்கண் துய்ப்பார்*

*தாமந் தலைபுனை பேஎநீர் வையை* (பரி. 7:82-84)

என்றும்,

*திசைதிசை தேனார்க்குந் திருமருத முன்துறை* (கலி. 26-13)

என்றும் சங்க இலக்கியத்தில் திருமருத முன்துறை குறிப்பிடப்படுகிறது. வையையாற்றின் கரையிலிருந்த ஒரு நீராடு துறையாகத்தான் இது இப்பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. பரிபாடல் திரட்டின் இரண்டாம் பாடலில்,

*காமரு வையை கடுகின்றே கூடல்* (பரி. திரட்டு. 2-4)

என்று கூடல் நகர மக்கள் வையைக்கு விரைந்தது முதலில் குறிப்பிடப்படுகிறது. தொடர்ந்து, அரசனும் மக்களும் வையைத் துறைக்குச் சென்றது.

*பொற்றேரான் தானும் பொலம்புரிசைக் கூடலும்*

*முற்றின்று வையைத் துறை* (மேலது, 2:26-27)

எனப் பாடப்படுகின்றது. அத்துறையின் பெயர் என்னவென்பது பாடலின் இறுதிப் பகுதியில் வெளிப்படுகின்றது.

*மணியணி யானைமிசை மைந்தரு மடவாரும்*

*நிரை நிரை குழீஇயி னருடன் சென்று*

*குருமணி யானை இயன்தேர்ப் பொருநன்*

*திருமருத முன்துறை முற்றங் குறுகி* (மேலது, 2:69-72)

என்பதிலிருந்து திருமருத முன்துறையே அத்துறையென அறியலாம். இப்பாடலிலிருந்து திருமருத முன்துறை கூடலுக்குரிய (மதுரைக்குரிய) வேறு பெயரில்லை; கூடலின் ஒரு பகுதிதான் என்று அறிய முடிகின்றது. ‘மதுரை’ என்ற வழக்கும் இத்தொகைப் பாடல்களில் ஒரே காலத்தில் குறிக்கப்படுகிறது. திருமருத முன்துறைதான் மதுரையென்று மருவியிருந்தால் இரு வழக்குகள் எப்படி ஒரே காலத்தில் குறிப்பிடப்பட்டிருக்க முடியும். எனவே, திருமருதமுன்துறைதான் ‘மதுரை’ என்றானது என்ற கூற்று ஏற்றுக்கொள்ளத்தக்கதாக இல்லை.

## திருமால் குன்றம்

அழகர் கோயில் என்று இன்று அழைக்கப்பெறும் வைணவத்திருப்பதி ‘இருங்குன்றம்’, ‘மாலிருங்குன்றம்’, ‘ஐயிருங்குன்றம்’ என்ற பெயர்களால் பரிபாடலில் பாடப்பெற்றுள்ளது.

*யாமத் தன்மைஇவ் ஐ இருங்குன்றத்து* (பரி. 15-26)

என்றும்,

*இருங்குன்று என்னும் பெயர் பரந்ததுவே*

*பெருங்கலி ஞாலத்துத் தொன்றுஇயல் புகழாது* (மேலது, 15:35-36)

என்றும்,

*கடந்து அட்டான் கேழ் இருங்குன்று* (மேலது, 15-45)

*இருங்குன்றத்து அடி உறை இயைக* (மேலது, 15-65)

என்றும்,

*அரிதின் பெறுதுறக்கம் மாலிருங்குன்றம்*
*எளிதின் பெறல் உரிமை ஏத்துகம், சிலம்ப* (மேலது, 15:17-18)

இவ்வாறு பரிபாடல் கூறுகிறது. சிலப்பதிகாரம் இதனைத் 'திருமால்குன்றம்' என்று குறிப்பிடுகின்றது.

*கடம்பல கிடந்த காடுடன் கழிந்து*
*திருமால் குன்றத்துச் செல்குவி ராயின்* (சிலப். 11:90-91)

முதலாழ்வார்களில் ஒருவரான பூதத்தாழ்வார் இதனை 'மாயி(லி)ருஞ்சோலை மாலை' என்று பாடுகிறார்.[83] பின்னர் வந்த பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் முதலான ஆழ்வார்கள் 'மாலிருஞ் சோலை' என்று பாடியிருக்கின்றனர்.[84]

'திருமாலிருஞ்சோலை' என்ற வழக்கினை முதன்முதலாகப் பெரியாழ்வார் கையாண்டுள்ளார்.[85] 'அழகர்கோயில்' என்ற வழக்கு நம்மாழ்வாரின் 'அழகர் தம் கோயில்'[86] என்ற பாடலடிகளின்று உருப்பெற்றிருக்கலாமெனத் தெரிகிறது. இது முதல் பின்னர் வந்த கல்வெட்டுகளும் இலக்கியங்களும் திருமாலிருஞ்சோலை, அழகர்கோயில் என்னும் இரு வழக்குகளை மிகுதியும் பயன்படுத்துகின்றன. திருமால் உறையும் குன்றம் ஆதலின் 'திருமாலிருஞ்சோலை' என்ற வழக்கும் தலத்துத் திருமாலின் திருநாமம் அழகர் என்பதால் அழகர்கோயில் என்ற வழக்கும் காரணப்பெயர்களாகத் தோன்றின என்பது வெளிப்படை.

## தேனூர்

சங்க இலக்கிய அகத்துறைப் பாடல்களில், தலைவியின் நலம் பாராட்டும் பொழுது 'தேனூரன்ன' என்னும் தொடர் மூன்று இடங்களில் ஆட்சிபெற்றுள்ளது. ஐங்குறுநூற்றில்

*திண்டேர்த் தென்னவன் நல்நாட்டு உள்ளதை*

*வேனில் ஆயினும் தண்புனல் ஒழுகும்*

*தேனூர் அன்ன இவள்...* (ஐங். 54:1-3)

*தேர்வண் கோமான் தேனூரன்ன* (ஐங். 55-2)

*ஆம்பலஞ் செறுவில் தேனூரன்ன* (ஐங். 57-2)

என்று தேனூர் குறிக்கப்படுகிறது. இனிமை என்றும் மணம் என்றும் பொருள்படும் தேன் என்ற சொல்லின் அடியாக இவ்வூர்ப்பெயர் அமைந்திருக்கிறது. இத்தேனூர் பாண்டியநாட்டில் இருப்பதாகச் சொல்வதாலும் புனல் ஒழுகும் இடமாக இன்றும் இருப்பதாலும் இன்றை மதுரைமாவட்டத்துத் தேனூரே பழைய தேனூர் எனலாம்.

தாலமியும் (கி.பி. 130) தேனூரைக் (Tainour) குறிப்பிடுகின்றார்.[87] இவ்வூருக்குச் சனநாத சதுர்வேதி மங்கலம் என்ற பெயர் இராசராசனின் பட்டப்பெயரான சனநாதன் என்பதனையொட்டிச் சூட்டப்பட்டு வழங்கியதை முதலாம் இராசராச சோழனின் 17-ஆம் ஆட்சியாண்டுத் தென்கரைக் கல்வெட்டு குறிக்கிறது.[88] பெரும் என்ற அடைமொழி சேர்ந்தும் இவ்வூர் பெருந்தேனூர் என்று வழங்கப்பட்டதைச் சடாவர்மன் சுந்தரபாண்டியனின் 8-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி.பி. 1258) காட்டுகிறது.[89]

**நல்லூர்**

நல்லூர் என்னும் ஊருக்கு உரியவனாக வையாவிக்கோப்பெரும் பேகன் பரணரால் பாடப்பெறுகின்றான்.

*ஒல்லென ஒலிக்கும் தேரொடு*

*முல்லைவேலி நல்லூரானே* (புறம். 144:13-14)

வையாவிக்கோப்பெரும் பேகனுக்குரிய ஆவிநாடு பழனி வட்டாரத்தில் இருந்ததென்பதும், வைகாவூர் நாடு எனப் பழனிப்பகுதி பின்னர் அழைக்கப்பெற்றது இவனது பெயரையொட்டியே என்பதும் வரலாறு காட்டும் உண்மையாகும். எனவே பேகனின் நல்லூரும் இப்பகுதியில் இருந்திருத்தல் வேண்டும். திண்டுக்கல் மாவட்டம் ஒட்டன் சத்திரம் ஒன்றியத்தில் நல்லூர்ப்பட்டி என்னும் ஊரும், தொப்பம்பட்டி ஒன்றியத்தில் நல்லூர் என்னும் ஊரும் இருக்கின்றன. இவற்றில் தொப்பம்பட்டி ஒன்றியத்தில் உள்ள நல்லூரே சங்ககால நல்லூராகும்.

**நாஞ்சில்**

மதிலுறுப்பு என்னும் பொருளுடைய நாஞ்சில் என்னும் சொல் மதிலோடு கூடிய கோட்டை அமைந்த மலைக்கு பெயராய் அமைந்துள்ளது. கோட்டாறு என்னும் முக்கிய நகரத்தைக்கொண்டது நாஞ்சில் நாடு. இது சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் ஆட்சியில் மாறிமாறி இருந்திருக்கிறது.[90]

நெடுமாறன் என்னும் பாண்டியன் சேரனோடு நாஞ்சில் நாட்டில் போர் செய்து வென்றான் (பாண்டிக்கோவை) என்ற செய்தி பாண்டியர் ஆட்சியில் நாஞ்சில் இருந்ததையும் நாஞ்சில் நாட்டுக் கோட்டாறு, மும்முடிச் சோழபுரம் என்றும், சோழ கேரளபுரம் என்றும் கல்வெட்டுகளில் குறிக்கப்பெற்றிருப்பதால் சோழர் ஆட்சியில் இந்நாடு இருந்ததையும் அறிவிக்கின்றன.

நாஞ்சில் நாடு முன்னர்த் திருவிதாங்கூர் இராச்சியத்தின் ஒரு பகுதியாய் இருந்து, 1956 முதல் தமிழ்நாட்டைச் சேர்ந்திருக்கிறது. இன்றைய கன்னியாகுமரி, குறிப்பாக நாகர்கோவில் பகுதியே அப்பகுதியாகும்.[91] 'உயர்சிமைய உழாஅ நாஞ்சில் பொருந' (புறம். 1 39-8) என்னும் புறநானூற்றுத் தொடர் உழுபடையைக் குறிக்காமல் மலையைக் குறித்து நாட்டிற்குப் பெயராயிற்று. 'உயர்சிமைய' என்னும் தொடர் சிகரங்களை யுடைய மலையைக் குறிப்பதைக் காணலாம். நாஞ்சில் நாட்டுத் தலைவன் நாஞ்சில் வள்ளுவன் எனப்பெயர் பெற்றான். இந்நாஞ்சில் வள்ளுவனைப் பெரியனார் (புறம். 137-வது பாடல்) மருதன் இளநாகனார் (புறம். 138, 139 ஆகிய பாடல்கள்), ஔவையார் (புறம். 140-வது பாடல்), கருவூர்க்கதப்பிள்ளை (புறம். 380-வது பாடல்) முதலிய புலவர்கள் பாடியுள்ளனர்.

*செவ்வரைப் படப்பை நாஞ்சில் பொருந!*
*சிறுவெள்ளருவிப் பெருங்கல் நாடனை* (புறம். 137:12-13)

என்றும்,

*தடவுநிலைப் பலவின் நாஞ்சில் பொருநன்* (மேலது, 140-1)

என்றும்,

*தீம்சுனைப் பலவின் நாஞ்சில் பொருநன்*

*துப்புஎதிர்ந் தோர்க்கே உள்ளாச் சேய்மையன்* (மேலது, 380:9-10)

என்றும் நாஞ்சில் நாட்டினைப்பற்றிய பதிவுகள் புறநானூற்றில் மட்டுமே காணப்படுகின்றன. நாஞ்சில் என்ற சொல்லாட்சி சங்க இலக்கியத்தில் அகம். 42-5; 141-5; கலி. 8-5; பதிற்று. 19-17; 25-1; 26-2; 58-17; பரி. 1-5; 4-39; 20-58, புறம். 19-11; 20-11; 56-4; பெரும். 199 ஆகிய இடங்களில் ஆளப்பட்டாலும் அவை கலப்பை என்ற பொருளில் கையாளப்படுகின்றன.

**நாலை**

*தோலா நல்இசை, நாலை கிழவன்*

*பருந்துபசி தீர்க்கும் நற்போர்த்*

*திருந்துவேல் நாகற் கூறினர், பலரே* (புறம். 179:10-12)

என்ற புறநானூற்றுப்பாடலின் மூலம் நாலை என்ற ஊரினை அறிய முடிகின்றது. இவ்வூரினை ஆட்சிச் செய்தவன் நாலைக்கிழவன் நாகன் எனப்பட்டான். இவனைப் புறநானூற்றில் (179-வது பாடல்) வடநெடுந்தத்தனார் என்ற புலவர் பாடியுள்ளார். இந் நாலை என்னும் ஊர் தற்போது நாலூர் என மருவியுள்ளது. விருதுநகர் மாவட்டம் அருப்புக்கோட்டை வட்டத்தில் இந்நாலூர் என்ற ஊர் உள்ளது.

**பழமுதிர் சோலை**

*இழுமென இழிதரு மருவிப்*

*பழமுதிர் சோலை மலைகிழ வோனே* (திருமுருகு. 316-317)

என்னும் திருமுருகாற்றுப்படையின் இறுதியடிகளில் வரும் ‘பழமுதிர்சோலை’ என்பது, ஆறுபடை வீடுகளுள் ஒன்றான அழகர்கோயில்; பழமுதிர்ச்சோலையைக் குறிக்கிறது. என்று கருதப்படுகிறது. ஆனால் மா. இராசமாணிக்கனார், தொ. பரமசிவன் முதலானோர் இதனை மறுகின்றனர்.[92] ‘பழமுதிர்சோலை மலைகிழவோனே’ என்பது எழுவாயாக அமைந்து, பழங்கள் உதிர்கின்ற சோலையினையுடைய முருகனைக் குறிக்கின்றதேயன்றித் தனியான இடத்தைக் குறிக்கவில்லை என்கிறார் மா. இராசமாணிக்கனார்.[93]

'பழமுதிர் குன்று' (நற். 88-9) என்னும் தொடர் நற்றிணையில் வந்துள்ளது. அதுபோலவே திருமுருகாற்றுப்படையில் 'பழமுதிர்சோலைமலை' என்பது குறிக்கப்பட்டுள்ளது. மேலும், 'பழமுதிர்சோலைமலை' என ஒருமலை முருகனுக்கு உரியது என்பதற்கோ அம்மலை அழகர்மலையே என்பதற்கோ அங்கு முருகன் கோயில் இருந்தமைக்கான சான்றுகள் சங்க நூல்களிலும் இடைக்காலக் கல்வெட்டுகளிலும் சான்று இல்லை என்று மேலும் இக்கருத்தினை அவர் வலியுறுத்துகின்றார்.[94]

மதுரைக்கு அருகில் பழமுதிர்சோலை என்னும் முருகன் தலம் இருப்பின் பரங்குன்றினைப் பலபடப் புனைந்து பாடிய சங்கப்புலவர்கள் ஏன் இதனைப் பாடவில்லை? என்ற கேள்வியின் வழித் தம் கருத்தை மேலும் வலியுறுத்துகிறார். மா. இராசமாணிக்கனார்.[95] ''திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருஆவிநன்குடி, திருவேரகம் ஆகியன திருமுருகாற்றுப்படையில் நக்கீரர்காட்டும் ஆற்றுப்படை வீடுகளாகும் (தலங்களாகும்). ஆற்றுப்படை வீடு என்னும் சொல்லே மக்கள் வழக்கில் 'ஆறுபடை வீடு' எனத் திரிந்தது. எனவேதான் திருமுருகாற்றுப்படையில் வரும் குன்றுதோறாடல், பழமுதிர்சோலைமலை என்னும் இரண்டு சொற்களையும் இரண்டு முருகன் திருப்பதிகளின் பெயர்கள் என்று தவறாகக் கருத இடமேற்பட்டது'' என்கிறார் தொ. பரமசிவன்.[96] மேலும் அவர், 'கந்தபுராண ஆசிரியரும் அருணகிரிநாதரும் இத்தவறான கருத்தின் அடிப்படையில், அப்படியொரு தலத்தினை நேரில் பார்த்தறியாது, கேட்ட அளவில் 'பழமுதிர்சோலை என்ற முருகன் திருப்பதி இருப்பதாகப் பாடியிருக்கின்றார்' என்று கூறுகிறார்.[97]

பழமுதிர்சோலை என்ற பெயரில் முருகன்கோயில் இருந்ததில்லை என்பதை 1962 ஆம் ஆண்டைய உயர்நீதிமன்றத் தீர்ப்பும் சுட்டிக்காட்டி உள்ளது.[98]

### பறம்பு மலை

*முந்நூறு ஊர்த்தே தண்பறப்பு நல்நாடு* (புறம். 110-3)

பாரியின் ஆட்சியிலிருந்த பறம்புமலை முந்நூறு ஊர்களை உடையது. உழவரால் உழுது விளைக்கப்படாதன நான்குண்டு அவற்றுள் முதலாவது சிறிய

இலையையுடைய மூங்கிலினது நெல். இரண்டாவது இனிய சுவையையுடைய பலாவின் கனி. மூன்றாவது கொழுவிய கொடியையுடைய வள்ளிக்கிழங்கு. நான்காவது தேன். இந்த நான்கும் பிறர் உதவியின்றி இயற்கையில் பெறப்படுவதனால் பறம்பின்கண் எவ்வளவு நாள் முற்றுகை நீடித்தாலும் அங்குள்ள மக்கள் பசித்துன்பத்தால் வருந்தி முற்றுகைக்குப் பணியமாட்டார்கள் என்று பறம்பின் பெருமை பேசப்படுகிறது.

*அளித்தோதானே பாரியது பறம்பே*
*நளிகொள் முரசின் மூவிரும் முற்றிலும்*
*உழவர் உழாதன நான்கு பயனுடைத்தே* (புறம். 109:1-3)

மேலும், மூவேந்தர் ஒன்று கூடிப்பொருதாலும் பாரியின் பறம்பினை வெல்ல முடியாது என்று அதன் காவற்றன்மையைக் கபிலர் பாடுகின்றார்.

*கடந்து அடுத்தானை மூவரும் கூடி*
*உடன்றனிர் ஆயினும் பறம்புகொளற்கு அரிதே* (மேலது, 110:1-2)

மேலும்,

*பறம்பிற் கோமான் பாரி* (மேலது, 158-4)

என்றும்,

*பிறங்கு வெள்ளருவி வீழுஞ்சாரற்*
*பறம்பிற் கோமான் பாரியும்* (சிறுபாண். 90-91)

என்றும்,

*ஊருடன் இரவலர்க்கு அருளி தேருடன்*
*முல்லைக்கு ஈத்த செல்லா நல்இசை*
*படுமணி யானை பறம்பின் கோமான்* (புறம். 201:2-4)

என்றும்,

*பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்* (குறுந். 196-3; புறம். 196-9)

என்றும்,

*உரைசால் வண்புகழ்ப் பாரி பறம்பின்* (அகம். 303-10)

என்றும்,

*பாரி பறம்பின் பனிச்சுனை போல* (புறம். 337-6)

என்றும்,

*கூர்வேல் குவைஇய மொய்ம்பின்*
*தேர்வண் பாரிதண் பறம்பு நாடே* (மேலது, 118:4-5)

என்றெல்லாம் பாரியின் பறம்பு மலையைப் புலவர்கள் பெரிதும் சிறப்பித்துள்ளனர். பாரியின் பறம்புமலை சிவகங்கை மாவட்டம் திருப்பத்தூர் வட்டத்திலுள்ளது. சங்க காலத்தில் பறம்புமலை என்றும், சமய காலத்தில் திருக்கொடுங்குன்றம் என்னும் பெயர் பெற்ற இம்மலையும் மலைசார்ந்த ஊரும் பிரான்மலை என்று பெயர் பெற்றிருக்கின்றன. 2450 அடி உயரமுள்ளது இம்மலை. இம்மலையில் நூற்றுக்கும் மேற்பட்ட வகையிலான மலர்கள் பூத்துக்கிடப்பதைத் தனது குறிஞ்சிப்பாட்டில் கபிலர் விவரிக்கின்றார்.

பறம்பு மலை திருப்பத்தூர் வட்டத்திற்குத் தெற்கே சிவகங்கை வட்டமும், அதற்கும் தெற்கே பரமக்குடி வட்டமும் உள்ளன. எனவே சங்ககாலப் பறம்பு நாடு என்பது ஏறத்தாழ மதுரை மாவட்டத்து மேலூர் வட்டத்தின் கிழக்குப்பகுதியும், சிவகங்கை மாவட்டத்து சிவகங்கை, திருப்பத்தூர் வட்டங்களும், இராமநாதபுர மாவட்டத்துப் பரமக்குடி வட்டங்களும் அடங்கிய நிலப்பரப்பாக இருந்திருக்கிறது.

"நன்னன் பறம்பு (அகம். 356-8) என்ற ஒரு தொடர் அகநானூற்றில் இடம்பெற்றுள்ளது. நன்னனின் முக்கிய நகரமாகிய பாரம் என்ற ஊரையடுத்துள்ள முறம்பு நிலமே பறம்பு எனக் கூறப்பெற்றுள்ளது[99] என்ற கருத்தை நாம் ஏற்றுக்கொண்டால் பறம்பு மலையும் நாடும் பாரியின் தொடர்புடையனவேயன்றிக் கொண்கான நன்னனுக்கும் இந்நாட்டிற்கும் ஒரு தொடர்பும் இல்லை என்று துணியலாம்.

## பிசிர்

கோப்பெருஞ் சோழனின் ஆருயிர் நண்பராகிய ஆந்தையான் என்ற சங்ககாலப் புலவர் இவ்வூரினர். நற்றிணையில் 61-ஆம் பாடலும், அகநானூற்றில் 308-ஆம் பாடலும், புறநானூற்றில் 67, 184, 191, 212 ஆகிய பாடல்களும் இவ்வூரைச் சார்ந்த பிசிராந்தையார் பாடியது ஆகும்.

*தென்னம் பொருப்பன் நன்னாட் டுள்ளும்*

*பிசிரோன் என்ப என்உ யிர் ஓம்புநனே* (புறம். 215:6-7)

"தென்னம் பொருப்பன் நன்னாட்டுள்ளும் பிசிரோன்" என்னும் கோப்பெருஞ் சோழனின் கூற்று 'பிசிர்' என்னும் ஊர் பாண்டிய நாட்டினது என்பதைக் காட்டுகிறது. தற்போது இராமநாதபுரம் மாவட்டத்தில் பிசிர்க்குடி என்று இவ்வூர் வழங்கப்படுகிறது.[100]

*பெருங்கோக் கிள்ளிகேட்க இரும்பிசிர்*

*ஆந்தை அடியுறை' எனினே, மாண்டநின்*

*இன்புறு பேடை அணிய, தன்*

*அன்புறு நன்கலம் நல்குவன் நினக்கே* (புறம். 67:11-14)

என்ற புறநானூற்றுப்பாடல் இவ்வூர்ப்பெயரினைப் பதிவுசெய்கிறது. சங்க இலக்கியத்தில் பிசிர் என்னும் சொல்லாட்சி, அகம். 210-4; 250-1;283-5; ஐங். 461-1;2; நற். 67-10; பரி 6-83 போன்ற இடங்களில் வந்தாலும் அவை ஊர்ப்பெயரினைக் குறிக்காமல் வெவ்வேறு பொருள்களில் கையாளப்படுகின்றன.

## பொதும்பில்

பொதும்பில் இகழார் என்னும் புலவரின் பெயரில் உள்ள பொதும்பில் என்ற ஊர்ப்பெயர் இன்றைய மதுரை மாவட்டத்திலுள்ள பொதும்பு என்கிறார் இரா. பி. சேதுப்பிள்ளை.[101] இச்சொல் சோலை என்ற பொருளில் வந்துள்ளது. பிணங்கவில் வள்ளை நீடிலைப் பொதும்பின்' (அகம். 256-1) என்று அகநானூற்று அடிகளில் பொதும்பு சோலையென்ற பொருளில் வந்துள்ளது. 'இல்' என்று முடிவு பெறும் 'அரிசில்', 'அழும்பில்' போன்ற ஊர்கள் சங்க காலத்தில் இருந்திருக்கின்றன.

நற்றிணையில் 56-ஆவது பாடலைப்பாடிய பொதும்பில் கிழார், நற்றிணையில் 375, 387 - ஆகிய பாடல்களைப்பாடிய பொதும்பில் கிழார் மகனார் வெண்கண்ணியார், அகநானூற்றில் 154-ஆவது பாடலைப்பாடிய பொதும்பிற் புல்லாளங் கண்ணியார் முதலிய சங்க காலப்புலவர்கள் இவ்வூரினைச் சேர்ந்தவர்கள் ஆவர்.

### பொருந்தில்

புறநானூற்றில் 53-ஆம் பாடலைப்பாடிய பொருந்திய இளங்கீரனார் என்ற புலவரின் மூலம் பொருந்தில் என்ற ஊர்ப்பெயரினை அறியமுடிகின்றது. இச்சிற்றூர் மேற்குத் தொடர்ச்சி மலையின் பின்புலத்தில் பொருந்தலாற்றின் இடக்கரையில் திண்டுக்கல் மாவட்டம், பழனி வட்டம், பழனி நகரத்திலிருந்து 12. கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது.

சேரரின் குலதெய்வமாகக் கருதப்படுகிற கொற்றவை உறையும் இடமான அயிரைமலையும், உரோம நாட்டு நாணயங்கள் கிடைத்த இடமான சின்னக்கலைய முத்தூரும், இடைக்கால வணிகக் குழுவான ஐந்நூற்றுவர் கல்வெட்டுக்கள் கிடைத்த ஊர்களான தாமரைக்குளமும் இராஜராஜபுரமும் இப்பொருந்தலுக்கு அருகில் அமைந்திருப்பது, இவ்வூரின் சிறப்பை மேலும் உயர்த்துவதாக அமைந்துள்ளது.[102]

### போந்தை

*ஏர்பரந்த வயல், நீர்பரந்த செறுவின்*
*நென் மலிந்தமனை, பொன் மலிந்த மறுகின்*
*படுவண்டு ஆர்க்கும் பல்மலர்க் காவின்*
*நெடுவேள் ஆதன் போந்தை அன்ன* (புறம். 338:1-4)

என்ற புறநானூற்றுப்பாடலின் மூலம் போந்தை என்ற ஊர்ப்பெயரினை அறிய முடிகின்றது.

“போந்தையென்ற பெயருடைய ஊர்கள் தமிழ்நாட்டில் பல பகுதிகளிலும் உள்ளன. இப்போந்தையென்னும் ஊர் மிறைக்கூற்றத்துப் போந்தை யென்று கல்வெட்டுகளில் (A.R.No. 5 of 1920) கூறப்படுகிறது. குறும்பொறை நாட்டிலும் ஓய்மா நாட்டிலும் உள்ளவை பொற்போந்தை (S.I.I. Vol.XII No. 97) யென்றும்,

அரும்போந்தை (A.R.No. 5 of 1919) யென்றும் குறிக்கப்படுகின்றன. மிறைக்கூற்றத்துப் போந்தைக் கண்மையில் ஆதமங்கலம் (A.R.No. 193 of 1927-28) என்றோர் ஊர் இருத்தலால், நெடுவேளாதனது போந்தை மிறைக்கூற்றத்துப் போந்தையாதல் வேண்டுமென்று கருதப்படுகிறது. மிறைக்கூற்றம் திருப்பழனம் முதலிய ஊர்களைத் தன்பால் உடையது. வேளிர்குடியில் சிறந்து விளங்கியவன் என்பது தோன்ற, ஆதன் நெடுவேளாதன் எனப்படுகின்றான்; இவ்வாறு நெடுவேள் எனச் சிறப்பிக்கப்படுகிறவன் பொதினி நகர்க்குரியனும் வேளிர் தலைவனுமான ஆவியென்பானவன்; அவன் நெடுவேள் ஆவி எனப்படுவது (அகம். 1) ஈண்டு நினைவு கூரத்தக்கது. வயலும் செறுவும் மனையும் மறுகும் கலகும் பிறவும் சிறப்பித்துக்கூறலின், இப்போந்தை அந்நாளில் மேன்மையுற்ற நகரமாக இருந்ததென்பது தோற்றம்."[103] திண்டுக்கல் மாவட்டம் பழனி வட்டத்தில் இவ்வூர் உள்ளது.

போந்தையென்ற சொல்லாட்சி சங்க இலக்கியத்தில் அகம். 238-16; குறுந். 281-2; நற். 174-2; பட். 74; பதிற்று. 51-9; 31:70-6; புறம். 85-7; 100-3; 265-3; 375-4; பொரு. 143 ஆகிய இடங்களில் இடம்பெற்றிருந்தாலும் அவை, பனைமரம் என்ற பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**மதுரை**

மதுரை நகருக்கு, 'மதுரை' என்ற பெயர் மட்டுமின்றி வேறுபெயர்கள் பலவும், அவற்றிற்குப் பலப்பல காரணங்களும், விளக்கங்களும் கூறப்பட்டு வழங்கி வருகின்றன. இவ்வாறு வழங்கிவரும் பெயர்கள் எப்பின்னணியில், எப்பொழுது வழங்கத் தலைப்பட்டன என்பது ஆராயப்படுகிறது.

**கூடல்**

சங்கவிலக்கியத்தில், மதுரைக்கு உரிய பெயராகக் 'கூடல்' என்பதுவும் குறிக்கப்படுகிறது.

*வாடா வேம்பின் வழுதி கூடல்* (அகம். 93-4)

என்றும்,

*பொய்யா விழவின் கூடற் பறந்தலை* (அகம். 116-14)

என்றும்,

*பாடுபெறு சிறப்பின் கூடல் அன்ன* (அகம். 231-13)

என்றும்,

*பொன்மலி நெடுநகர்க் கூடல்...* (அகம். 253-6)

என்றும்,

*மலைபுரை நெடுநகர்க் கூடல்..* (அகம். 296-12)

என்றும்,

*பெரும்பெயர் வழுதி கூடல் அன்னதன்* (அகம். 315-7)

என்றும்,

*மாடமலி மறுகின் கூடல் ஆங்கன்* (அகம். 346-20)

என்றும்,

*புலம்பூத்துப் புகழ்பு ஆனாக் கூடலும்...* (கலி. 27-12)

என்றும்,

*ஆனாச்சீர்க் கூடலுள்...* (கலி. 30-11)

என்றும்,

*நீள் உயர் கூடல் நெடுங்கொடி எழவே* (கலி. 31-25)

என்றும்,

*பூந்தண்தார்ப் புலர்சாந்தின், தென்னவன் கூடல்* (கலி. 57-8)

என்றும்,

*கலிகெழு கூடல்...* (கலி. 92-11)

என்றும்,

*மாடம் மலிமறுகின் கூடல் குடவயின்* (திருமுருகு. 71)

என்றும்,

*பெரும்பெயர்க் கூடல் அன்ன* (நற். 39-10)

என்றும்,

*பெற்றோர்ச் செழியன் கூடல் ஆங்கன்* (நற். 298-9)

என்றும்,

*மலிஓதத்து ஒலி கூடல்* (பட். 98)

என்றும்,

*மூன்றுடன் கூடிய கூடல் அனையை* (பதிற்று. 50-7)

என்றும்,

*குன்றத்தான் கூடல் வரவு* (பரி. 8-20)

என்றும்,

*குன்றம் உடைத்த ஒளிர்வேலோய்! கூடல்* (பரி.88-29)

என்றும்,

*யாம்வேண்டும் வையைப்புனல் எதிர்கொள் கூடல்* (பரி. 10-40)

என்றும்,

*மதிமாலை மால்இருள் கால்சீப்ப, கூடல்* (பரி. 10-112)

என்றும்,

*வருந்தாது வரும்புனல் விருந்து அயர், கூடல்* (பரி. 10-129)

என்றும்,

*ஆடல் தலைத்தலை சிறப்ப, கூடல்* (பரி. 12-31)

என்றும்,

*புலத்தினும், போரினும் போர்தோலாக் கூடல்* (பரி. 19-8)

என்றும்,

*குன்றொடு கூடல் இடையெல்லாம்...* (பரி. 19-15)

என்றும்,

*கூடல் விழையும் தகைத்து...* (பரி. 20-26)

என்றும்,

*நெடுநீர் மலிபுனல், நீள்மாடக் கூடல்* (பரி. 20-106)

என்றும்,

*தமிழ்கெழு கூடல் தண்கோல் வேந்தே* (புறம். 58-13)

என்றும்,

*இருபேர் யாற்ற ஒருபெருங் கூடல்* (புறம். 27-3-5)

என்றும்,

*குண்டுநீர் வரைப்பின், கூடல் அன்ன* (புறம். 347-6)

என்றும்,

*மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடல்* (மதுரைக். 429)

என்றும் சங்கச் செய்யுட்களில் பல இடங்களில் கூடல் என்ற வழக்கு வந்துள்ளது.

'மதுரை' என்ற வழக்கு

*மதுரைப் பெருமுற்றம் போல, நின் மெய்க்கண்* (கலி. 96-23)

*இடைநெறித் தாக்குற்றது ஏய்ப்ப, அடல் மதுரை* (பரி. 11-48)

*வந்துமதுரை மதில்பொரூஉம், வான்மலர் தாஅய்* (பரி. 12-9)

*மகிழ்நனை மறுகின் மதுரையும் வறிதே...* (சிறுபாண். 67)

*மிக்குப் புகழ் எய்திய பெரும்பெயர் மதுரை* (மதுரைக். 699)

*மாட மதுரையும் தருகுவன்...* (புறம். 32-4)

*குன்றுதல் உண்டோ மதுரை...* (பரி. திரட்டு. 9-3)

*பொய்யாதல் உண்டோ மதுரை...* (பரி. திரட்டு. 10-3)

*கோத்தைஉண் டாமோ மதுரை...* (பரி. திரட்டு. 11-3)

என ஒன்பது இடங்களில் மட்டும் இடம்பெற, 'கூடல்' என்ற வழக்கு முப்பதுக்கும் மேற்பட்ட இடங்களில் இடம்பெற்றுள்ளது. தேவாரம், திருவாசகம், திவ்வியப் பிரபந்தம் போன்ற இடைக்கால இலக்கியங்களிலும் பாண்டியர் செப்பேடுகள் சிலவற்றிலும் இவ்வழக்கு தொடர்ந்து வந்திருக்கிறது. ஆனால், கல்வெட்டுகள், அயல்நாட்டார் குறிப்புகள் போன்ற வரலாற்றுச் சான்றுகளில் இவ்வழக்கைப் பார்க்க முடியவில்லை.

'மதுரை' என்ற வழக்கு செல்வாக்குடன் எல்லாக் காலத்திலும் இலக்கியத்தில் மட்டுமின்றிப் பிற எழுத்துச் சான்றுகளிலும் இடம்பெற்று வந்துள்ளது. கி.பி. 2ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்ட தமிழ் பிராமிக் கல்வெட்டுக்கள்,[104] பிளினி,[105] தாலமி[106] முதலான அயல்நாட்டார் குறுப்புக்கள் போன்றவற்றில் 'மதுரை' என்பதை ஒட்டிய வழக்குகளே குறிக்கப்படுகின்றன சங்கப் பாடல்களைப் பாடிய புலவர்களைக் குறிக்கும்பொழுது மதுரையைச் சேர்ந்தவர்களுக்கு 'மதுரை' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டுள்ளது. மதுரைக் கூத்தனார், மதுரைக் கணக்காயனார், மதுரை மருதங்கிழார் மகனார் பெருங்கண்ணனார் என்றாற்போல வரும் நாற்பது புலவர்கள் சங்ககாலத் திலிருந்திருக்கின்றனர். ஆனால் 'கூடல்' என்ற பெயருடன் எவருமே குறிப்பிடப் பெறவில்லை. எனவே சங்ககாலத்தில், 'கூடல்', 'மதுரை' என்ற வழக்குகள் ஒரு சேர வழங்கி வந்திருப்பினும், 'கூடல்' என்ற வழக்குப் பாடல்களைத் தொகுப்பித்த காலத்தில் தன் செல்வாக்கை இழந்திருக்க வேண்டும். இலக்கியத்தில் மட்டும் இவ்வழக்கு ஓரளவு தொடர்ந்து இடம்பெற்று வந்திருக்கிறது.

ஆறுகளின் சங்கமமோ, மலைகளின் இணைவோ 'கூடல்' எனப்படும். ஆனால் மதுரைக்குப் பொருந்துவதாக இவை எதுவுமில்லை. எனவே, மக்கள் வந்து கூடுதற்கு இடமாக நாட்டின் தலைநகராக இருந்ததால் இப்பெயர் வந்திருக்கலாம் என்று எண்ணவேண்டியுள்ளது. பாண்டிய நாட்டின் தென் பகுதியைக் கடல் கொண்டபின் மக்கள் இங்கு வந்து குடியேறிய காலத்தில், மீண்டும் 'கூடுதற்கு இடமாக' அமைந்ததால் இப்பெயர் வந்திருக்கலாம் என்று கொள்ளவும் இடமுண்டு. 'வைகையாற்றுடன் ஏதேனும் சிற்றாறு, மதுரையருகே இணைந்து கொண்டிருந்ததால் 'கூடல்' என்ற பெயர் வந்திருக்கலாம்; காலப்போக்கில் அந்த ஆறு மறைந்திருக்கலாம்' என்று ஆர். தேவகுஞ்சரி கருதுகிறார்.[107] எனினும் இதனை ஏற்கும் வண்ணம் இலக்கிய, வரலாற்றுச் சான்றுகள் எதுவும் கிடைக்கவில்லை.

## நான்மாடக் கூடல்

'கூடல்' 'நான்மாடம்' என்ற அடைமொழியைப் பெற்று, 'நான்மாடக்கூடல்' என்னும் தொடராகக் கலித்தொகை,[108] பரிபாடல்,[109] முதலான சங்கத் தொகைப் பாடல்களில் வருகின்றது. ஆனால் இத்தொடரே மதுரைக்கு உரிய மற்றுமொரு பெயராகப் பிற்காலத்தில் கூறப்படுகிறது.

கலித்தொகையில் வரும் 'நான்மாடக்கூடல்' என்ற தொடருக்கு, "மதுரையின்கண் நான்கு மாடங் கூடலின் நான்மாடக் கூடலாயிற்று. அவை திருவாலவாய், திருநள்ளாறு, திருமுடங்கை, திருநடுவூர். இனிக் கன்னி, கரியமால், காளி, ஆலவாய் என்றுமாம்" என்று நச்சினார்க்கினியர் உரை கூறுகிறார்.[110]

'மாடக்கோயில் என்னும் ஒருவகைக் கோயில் முன்காலத்தில் இருந்திருக்கிறது. அவ்வகைக் கோயில்களையே நச்சினார்க்கினியர் தம் கருத்தில் கொண்டு 'நான்கு மாடங் கூடலின்' என்று விளக்கம் கூறுவதாகக் கொள்ளவும் இடமுண்டு. திருவாலவாய், திருநள்ளாறு, திருமுடங்கை, திருநடுவூர் என்பன நான்கு மாடக்கோயில்கள் என்றும், இவை இருந்ததால் நான்மாடக்கூடலாயிற்று என்றும் கருதலாம். திருவாலவாய், திருநள்ளாறு, திருமுடங்கை, திருநடுவூர் என்ற நான்கு பகுதிகள் சேர்ந்ததே நான்மாடக்கூடல் என்ற எண்ணவும் வாய்ப்புள்ளது.

கன்னி, கரியமால், காளி, ஆலவாய்[110] என்ற தெய்வங்கள் இந்நகரில்-கூடியதால் நான்மாடக்கூடலாயிற்று என்பதைக் காட்டிலும், இத்தெய்வங்களின் கோயில்கள் இருந்ததால் இப்பெயர் வந்தது என்று கொள்வது பொருத்தமுடையதாக இருக்கிறது.

'வருணன் ஒருமுறை மதுரையை அழிக்க எண்ணம் கொண்டு, ஏழு மேகங்களை அனுப்பி இடைவிடாது மழை பெய்யக் கட்டளையிட்டான். அப்போது சோமசுந்தரப் பெருமான் மதுரையின் நான்கு எல்லைகளுக்கும் நான்கு மேகங்களை ஏவ, அவை கூடமாகக் கவிந்து மதுரை அழியாதபடி காத்தன. அதனால் மதுரை நான்மாடக்கூடல் என்ற பெயரைப் பெற்றது' என்று சைவப் புராணங்களில் இப்பெயருக்கு விளக்கம் சொல்லப்படுகிறது.[111]

பிற்காலத்தில் தத்தம் ஊர்களைப் புராண நெறியுடன் இணைத்துப் பெயருக்குத் தக்கபடி கதை சொல்லிக்கொள்வதில் மக்கள் ஆர்வம் காட்டியிருக்கின்றனர்.[112] இப்படி எழுதப்பட்டவையே தலபுராண இலக்கியங்களாக உருவெடுத்தன. இக்கதையும் இவ்வாறு சொல்லப்பட்டதில் ஒன்று எனலாம்.

**ஆலவாய்**

கி.பி.9ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்ட தேவாரம், திருவாசகம் போன்ற இலக்கியங்களிலும் பிற்காலச் சைவ இலக்கியங்களிலும் மதுரை நகரம் 'ஆலவாய்' என்ற பெயரிலும் குறிக்கப்படுகிறது.

திருஞானசம்பந்தர, 'கூடலாலவாயிலாய்'[113], 'மதுரை யாலவாயிலாய்'[114] என்று பாடுவதிலிருந்து கூடல், மதுரை என்பனவற்றை ஊர்ப்பெயர்களாகவும், ஆலவாய் என்பதனை அங்கிருக்கும் கோயிலாகவும் கொள்ளலாம். கோயிற்பெயரே ஊர்ப் பெயராக மாறிவிடும் வழக்கம் தமிழ்நாட்டில் இருந்திருக்கிறது. இராமேச்சுரம் (இராமேஸ்வரம்), வைத்தீசுவரன் கோயில் போன்ற ஊர்கள் கோயில்பெயரையே ஊர்ப்பெயராகக் கொண்டவை. எனவே 'ஆலவாய்' என்ற கோயில் பெயரே ஊர்ப்பெயராக ஞானசம்பந்தரின் காலத்தில் மாறியிருக்கலாம்; நச்சினார்க்கினியர் உரையிலும் 'ஆலவாய்' என்பது கோயிலைக் குறிப்பதைக் காணலாம்.

'மதுரையின் எல்லை எதுவரையுள்ளது என்பதைப் பாண்டியன் அறியுமாறு சிவபெருமானின் கங்கணமாயிருந்த பாம்பு வட்டமாய் வாலை வாயாற் கவ்வி எல்லை காட்டியதால் இந்நகர், 'ஆலவாய்' எனப்பட்டது' என்று புராண விளக்கம் சொல்லப்படுகிறது[115]. ஆலவாய் என்பதிலுள்ள 'ஆல' (ஆலம்) என்பதை நஞ்சு எனப் பொருள்கொண்டு, நஞ்சை வாயில் உடைய பாம்பு என்ற அடிப்படையில் இக்கதை கட்டப்பட்டுள்ளது.

சிவபெருமானின் கோயில் முதலில் ஆலமரத்தினடியில் சிறுகோயிலாக இருந்து பின்னர்ப் பெரிய கோயிலாக மாறியிருக்கலாம். ஆலமரத்தை நடுவாகக் கொண்டதால், அக்கோயில் 'ஆலவாய்' எனப்பட்டிருக்கலாம். மேலும், ஆலமரத் தினடியில் சிவபெருமான் தட்சிணாமூர்த்தியாக அமர்ந்திருப்பது கோயிலமைப்பு முறைகளில் ஒன்றாகும்.

*ஆல நீழல் உகந்த திருக்கையே.*[116]

என்றும்,

*ஆல நீழலார் ஆல வாயிலார்*
*கால காலனார் பால தாயினே*[117]

என்றும் ஞானசம்பந்தர் பாடுகிறார்.

மதுரையில் இன்றுள்ள பழைய சொக்கநாதர் கோயிலே 'ஆலவாய்' எனப்படும் பழைய கோயிலென்றும், வையையாறு முன்பு அக்கோயிலையொட்டி ஓடியதால் ஆலவாய் என அழைக்கப்பட்டதென்றும். சொல்லப்படுகின்றது.[118] 'ஆலம்' என்பதற்கு நீர் என்ற பொருளுண்டு. எனவே, வையையாற்றை வாயிலில் உடைய கோயில் ஆலவாய் எனப்பட்டிருக்கலாம் என்று கொள்ளவும் இடமுண்டு.

## சைவத் தொடர்புப் பெயர்கள்

சைவச் செல்வாக்கினால் இன்னும் பல பெயர்கள் மதுரை நகருக்குச் சூட்டப்பட்டுள்ளன.[119] தடாதகைப் பிராட்டியென்னும் உமை, கன்னியாகயிருந்து அரசாண்டமையால் 'கன்னிபுரீசம்' என்றும், ஷீவன் முத்தர் வாழ்வதால் 'ஜீவன்

முத்திபுரம்' என்றும், வரகுணனுக்குச் சிவலோகம் காட்டியதால் 'சிவலோகம்' என்றும், கடப்பங்காடாக இருந்தமையால் 'கடம்பவனம்' என்றும், சிவன் மீனாட்சியுடன் இருந்து அடியார்களுக்குக் காட்சி கொடுப்பதால் 'பூலோக கயிலாயம்', 'சிவராஜதானி' என்றும், சிவன் சௌந்தரபாண்டியனாகவும், உமை தடாதகையாகவும், முருகன் உக்கிரகுமரானாகவும் அரசு செய்தமையால் 'சிவநகரம்' என்றும் இந்நகர் பெயர்பெறுவதாகச் சைவப் புராணங்கள் கூறுகின்றன. மதுரை நகரில் தங்களுக்குள்ள செல்வாக்கை நிலைநிறுத்தச் சைவர்களால் இப்பெயர்கள் இடப்பட்டன எனலாம்.

### மருதை

'மருதை' என்ற வழக்கே ஒலியிடம்பெயரல் (Metathesis) முறைப்படி 'மதுரை' என்றானது என்கின்றார் மெ. சுந்தரம்.[120] மருத வளத்தினாலும் மருத மர மிகுதியினாலும் 'மருதை' என்ற வழக்கு வந்திருக்கலாம்; வஞ்சி, காஞ்சி போன்ற ஊர்கள் மரப்பெயரினால் பெயர் பெற்றிருப்பது போன்று இப்பெயரும் ஏற்பட்டிருக்கலாமெனக் கருதினாலும், இதனை இலக்கியம், கல்வெட்டுகள் போன்ற எழுத்துச் சான்றுகள் எவற்றிலும் காணமுடியவில்லை. ஏடெழுதுவாரின் செயல்களால் 'மருதை' என்ற வடிவம் 'மதுரை' எனத் திருத்தப்பட்டிருக்கலாமெனக் கொண்டாலும் எக்கல்வெட்டும் 'மருதை' என்ற வடிவத்தைக் காட்டுவதாக இல்லை. எதுகை போன்ற யாப்பமைப்பினால் 'மருதை' என்ற வழக்கு வெளிப்படலாமெனப் பார்த்தாலும், அவ்வழக்கு இருந்திருப்பதற்குச் சான்றுகள் கிடைக்கவில்லை.

'மதுரை' என்பது இன்றும் கிராம மக்களின் பேச்சு வழக்கில் 'மருதை' என்றே வழங்குகிறது. எனவே இதுவே சரியாகவிருக்கலாம் என்று மெ. சுந்தரம் மேலும் கூறுகிறார்.[121] பேச்சு வழக்கில் இருப்பவை அனைத்தும் உண்மையான வடிவங்களாக எல்லா நிலைகளிலும் இருக்க முடியாது. 'மருதை' என்னும் இக்கொச்சை வழக்கு வெளியுலகத் தொடர்பும், கல்வியறிவும் அறவே இல்லாதவர்களிடம் மட்டும்தான் இருக்கிறது. மக்களில் பெரும்பாலோர், 'மதுர' அல்லது 'மதிர' என்றே மதுரையை வழங்கி வருகின்றனர். எனவே மதுரை, 'மருதை'யிலிருந்து வந்ததென்பதை ஏற்பதற்கில்லை.

## மதிர/மதிரை/மத்திரை

இலக்கியங்களிலும், கல்வெட்டுகளிலும் அயல்நாட்டார் குறிப்புகளிலும் ‘மதுரை’ என்ற பெயர் வழக்கு பெருவழக்காக வழங்கி வந்திருக்கின்றது. இலக்கியத்தில் ‘மதுரை’ என்ற வடிவம் மட்டும் வந்துள்ளது. ஆனால், கல்வெட்டுக் களில் மதுரை, ‘மதிர, மதிரை, மத்திரை’ என்ற வடிவங்களாலும் குறிப்பிடப்பட்டுள்ளது.

‘மத்திரை’ என்பது கி.பி. 2 ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்ட அழகர்மலைத் தமிழ்-பிராமிக் கல்வெட்டில் மட்டும் வருகின்றது.[122] ஆனால் அதே காலத்திய மேட்டுப்பட்டித் தமிழ் - பிராமிக் கல்வெட்டில் ‘மதிர’ என்ற வடிவம் வந்துள்ளது.[123] ‘மதிர’ என்ற வடிவத்தையொட்டிய ‘மதிரை’ என்ற வடிவம் பிற்காலக் கல்வெட்டுகளில் வந்துள்ளது.[124] ஆனால் ‘மத்திரை’ இவ்வோரிடத்தில் மட்டும்தான் வந்துள்ளது. எனவே ‘மத்திரை’ என்பதை வலிய சான்றாகக் கொள்ள இயலாது. கல்வெட்டு எழுதுவோரின் தவறினாலும், உச்சரிப்பு மாறுதல்களாலும் வந்த திரிபு வடிவமாக, ‘மத்திரை’ என்ற வடிவம் உண்டாகியிருக்காலம். இது போன்ற பிழைகளையும் திரிபுகளையும் கல்வெட்டுகளில் மிகுதியாகக் காணலாம்.

இடைக்காலக் கல்வெட்டுகளில், ‘மதுரை’ என்பதற்குப் பதிலாக ‘மதிரை’ என்ற வடிவம் இடம்பெற்றுள்ளது. ‘மதுரை’ என்பதன் திரிந்த வடிவமே இதுவெனலாம். உகரம் இகரமாக மாறும் பேச்சு வழக்குச் செல்வாக்கினால், அமுது> அமிது; சதுராட்டு> சதிராட்டு என மாறுவது போல மதுரை மதிரையென்று மாறியிருக்கலாம்.

## மதுரை

இலக்கியத்திலும் கல்வெட்டிலும் இடம்பெற்று இன்றளவும் நிலைபெற்றுள்ள ‘மதுரை’ என்னும் வழக்கு எப்படி வந்தது என்பதை இனிக் காணலாம். மருதை, திருமருத முன்துறை ஆகிய பெயர்கள் மதுரை எனத் திரிந்ததாகக் கூறுவது பொருந்தாது. எனவே மதுரையென்ற பெயர் வந்ததற்கு வேறு வலுவான காரணம் கூறவேண்டியிருக்கிறது.

எந்தவோர் ஊரின் பெயர்க்காரணத்தையும் அறிய பின்வரும் இரண்டு படிநிலைகளின் வழியே ஆராயவேண்டும்:

1. ஊர்ப்பெயர்களின் சொற்பொருள் நிலை

2. ஊர்ப்பெயர்கள் வந்த பின்னணிநிலை

'மதுரை' என்பதன் சரியான பொருள் இன்னதென்று தெரியவில்லை. 'சிவபெருமான் தன்முடியிலுள்ள பிறைநிலவிலிருந்து மதுவை (அமிழ்தை) இந்நகர் கோபுரங்களிலும் கோவில்களிலும் தெளித்தாரென்றும், அதனால் 'மதுரை' என்ற பெயர் வந்தது' என்றும் புராண நூலார் கூறுகின்றனர்.[125] மதுரை நகருக்கும் சைவத்திற்குமுள்ள தொடர்பை மிகுவித்துச் சொல்லும் வகையில் இவ்விளக்கம் கூறப்படுகிறது.

'மதுரமென்றால் இனிமை; அவ்வினிமையை உடையது மதுரையென்றும் சொல்லப்படுகிறது.[126] இது பெயருக்குத் தக்கபடி காரணம் சொல்வதாகும். இவ்விளக்கங்கள் பொருத்த முடையனவாகத் தோன்றவில்லை.

சொற்பொருள் காரணத்தை அறியமுடியாததால் பின்னணியைப் பார்க்கலாம். வட இந்தியாவில் யமுனை ஆற்றங்கரையிலிருக்கும் 'மதுரா' என்னும் ஊரின் பெயரை ஒட்டி 'மதுரை' என்ற பெயர் மதுரைக்கு வைக்கப்பட்டிருக்கலாம் என்று கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி.[127] ஆ. வேலுப்பிள்ளை[128] முதலானோர் கருதுகின்றனர்.

யமுனைக்கரையிலிருக்கும் இம் 'மதுரா' நகரம் ஒரு புண்ணியத் தலமாகும். கண்ணன் அவதாரஞ்செய்த தலமாக வைணவர்களால் இவ்வூர் பெரிதும் போற்றப்படுகிறது. 'மது' என்ற அரசன் அரசாண்டமையால் இப்பெயர் இவ்வூருக்கு வந்திருக்கிறது.

கி.மு. 4ஆம் நூற்றாண்டில் மௌரிய அரசவைக்கு வந்த மெகஸ்தனிஸ் என்ற கிரேக்கத் தூதன் பாண்டியநாட்டையும் கண்ணனையும் தொடர்புபடுத்திக் கூறுகிறான்.[129] சிலப்பதிகாரத்தில், பாண்டியநாட்டு மதுரையிலிருந்த ஆயர் வாழ்க்கையும் கண்ணனைப் போற்றும் ஆய்ச்சியர் குரவையும் பாடப்பெற்றுள்ளன. வட இந்தியச் செய்திகளும் புராணக்கதைகளும் திருமால் வழிபாடும் சங்கவிலக்கியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன. வைணவம் தமிழ் மக்களின் வாழ்வில் பெருமளவில் ஊடுருவி நின்றதை இச்சான்றுகளின் வாயிலாக அறியலாம். மன்னர்கள், புலவர்கள்

போன்றோரின் பெயர்கள் வடமொழிப் பெயர்களாகவும் வைணவம் முதலான மதத்தொடர்புகளுடையனவாகவும் இருப்பதைக் காணலாம். பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி, சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, மதுரை இளங்கௌசிகனார், உலோச்சனார், மருத்துவன் தாமோதரனார் போன்ற பெயர்கள் வடமொழிச் செல்வாக்கைக் காட்டுகின்றன. ‘நற்சோணை’ என்ற பெயர் ‘சோன்’ எனப்படும் வடஇந்திய ஆற்றின் பெயரையொட்டியே வைக்கப்பட்டுள்ளது. சோணை, யமுனை (தொழுநை), கங்கை முதலான ஆற்றின் பெயர்களும், பாடலி (பாடலிபுத்திரம்) போன்ற நகரங்களின் பெயர்களும், சங்கவிலக்கியங்களில் குறிப்பிடப்படுகின்றன. வடநாட்டுப் புண்ணியத் தலங்களின் பெயர்களையொட்டி ஊர்களுக்குப் பெயரிடும் வழக்கம் தமிழ்நாட்டில் இருந்திருக்கின்றது. தென்காசி, சிவகாசி என்ற பெயர்களும் திருப்பாதிரிப்புலியூர் பாடலி என்று அழைக்கப்பட்டதும் இவ்வுண்மையை உணர்த்தும் சான்றுகளாகும். பிற்காலத்தில் ஊர்பெயர்களை வடமொழிக்கேற்ப மாற்றுதல், திரித்தல், முற்றிலும் மாற்றி விடுதல், புராணத்தொடர்பாகப் பெயர் சூட்டுதல் முதலான நான்கு முறைகளில் இவ்வழக்கம் நடைமுறைப்படுத்தப்பட்டுள்ளது. இவ்வழக்கத்தின் கால்கோள் சங்ககாலத்திலே இடப்பட்டு விட்டது என்பதை ‘மதுரை’ என்ற பெயர் வழக்கு காட்டுகின்றது எனலாம். ‘மதுரா’ வை நினைவில் கொண்டு போற்றிப் பெயராகவும் (Commemorative name) மதுரை என்ற பெயர் வைக்கப்பட்டிருக்கலாம். ஆகார ஈற்றை உடைய பிறமொழிப் பெயர்கள் தமிழில் வழங்கும் பொழுது ஐகார ஈற்றைப் பெறும் வழக்கத்தில் (எ-டு. சீதா > சீதை) ‘மதுரா’ என்பதும் ஐகாரத்தைப் பெற்று மதுரையென்று ஆகியிருக்கலாம்.

மதுரைக்கு, இப்பெயர் பழம்பதிப்பெயர் சூட்டல் முறையினாலும் (Replica name formation) வந்திருக்கலாம். மக்கள் ஓரிடத்திலிருந்து குடிபெயர்ந்து (Migration) மற்றோரிடத்திற்கு வாழ்வை நாடிச் சென்று குடியேறும்பொழுது, குடியேறும் புதிய இடத்திற்குத் தாமிருந்த பழைய இடப்பெயரை வைத்துக்கொள்ளும் இம்முறை உலகம் முழுவதும் இருந்திருக்கிறது. அமெரிக்காவிலிருக்கும் நியூயார்க் (New York), நியூலண்டன் (New London) போன்ற ஊர்ப்பெயர்களும் இலங்கையிலிருக்கும் திருநெல்வேலி, இராமநாதபுரம் என்பனவும் இவ்வாறு அமைந்தவைகளாகும். கோயம்புத்தூர் நகரிலுள்ள இராமநாதபுரம், இராமநாதபுரம் மாவட்டம்

இராமநாதபுரத்திலிருந்து குடியேறிய மறவர்களால் வைத்துக்கொள்ளப்பட்ட பெயராகும். இவைபோல் 'மதுரை' என்பதும் வடநாட்டிலிருந்து குடியேறிய மக்களால் வைத்துக்கொள்ளப்பட்ட பெயரென்று கொள்ளவும் இடமிருக்கின்றது. ஏனெனில் வடநாட்டிலிருந்து தென்னாட்டிற்குக் குடியேறுதல் கி.மு. 10 ஆம் நூற்றாண்டிலிருந்து இருந்திருக்கின்தென வரலாற்று அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.[130] தமிழ்நாட்டின் வேளிர் மரபினர், யாதவர்கள் போன்றோர் வடநாட்டுத் துவாரகையிலிருந்து குடியேறிவர்களென்று மு. இராகவையங்கார் குறிப்பிடுகிறார்.[131] தொடக்ககால இந்துக்களின் குடியேற்றத்தின்போது 'மதுரே' என்ற பெயரைப் புது இடங்களுக்குச் சூட்டிக் கொள்வதில் அம்மக்கள் ஆர்வம் காட்டியிருக்கின்றனர் என்று யுலே (yule), பர்னெல் (Burnell), போன்றோர் குறிப்பிடுகின்றனர்.[132] இலங்கையிலும் ஷாவாத் தீவுகளிலும் 'மதுரா' என்ற பெயரில் இடங்கள் இருப்பதாக அவர்கள் குறிப்பிடுகின்றனர்.[133] பர்மா, மலேசியா போன்ற நாடுகளிலும் இப்பெயருடைய ஊர்கள் இருப்பதாக ஆர். தேவகுஞ்சரி குறிப்பிடுகிறார்.[134] தச்சிணா மதுரை' என்று இலங்கையின் மகாவம்சம்[135] போன்ற நூல்களிலும், 'தென் மதுரை' என்று தமிழ் இலக்கியங்களிலும் மதுரை குறிப்பிடப்பெறுவது வட நாட்டு மதுரையுடன் இந்நகருக்குள்ள தொடர்பையும் இரண்டுக்குமுள்ள வேறுபாட்டையும் காட்டவே என்று கொள்ளலாம்.

*மகாபாரதந் தமிழ்ப்படுத்தும்*
*மதுராபுரிச் சங்கம்வைத்தும்*

என்று சின்னமனூர்ப் பெரிய சாசனத்தில் மதுரை, மதுரைபுரி என்னாது மதுராபுரி என்று குறிக்கப்படுவதும் இதனையொட்டிய வழக்கினால்தான் எனலாம்.

மேற்காட்டிய வடமொழித்தொடர்புப் பெயர்கள் தமிழ்நாட்டில் வேறு ஊர்களுக்கும் வைக்கப்பட்டிருக்கிறது. அவ்வூர்களுக்குச் செல்வாக்கு இன்மையாலும், ஏற்கனவே இருந்த பழைய பெயர்கள் செல்வாக்குடன் வழங்கியதாலும் இப்படிப்பட்ட பிற பெயர்களை மிகுதியாகக் காணமுடியவில்லை. இவ்வகைப் பெயர்கள் இருந்து, காலப்போக்கில் அவை வழக்கிறந்திருக்கவும் வாய்ப்பு உண்டு. 'மதுரைக்கு மேற்குப்புறத்தே இருந்த, பாரிநாட்டையடுத்த பகுதிக்குத்

துவராபதி நாடு என்ற பெயர் இருந்ததும் துவரங்குறிச்சி என்ற ஊர் இன்றும் இருப்பதும் வடநாட்டுத் துவாரகையை நினைவூட்டுகிறது' என்று மு. இராகவையங்கார் குறிப்பிடுவது[136] இவண் நோக்கத்தக்கது.

'மதுரை' என்ற பெயர் சமணத்தொடர்பினாலும் வந்திருக்கலாம்' எனக் கருதுகிறார் ஆ. வேலுப்பிள்ளை.[137] வடநாட்டு 'மதுரா'விற்கும் சமணருக்கும் நெருங்கிய தொடர்பு இருந்திருக்கிறது. சமணக் கல்வெட்டுகளும் நினைவுச் சின்னங்களும் அங்குப் பெருமளவில் கிடைத்துள்ளன.[138] தமிழ்நாட்டு மதுரையைச் சுற்றிலும் சமணப்படுக்கைகளும் கி.பி. 2ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்ட தமிழ் - பிராமிக் கல்வெட்டுகளும் மிகுதியாகக் கிடைத்துள்ளன. மதுரை, மதிர, மத்திரை என்ற பெயர்களால் இக்கல்வெட்டுகளில் முதன்முதலாகக் குறிக்கப்படுகிறது. கி.மு.3 ஆம் நூற்றாண்டிற்கு முன்னரே தமிழகத்தில் சமணம் செல்வாக்குடன் இருந்திருக்கிறது.[139] எனவே சமணர்கள் போற்றிப் பெயராக 'மதுரை' என்பதனைச் சூட்டியிருக்கலாம் என்றும் எண்ணவேண்டியுள்ளது.

மேற்காட்டிய காரணங்களினால் மதுரைக்கு இப்பெயர் வந்தது சங்க காலத்திற்கு முந்தியே ஆகலாம். இடைப்பட்டகாலம் மிகுதியாக இருப்பதால் இதற்கான சான்றுகள் முழுவதும் கிடைக்கவில்லை. பிற்காலத்தில் சமயக் காழ்ப்பினால் வைணவம், சமணம் ஆகிய சமயங்களின் தொடர்பைக் காட்டும் சான்றுகளும் பெயர்களும் அழிக்கப்பட்டிருக்கலாம். இதனால் 'மதுரை' தொடர்பான செய்திகளும் அழிந்திருக்கலாம்.

'மதுரை' என்னும் பெயர் வடநாட்டார் குடிப்பெயர்விற்குப் பின்னர் ஏற்பட்டதாய் இருந்திருப்பினும், அதற்கு முன்னரே 'கூடல்' என்ற பெயரும் வழங்கியதென்பதனை இலக்கியச் சான்றுகள் விளக்குகின்றன. இக்காலத்திலும் தமிழ்நாட்டின் தலைநகரின் பெயர் 'சென்னை' என்று வழங்கப்படுவதைக் காட்டிலும் மெட்ராஸ் (Madras) என்ற பிற மொழிப் பெயரினால்தான் பெரும்பாலும் குறிக்கப்படுகிறது. இதுபோல் 'கூடல்' என்ற தமிழ்ப்பெயரும் 'மதுரை' என்ற பிறமொழிப் பெயரும் ஒருசேர வழங்கியிருந்தும் 'மதுரை' என்ற பிறமொழிப் பெயரே மக்களின் அன்றாடப் பேச்சு வழக்கிலும் அயலாரிடையும் செல்வாக்கு பெற்றிருந்திருக்கிறது எனலாம். பிளினி, தாலமி

போன்றோர் குறிப்புகளிலும் தமிழ் - பிராமிக் கல்வெட்டுகளிலும் ‘மதுரை’ என்பதை ஒட்டிய வழக்குகளே பயன்படுத்தப்பட்டிருப்பதும் இதனை உண்மையென உணர்த்துகின்றன. தமிழ்ப்பெயர்களைவிட பிறமொழிப் பெயர்களே தமிழகத்தில் செல்வாக்குப் பெற்றன என்பதை மறைக்காடு - வேதாரண்யம், பழமலை - விருத்தாசலம், குடமூக்கு - கும்பகோணம், மயிலாடுதுறை - மாயூரம் போன்ற ஊர்களின் வழக்கும் உணர்த்தும். எனவே ‘மதுரை’ யும் வட நாட்டாரின் தொடர்பால் பெயர்பெற்றிருக்கிறது என முடிவு செய்யலாம்.

### மருங்கூர்ப்பட்டினம்

“பசும்பூண் வழுதி மருங்கை” (நற். 358-10) என்னும் தொடர் இவ்வூர் பாண்டியனுக்குரியது என்பதை வலியுறுத்துகிறது. மருங்கை என்றும் மருங்கூர் பட்டினம் என்றும் இவ்வூர் சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்படுகிறது.

*பச்சிறாக் கவர்ந்த பசுங்கட்காக்கை*
*தூங்கல் வங்கத்துக் கூம்பில் சேர்க்கும்*
*மருங்கூர்ப்பட்டினத்து அன்ன,...* (நற். 258:8-10)

என்றும்,

*விழுநிதி துஞ்சும் வீறுபெறு திருநகர்*
*இருங்கழிப் படப்பை மருங்கூர்ப்பட்டினத்து* (அகம். 227:19-20)

இவ்வாறு பதிவு செய்யப்பட்டிருக்கிறது. நற்றிணையில் 289 ஆம் பாடலைப்பாடிய சேந்தன் குமரன், அகநானூற்றில் 80 ஆம் பாடலைப்பாடிய கிழார் பெருங்கண்ணன், 327 ஆம் பாடலைப் பாடிய பாகை சாத்தன் பூதன் ஆகிய சங்ககாலப் புலவர்கள் மருங்கூரைச் சார்ந்தவர்கள். இராமநாதபுரம் மாவட்டம் திருவாடானை வட்டத்தில் இவ்வூர் உள்ளது.

### மல்லி

புறநானூற்றின் 177-ஆவது பாடலில், மல்லிகிழான் காரியாதியை ஆவூர் மூலங்கிழார் பாடியது என்ற தொடரால் கிடைக்கும் ஊர்ப்பெயர் மல்லி என்பதாகும்.

காரியாதி என்பவன் மல்லியென்னும் ஊர்க்குத்தலைவன். இது விருதுநகர் மாவட்டம் சீவில்லி புத்தூர் நாட்டின்கண் உள்ளதோர் ஊர். இவன் வேளாண்குடி முதல்வனாய்ப் பரிசிலர்க்கு வேண்டுவன வழங்கிப் புலவர்பாடும் புகழ் பெற்றவன். "சீவில்லிபுத்தூர் ஆண்டாள் கோயில் கல்வெட்டுகளிலும், வைத்தியநாதசாமி கோயில் கல்வெட்டுகளிலும் 'மல்லி நாட்டுச் சீவில்லிபுத்தூர்' என்றே குறிக்கப்படுகிறது. இந்த மல்லிநாட்டுப்புத்தூரே பின்னர் மல்லிபுத்தூர் என்றும், பிற்காலத்தில் வில்லிபுத்தூரென்றும் மருவியது. வில்லிபுத்தூராகி வழங்கிய காலத்தில் பெரியாழ்வாரும், திருஆண்டாளும் தோன்றி இதனைத் தம்முடைய தெய்வப்பாடலால் சீவில்லிபுத்தூராகுமாறு செய்தனர். இவ்வூருக்குக்கு அவ்வப்போது மலையிலிருந்து வரும் பழையரே இப்பாட்டின்கட் கூறப்படும் குடவராக இருக்கலாம். இப்பழையர் 'பளியர்' என இந்நாட்டவரால் வழங்கப்படுகின்றனர்."[138]

**மாங்காடு**

*நனிநோய் எய்க்கும் பனிகூரடுக்கத்து*

*மகளிர் மாங்காட்டற்றே* (அகம். 288:14-15)

என்ற அகநானூற்றுப்பாடலடிகள் மூலம் மாங்காடு என்ற ஊர்ப்பெயரினை அறியமுடிகின்றது. சிலப்பதிகாரத்திலும்,

*வந்தேன் குடமலை மாங்காட்டுள்ளேன்* (சிலப். 11-53)

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அகநானூறு மற்றும் சிலப்பதிகாரம் சுட்டும் மாங்காடு என்ற ஊர் தற்போது கன்னியாகுமரி மாவட்டத்தில் மார்த்தாண்டத்திற்கு அருகில் உள்ளது.

**மாறோக்கம்**

மாறோக்கம் என்பது ஒரு சிறு நாடு. இது மாறோக்கம் என வழங்கும் திருநெல்வேலி மாவட்டத்தில் கொற்கையைச் சூழ்ந்த நாடு.[139] அகநானூற்றில் 377-ஆம் பாடலை இயற்றிய காமக்கணி நப்பாலத்தனாரும், புறநானூற்றில் 37, 39, 126, 174, 226, 383 ஆகிய பாடல்களை இயற்றிய நப்பசலையாரும் இவ்வூரினர்.

### மோகூர்

*மலை ஒழுங்கு அறாஅப் பிழையா விளையுள்*
*பழையன் மோகூர் அவையகம் விளங்க* (மதுரைக். 507-508)

என்றும்,

*அரண்கள் தரவுறீஇ, அணங்கு நிகழ்ந்தன்ன*
*மோகூர் மன்னன் முரசங் கொண்டு* (பதிற்று. 44:13-14)

என்றும்,

*வெல் போர் வேந்தரும் வேளிரும் ஒன்று மொழிந்து,*
*மொய்வளம் செருக்கி, மொசிந்துவரு மோகூர்* (மேலது. 49:8-9)

என்றும்,

*இன்னிசை முரசங் கடிப்பு இருந்து இரங்க*
*தெம்முனை சிதைந்த ஞான்றை, மோகூர்* (அகம். 251:9-10)

என்றும் மோகூர் என்ற ஊர்ப்பெயர் சங்க இலக்கியங்களில் சுட்டப்பட்டுள்ளது. மதுரை மாவட்டத்தில் உள்ள புகழ்பெற்ற வைணவத் தலமான திருமோகூரே இம்மோகூர் ஆகும்.[140]

### வெள்ளூர்

குறுந்தொகையில் 219-ஆம் பாடலைப்பாடிய வெள்ளூர்கிழார் மகனார் என்ற புலவரின் மூலம் வெள்ளூர் என்ற ஊர்ப்பெயர் அறிய முடிகின்றது. திருநெல்வேலி மாவட்டத்தில் வெள்ளூர் இருக்கிறது. "பராந்தக நெடுஞ்செழியன் (கி.பி. 768-815) வெள்ளூரில் போர்புரிந்து பகைவர்களை அழித்ததாகச் சீவரமங்கலத்துச் செப்பேடு கூறுகிறது.[141]

### வேம்பற்றூர்

குறுந்தொகையில் 362-ஆம் பாடலைப்பாடிய வேம்பற்றூர்க் கண்ணன் கூத்தன், புறநானூற்றில் 317-ஆம் பாடலையும், அகநூற்றில் 157-ஆம் பாடலையும் பாடிய வேம்பற்றூர்க் குமரனார் என்ற புலவர்களின் மூலம் வேம்பற்றூர் என்ற ஊர்ப்பெயரினை அறிய முடிகின்றது.

வேம்பு மரத்தின் பெயரால் பெற்ற ஊர்ப்பெயராக இவ்வூர்த் திகழ்கிறது. மதுரைமாவட்டத்தில் வைகையாற்றுக்கு அருகில் வேம்பற்றூர் என்ற பழம்பெயர் வேம்பத்தூர் என மருவி வழங்குகிறது.

**பாண்டியநாட்டுப் புலவர்கள்**

1. அகம்பன் மாலாதனார் - நற். 81
2. அண்டர்மகன் குறுவழுதியார் - அகம். 150, 228, குறு. 345, புறம். 346
3. ஆலம்பேரி சாத்தனார் - அகம். 47, 81, 143, 175, நற். 152, 255, 303, 338
4. அள்ளூர் நன்முல்லையார் - அகம். 46, குறு. 32, 36, 67, 68, 93, 140, 157, 202, 237 புறம் 306
5. இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் - மலைபடுகடாம்
6. இளம்புல்லூர்க் காவிதி - நற். 89
7. இளம்பெருவழுதி - பரி. 15, புறம். 185
8. உக்கிரப் பெருவழுதி - அகம். 26, நற். 198.
9. ஒல்லையூர் தந்த பூதபாண்டியன் - அகம். 25, புறம். 71
10. கடியலூர் உருத்திரங் கண்ணனார் - அகம். 167, குறு. 352, பட்டினப்பாலை, பெரும்பாணாற்றுப்படை.
11. கணியன் பூங்குன்றனார்- நற். 226, புறம். 192
12. கபிலர் - அகம். 2, 12, 18, 42, 82, 118, 128, 158, 182, 203, 218, 238, 248, 292, 318, 332, 382, ஐங். 201-300, கலி. 37-65, குறு. 13, 18, 25, 38, 42, 87, 95, 100, 106, 115, 121, 142, 153, 187, 198, 208, 225, 241, 246, 249, 259, 264, 288, 291, 312, 355, 357, 361, 385, நற். 1, 13, 32, 59, 65, 77, 217, 222, 225, 253, 267, 291, 309, 320, 336, 353, 359, 368, 373, 376, பதிற்று. 61-70, குறிஞ்சிப்பாட்டு, புறம் 8, 14, 105, 106, 107, 108, 109, 110, 111, 112, 113, 114, 115, 116, 117, 118, 119, 120, 121, 122, 123, 124, 143, 200, 201, 202, 236, 337, 347

13. கிள்ளிமங்கலங்கிழார் மகனார் சேரகோவனார்- நற். 365

14. கிள்ளை மங்கலங்கிழார்- குறு. 76, 110, 152, 181

15. கோட்டியூர் நல்லந்தையார் - நற். 211

16. கோளியூர் கிழார் மகனார் செழியனார் - நற். 383

17. கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனார் - புறம். 54, 61, 167, 180, 197, 394

18. செங்கண்ணனார் - அகம். 39, நற். 122

19. சேந்தங் கண்ணனார் - அகம். 350, நற். 54

20. சேந்தம்பூந்தனார் - அகம். 84, 207, குறு. 90,226, 247, நற். 69, 261

21. தங்கால் ஆத்திரேயன் செங்கண்ணனார் - நற். 386

22. தங்கால் பொற்கொல்லன்வெண்ணகனார் - அகம். 48, 108, 355, குறு. 217, நற். 313, புறம். 326

23. நக்கீரர் - அகம். 36, 57, 78, 93, 120, 126, 141, 205, 227, 249, 253, 290, 310, 340, 346, 369, 389, நற். 31, 86, 197, 258, 340, 358, 367, திருமுருகாற்றுப்படை, நெடுநல்வாடை, புறம். 56, 189, 395

24. படுமரத்து மோசிகீரனார் - குறு. 33, 75, 383

25. பாண்டியன் ஆரியபடை கடந்த நெடுஞ்செழியன் - புறம். 183

26. பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணனார் - அகம். 373, குறு. 156

27. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் - புறம். 72

28. பாண்டியன் பன்னாடு தந்தான் - குறு. 270

29. பாண்டியன் மாறன் வழுதி - நற். 97, 301

30. பாரிமகளிர் - புறம். 112.

31. பிசிராந்தையார் - அகம். 308, நற். 91, புறம். 67, 191, 184, 212

32. பூதபாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு - புறம். 246

33. பெருங்குன்றூர்கிழார் - அகம். 8, குறு. 338, நற். 5, 112, 119, 347, பதிற்று. 9, புறம். 147, 210, 211, 266, 318

34. பெருவழுதி - நற். 55, 56.

35. பேராலவாயர் - அகம். 87, 296, நற். 51, 361, புறம். 247, 262

36. பொதும்பில் கிழார் - நற். 56

37. பொதும்பில் கிழார் மகனார் வெண்கண்ணியார் - நற். 375, 387

38. பொதும்பிற் புல்லாளங் கண்ணியார் - அகம். 154

39. மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் - அகம். 33, 144, 174, 244, 314, 344, 353, குறு. 188, 215, நற். 82, 297, 321, புறம். 388

40. மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் - அகம். 56, 124, 230, 254, 272, 302, குறு. 185, நற். 33, 157, 221, 344, புறம். 329

41. மதுரை ஆசிரியர் கோடங் கொற்றனார் - குறு. 144

42. மதுரை இளங்கண்ணிக் கௌசிகனார் - புறம். 309

43. மதுரை இளம்பாலாசிரியன் சேந்தன் கூத்தனார் - அகம். 102, 348, நற். 273

44. மதுரை ஓலைக்கடைக் கண்ணம் புகுந்தாராயத்தனார் - புறம். 350

45. மதுரை ஓலைக்கடையத்தார் நல்வெள்ளையார் - நற். 250, 369

46. மதுரைக் கடையத்தார் மகன் வெண்ணகனார் - குறு. 223

47. மதுரைக் கணக் காயனார் - அகம். 27, 338, 342, நற். 23, புறம். 330

48. மதுரைக் கண்டரத்தனார் - குறு. 317

49. மதுரைக் கண்ணத்தனார் - அகம். 360, நற். 351.

50. மதுரைக் கவுணியன் பூதத்தனார் - அகம். 74

51. மதுரைக் கள்ளிற் கடையத்தன் வெண்ணாகனார் - அகம். 170, புறம். 316

52. மதுரைக் காம கணி நப்பாலத்தனார் - அகம். 204

53. மதுரைக் கூத்தனார் - அகம். 334

54. மதுரைக் கொல்லன்புல்லன் - குறு. 373

55. மதுரைக்கொல்லன் வெண்ணகனார் - அகம். 363, நற். 285

56. மதுரைச் சுள்ளம்போதனார் - நற். 215

57. மதுரைத்தத்தங்கண்ணனார் - அகம். 335

58. மதுரைத் தமிழ் கூத்தன் நாகன்தேவனார் - அகம். 164

59. மதுரைத் தமிழக்கூத்தனார் - புறம். 334

60. மதுரைப் படைமங்க மன்னியார் - புறம். 351

61. மதுரைப் பாலாசிரியர் சேந்தங் கொற்றன் - நற். 322

62. மதுரைப் பாலாசிரியர் நப்பலனார் -அகம். 172

63. மதுரைப் பாலாசிரியர் நற்றாமனார் - அகம். 92

64. மதுரைப் புல்லங் கண்ணனார் - அகம். 161

65. மதுரைப் பூதனிளநாகனார் - புறம். 276

66. மதுரைப் பூவண்டநாகன் வேட்டனார் - நற். 317

67. மதுரைப் பெருங் கொல்லன் - குறு. 141

68. மதுரைப் பெருமருதனார் - நற். 241

69. மதுரைப் பெருமருதிள நாகனார் - நற். 251

70. மதுரைப் போத்தனார் - அகம். 75

71. மதுரை மருதங்கிழார் மகனார் சொகுத்தனார் - நற். 329, 352

72. மதுரை மருதங்கிழார் மகன் இளம்போத்தன் - குறு. 332

73. மதுரை மருதங்கிழார்மகனார் பெருங்கண்ணனார் - அகம். 247, 364, நற். 388

74. மதுரை வேளாசன் - புறம். 305

75. மருங்கூர்க் கிழார் பெருங்கண்ணனார் - அகம். 80

76. மருங்கூர்ப் பட்டினத்துச் சேந்தன் குமரனார் - நற். 289

77. மருங்கூர்ப்பாகைச் சாத்தன் பூதனார் - அகம். 327

78. மாலைமாறன் - குறு. 245

79. மாறோகத்துக் காமக்கணி நப்பாலத்தனார் - அகம். 377

80. மாறோகத்து நப்பசலையார் - நற். 2, 304, புறம். 37, 39, 126, 226, 280, 383

81. முடத்திருமாறன் - நற். 105, 228

82. மோசிக் கரையனார் - அகம். 260

83. மோசிகண்ணத்தனார் - நற். 124

84. மோசிகீரனார் - நற். 105, 228

85. மோசி கொற்றனார் - குறு. 377

86. மோசி சாத்தனார் - புறம். 272

87. விரியூர் நக்கனார் - புறம். 332

88. வெள்ளிவீதியார் - அகம். 45, 362, குறு. 27, 44, 58, 130, 146, 149, 169, 386, நற். 70, 335, 348

89. வேம்பற்றூர்க் கண்ணன் கூத்தன் - குறு. 362

90. வேம்பற்றூர்க் குமரனார் - அகம். 157, புறம். 317

**நிறைவாக**

இவ்வியலில் பாண்டிய நாட்டின் மேற்கு வடக்கு எல்லைப்பகுதிகள், இன்றைநிலை, பாண்டிய நாட்டின் ஊர்களாக அறியப்பட்ட அதங்கோடு, அரையம், அலைவாய், அள்ளூர், ஆய்குடி, ஆவினன்குடி, இருந்தையூர், இலவந்திகைப்பள்ளி, ஊணூர், ஒக்கூர், ஒல்லையூர், கடியலூர், காளப்பேரெயில், கிள்ளிமங்கலம், குமரி, குறுங்குடி, குன்றம், கூடலூர், கொற்கை, கோடி, சிறுகுடி, சிறுமலை, திருமருத முன்துறை, திருமால் குன்றம், தேனூர், நல்லூர், நாஞ்சில், நாலை, பழமுதிர்ச்சோலை, பறம்புமலை, பிசிர், பொதும்பில், பொருந்தில், போந்தை, மதுரை, மருங்கூர்ப்பட்டினம்,

மல்லி, மாங்காடு, மாறோக்கம், மோகூர், வெள்ளூர், வேம்பற்றூர் போன்ற ஊர்களின் இன்றைய நிலை மற்றும் பாண்டியநாட்டுப் புலவர்கள் போன்ற செய்திகளை இவ்வியலில் விரிவாக ஆராயப்பெற்றுள்ளது.

திருமருத முன்துறை மதுரையின் வேறுபெயராகச் சொல்லப்பட்டு வந்த நிலையில், திருமருத முன்துறை மதுரையின் அருகாமையிலுள்ள பகுதியென்றும், மதுரையென்ற ஊர்ப்பெயர் வடநாட்டாரின் தொடர்பால் ஏற்பட்டதென்றும் இவ்வியலில் விளக்கப்பட்டிருக்கிறது.

## அடிக்குறிப்புகள்

1. வேலன், என், கே., பாண்டியர் ஆட்சி, பக். 1-2
2. வேங்கடசாமி, மயிலை சீனி., பாண்டியர், ப. 237
3. மேலது, ப. 238
4. சின்னசாமி, தே. ப., பெருமைமிகு பாண்டியர்களின் வீரவரலாறு, ப. 5
5. வேலன், என், கே., பாண்டியர் ஆட்சி, ப. 6
6. இறையனார் அகப்பொருள் உரைப்பாயிரம்
7. மகாவம்சம், 22:20
8. வேங்கடசாமி, மயிலை சீனி., தொல்பழங்காலம் - ப. 25
9. ஆளவந்தார் , ஆர்., இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், ப. 61
10. பாலகிருஷ்ணன், ஆர்., சிந்து சமவெளி நாகரிகமும் சங்க இலக்கியமும், ப. 17
11. சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம், தொகுதி - 1, தமிழ்ப் பல்கலைக்கழகம், ப. 97
12. உ.வே. சாமிநாதையர், புறநானூறு, குறிப்புரை, ப. 135
13. கல்யாணசுந்தரம், ந., திருச்செந்தூர் முருகன் கோயில் வரலாறு, ப. 10
14. நிர்மலாதேவி, சூ., முத்தாரம்மன் கதை, ப. 18
15. கல்யாணசுந்தரம், ந., திருச்செந்தூர் முருகன் கோயில் வரலாறு, ப. 1
16. மேலது, ப. 2
17. சுப்பிரமணியபிள்ளை, இ. மு., நெல்லை மாவட்ட கோயில் வரலாறு, பக். 125, 225
18. கல்யாண சுந்தரம், நா., திருச்செந்தூர் முருகன் கோயில் வரலாறு, பக். 4, 5
19. சேதுப்பிள்ளை, ரா.பி., தமிழகம் ஊரும் பேரும்., பக். 60,61
20. ஆளவந்தார் , ஆர்., அ. நூ. ப. 73
21. குறிப்பிட்ட அரச குலத்தவர், வமிசத்தவரின் அரசாட்சியினால் ஊர்ப்பெயர்கள், மக்களின் பேச்சு வழக்கில் மாற்றம் பெறுவதுண்டு. சான்றாக, கண்டமநாயக்கன்

பரம்பரையினர் இருந்து அரசாண்டமையால், வள்ளல் நதி (ஆண்) என்னும் பெயர் மறைந்து, மக்கள் வழக்கில் கண்டமநாயக்கனூர் என்னும் பெயர் அவ்வூருக்கு வழங்குகின்றது.

22. துரை அரங்கசாமி, மொ.அ., சங்ககால சிறப்புப்பெயர்கள், ப. 281
23. மேலது, ப. 282
24. Subramanian, N., op. cit. pp. 609, 610
25. S.I.I. Vol.XVII, No. 402
26. துரை அரங்கசாமி, மொ.அ. மு.கு. நூ., ப. 282
27. திருப்புகழ், 186, 192, 194 பாடல்கள்
28. அருணாசலம் பிள்ளை, அ., (ப.ஆ.), வையாபுரிப்பள்ளு, 13
29. நச்சினார்க்கினியர், திருமுருகாற்றுப்படை உரை, ப. 73
30. திருக்கோயில் வெளியீடு, பழனித்தல வரலாறும், திருக்கோயில் வழிபாடும், ப. 11
31. திருப்புகழ் பாடல், 144, 169
32. துரையரங்கனார், மொ.அ., அ.நூ., ப. 282
32. புறம் -ஔவை துரைசாமிப்பிள்ளை உரை. ப. 184
33. புறம். 348 ஆவது பாடல், கழக வெளியீடு.
34. திருக்குறள் 43, பரிமேலழகர் உரை.
35. குருசாமி தேசிகர், தமிழகம் - ஊரும் பேரும், ப. 70
36. மேலது, ப. 71
37. ஆளவந்தார், ஆர்., மு. கு. நூ.ப. 93
38. அகம். 256
39. சுந்தரமூர்த்தி, மா., பராக்கிரம பாண்டிய புரம், ப. 18
40. S.I.I. Vol.V No. 299

41. S.I.I. Vol.XXIII, No. 295

42. Ibid., No. 298

43. சுந்தரமூர்த்தி, வெ. மு. கு. நூ. ப. 20

44. S.I.I. Vol.XXIII, No. 293

45. S.I.I. Vol.V, No. 300

46. சுந்தரமூர்த்தி, வெ. மு. கு. நூ. ப. 21

47. S.I.I. Vol.XIV, No. 236

48. புறம். 21ஆவது பாடல்

49. கானப்பேராளர் - திருஞானசம்பந்தர் - பதி -130

50. கானப்பேரூர் கட்டியை - சுந்தரர் 15-2

51. சேக்கிழார் வழியில் சிவத்தலங்கள் ப-235

52. மேலது, ப. 238

53. புரட்சி தாசன் வேங்கடம் முதல் குமரி வரை 4-ப.59

54. சேதுப்பிள்ளை, இரா.பி., மு.கு.நூ. ப. 144

55. தமிழக ஊர்களின் பெயர்க்காரணங்களும் சிறப்புகளும், ப. 191

56. மேலது, ப. 192

57. S.I.I. Vol.XIV, No. 93

58. Subramanian, N. op. cit., p. 530

59. போசு, செ. திருப்பரங்குன்றம், ப. 30

60. மேலது, ப. 28

61. சேகிழார், பெரியபுராணம், கழற்றறிவார் நாயனார் புராணம், ப. 102

62. அருணகிரிநாதர், திருப்புகழ், பாடல் 11

63. போசு. செ., மு.கு.நூ. ப-9

64. மேலது, ப. 4

65. மேலது, ப. 5

66. Francis, W, (Ed.,), Madras District Gezetteers, Madurai, Vol. I, p- 280.

67. AER. No. 420, of 1907

68. மணிமாறன், பா.அ.ம., மதுரை மாவட்ட ஊர்ப்பெயர்கள், ப. 162

69. பாளையப்பட்டுகளின் வம்சாவளி, தொகுதி இரண்டு, ப. 124

70. மணிமாறன், பா.அ.ம., மு.கு.நூ.ப. 163

71. Sreadhara Menan, A., (Ed.) Kerala District Gazetteers, Kottayam, p.32.

72. Sastri, K.A.N. Foreign notices of south India, p. 59

73. இராகவன், அ., கோநகர் - கொற்கை, ப. 40

74. Sridhar, T.S., Excarnations ot Archaelogical sites in Tamil Nadu

75. Coldwell, A History of Tirunelveli, p. 283

76. Schaft, The periplus of the Erythaean sea, p. 40

77. Arunachalam, M., The History of the pearl fishery of Tamil coast, p. 54

78. அப்பாத்துரை, கா., தென்னாடு, ப. 61

79. ஆளவந்தார், ஆர்., மு.கு.நூ. ப. 133

80. சேதுப்பிள்ளை, ரா.பி. மு.கு.நூ. ப. 60

81. மணிமாறன், பா.அ.ம., மு.கு.நூ. ப. 116

82. Subramanian, pre-pallavan Tamil Index, p. 651

83. நாலாயிரத்திவ்யப்பிரபந்தம், இரண்டாம் திருவந்தாதி, 48

84. மேலது, பெரிய திருமொழி, 2-7-7, மேலது, நாச்சியார் திருமொழி, 4-1

85. மேலது, பெரியாழ்வார் திருமொழி 4-2

86. மேலது, திருவாய்மொழி, 2-10-2

87. Devakunjari, R., op. cit., p. 25

88. AER. No. 132, of 1910

89. S.I.I. Vol.XIV, No. 51

90. ஆளவந்தார், ஆர்., மு.கு.நூ. ப. 147

91. கலைக்களஞ்சியம், தொகுதி 6, ப. 333

92. இராசமாணிக்கனார், மா., பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 231;
பரமசிவன், தொ., அறுபடை வீடுகளும் பழமுதிர்சோலையும், ப. 11

93. இராசமாணிக்கனார், மா., மு.கு.நூ.ப. 235

94. மேலது, ப. 238

95. மேலது, ப. 233

96. பரமசிவன், தொ., மு.கு.நூ.ப. 6

97. மேலது, ப. 8

98. மேலது. ப. 9

99. Samy, P.L., Nannan of North Malabar, p. 101

100. சேதுப்பிள்ளை, இரா. பி. மு.கு.நூ. ப. 139

101. மேலது, ப. 143

102. ராஜன், கா., பொருந்தல் அகழாய்வு, செம்மொழி நிறுவனச்செய்தி மடல், 3, ப. 43

103. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, புறம். 338-வது பாடல் உரை

104. Iravatham Mahadevan, Corpus of Tamil - Brahmi inscriptions, Seminar on inscriptions (1966) p-67

105. Devakunjari, R., Madurai throught the ages, p. 24

106. Ibid., p. 24

107. Ibid., p. 27

108. பரிபாடல் திரட்டு, 7-4

109. கலி. 92-65

110. மேலது உரை

111. திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம், நான்மாடக்கூடலான திருவிளையாடல்

112. மணிமாறன், பா.அ.ம., மு.கு.நூ. ப. 253

113. திருஞானசம்பந்தர் தேவாரம், பதிகம், 310

114. மேலது. பதிகம், 310

115. திருவிளையாடற் புராணம், திருவாலவாயான படலம்

116. திருஞானசம்பந்தர் தேவாரம், பதிகம், 373

117. மேலது, பதிகம், 94

118. விசயவேணுகோபால், கோ. தமிழ்ப்பேராசிரியர், மதுரை காமராசர் பல்கலைக்கழகம் நேரில் கூறியது.

119. திருவிளையாடற்புராணம், மதுரைக்காண்டம், 253

120. சுந்தரம், மெ. மதுரை - பெயர் ஆராய்ச்சி, ஒன்பதாம் ஆய்வுக்கோவை, தொகுதி இரண்டு, ப. 459

121. மேலது, ப. 460

122. மணிமாறன், பா.அ.ம., மு.கு.நூ. ப. 43

123. மேலது, ப. 44

124. S.I.I. Vol.XII No. 45

125. திருவிளையாடற்புராணம், மதுரைக்காண்டம், 573

126. சாம்பசிவன், ச., மாநகர் மதுரை, ப. 15

127. Nilakanta Sastri, K.A., A History of South India, p. 70

128. வேலுப்பிள்ளை, ஆ., தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், ப.14.

129. மேலது, ப. 14

130. Nilakanta Sastri, K.A., op.cit. p. 71

131. இராகவையங்கார்., மு. வேளிர் வரலாறு, ப. 7

132. Francis, W, (Ed.,), Madras District Gezetteers, Madurai, Vol. I, 2

133. Ibid., p. 2.

134. இராகவையங்கார், மு., அ. நூ.ப. 7

135. வேலுப்பிள்ளை, ஆ., அ.நூ., ப. 14

136. மேலது, ப. 14

137. Desai, P.B., Jainism in South India Some Jaina epigraphs, p. 2

138. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை உரை, புறம். 177ஆவது பாடலின் உரை

139. கலைக்களஞ்சியம், 8:256

140. மணிமாறன், பா.அ.ம., அ.நூ. ப. 122

141. ஆளவந்தார், ஆர்., அ.நூ. பக். 182-183

## தொண்டைநாடு

சங்ககாலத் தமிழ்ச்சமூகத்தில் சேர சோழ பாண்டிய நாடுகளே அன்றித் தொண்டைநாடும், 'தொண்டைநாடு சான்றோருடைத்து'[1] என்ற நிலையில் அனைவராலும் அறியப்பட்ட ஒரு பகுதியாக விளங்கியது. 'தமிழகத்தின் எல்லைப் புறத்தில் வாழ்ந்த குடிகளாகத் தொண்டையர்கள் இருந்தனர்' என்று தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் குறிப்பிடுகின்றார்.[2] தொண்டையர் என்னும் சொல் சங்க இலக்கியப் பாடல்கள் பலவற்றில் காணப்படுகிறது.

*மண்எடுத்து உண்ணும் அண்ணல் யானை*
*வண்தேர்த் தொண்டையர் வழைஅமல் அடுக்கத்து* (குறுந்.260;5-6)

என்றும்,

*வினைநவில் யானை விறற்போர்த் தொண்டையர்*
*இனமழை தவழும் ஏற்றுஅரு நெடுங்கோட்டு* (அகம். 213;1-3)

என்றும்,

*ஓங்குவெள் அருவி வேங்கடத்து உம்பர்க்,*
*ஒன்றல் செல்லா உரவுவாள் தடக்கைக்*
*கொண்டி உண்டி, தொண்டையோர் மருக!* (பெரும். 453-454)

என்று பதிவுச்செய்யப்பெற்றுள்ளது. இச்சொல் பன்மையிலமைந்திருப்பதால், இ·து ஒரு குடும்பத்தையோ குடியையோ குறிப்பதெனக் கொள்ளலாம். பகைவர் நாட்டு வளங்களை நுகரும் உயர்ந்த தோற்றமுடைய யானைகளையும் பெரிய தேர்களையுமுடைய தொண்டையரின் சுரபுன்னை மரங்கள் நிறைந்த மலைகள் உள்ள இடமே தொண்டையர் உறைவிடம் என்ற குறிப்பும் மேற்குறிப்பிட்ட குறுந்தொகைப் பாடலின் மூலம் அறியப்படுகின்றது.

## தொண்டை நாட்டின் எல்லை

தொண்டையர்கள் நன்கு பழகிய யானைகளைக்கொண்டு, வெற்றிதரும் போர்களைச் செய்வார்கள். அவர்களுக்கு உரியது வேங்கடமலை. அது முகில் கூட்டங்கள் தவழும் ஏறுதற்கரிய உயர்ந்த கோடுகளையும் ஓங்கு வெள்ளருவிகளையும் உடையது அதற்கு அப்பால் இருப்பது வடுகர்நாடு ஆகிய செய்திகள் மேற்குறிப்பிட்ட அகநானூற்றுப்பாடலின் மூலம் அறியப்படுகிறது.

மா. இராசமாணிக்கனார் அவர்கள், ''பாலாறு பாயப்பெற்ற தொண்டை நாடு சங்ககாலத்தில் தொண்டைமான்கள் ஆட்சியிலிருந்தது என்றும், செங்கற்பட்டு, வடஆற்காடு மாவட்டங்களும், திருப்பதி வரையிலுள்ள சித்தூர் மாவட்டப்பகுதிகளும், நெல்லூர் மாவட்டத் தென்பகுதியும் சேர்ந்தது தொண்டை நாடு''[3] என்று குறிப்பிடுகின்றார். ''கிழக்கு மலைத்தொடருக்கு மேற்கும், வேங்கடத்திற்கு வடக்கும், கடற்கரை நிலத்திற்குக்கிழக்கும், பினாகை அல்லது செய்யாற்றுக்குத் தெற்கும் உள்ள இருபது காவதங்கள் சுற்றியிருக்க அமைந்திருந்தது'' என்று தொண்டை நாட்டுக்கு எல்லை கூறுவர் பூரணலிங்கம் பிள்ளை அவர்கள்.[4] மேலும் சங்க இலக்கியப் பாடற்கருத்துகளிலிருந்து வேங்கடமலையும் அதனையொட்டிய இடமும் தொண்டையரின் ஆட்சியிடமாயிருந்தது என அறிய முடிகின்றது.

## திரையரே தொண்டையர்

சங்க நூல்களில் காணும் பிற குறிப்புகளிலிருந்து, திரையரே தொண்டையர் என்பது தெளிவாகின்றது. காட்டூர்கிழார் மகனார் கண்ணனார் என்பவர் அகம், 85-ஆம் பாடலில், திரையன் என்பான் முருவனை வேங்கட மலையின் தலைவனாகக் குறிப்பிடுகிறார்.

*ஆழல்-வாழி, தோழி! - சாரல்*
*ஈன்றுநாள் உலந்த மெல்நடை மடப்பிடி,*
*கன்றுபசி களைஇய பைங்கண் யானை*
*முற்றா மூங்கில் முளைதருபு ஊட்டும்*
*வென்வேல் திரையன் வேங்கட நெடுவரை* (அகம். 85: 5-9)

திரையர் அல்லது தொண்டையர் எங்கிருந்து யானைகளைப் பெற்றார்கள் என்பது இப்பாடலிலிருந்து தெரிகிறது. இப்பாடலிற் குறிப்பிடப்படுபவனின் இயற்பெயர், 'வென்வேல் திரையன்' என்றே கொள்வதா, அல்லது திரையன் என்று மட்டும் கொள்வதா என்பது தெளிவாகத் தெரியவில்லை. பெரும்பாணாற்றுப்படை[5] பல்வேல் திரையன் என்பானைப்பற்றிக் குறிப்பிடுகிறது. இவன் காஞ்சிபுரத்திலிருந்து அரசாண்டு வந்தவன். இவனது முழுப்பெயர் தொண்டைமான் இளந்திரையன், 'தொண்டையர் குடியில் தோன்றிய இளைய திரையன்' என்பது இதன் பொருள். இவனை இளைய திரையன் என்றால், வேங்கடமலைக்குரியவனை மூத்த திரையன் எனலாம். திரையர் அல்லது தொண்டையர், ஒரு தலைமுறைக்குள் வேங்கட மலையிலிருந்து காஞ்சிபுரத்திற்குக் குடியேறினர் என்று கூறவேண்டும்.

அதியமானின் காலத்தவனாகிய ஒரு தொண்டைமானைப் பற்றி ஔவையார் பாடியுள்ளார்[6] தமிழக வரலாற்றின் முதற்காலத்தில் முடிமன்னர்கள் ஆற்றலிற் சிறந்து விளங்கியிருந்தனர். அதற்கடுத்த காலத்தில் குறுநில மன்னர்களாகிய வள்ளல்கள் மேலோங்கி மூவேந்தர்களையும் ஒளிமழுங்கச் செய்தனர். இறுதிக் காலத்தைச் சேர்ந்தவன் இளந்திரையன். ஔவையார் பாடிய தொண்டைமான் இளந்திரையனுக்கு, இவன் முற்பட்டவன் எனக்கொள்ளலாம். இந்தத் தொண்டைமானைப்பற்றி ஔவையார் வஞ்சப் புகழ்ச்சியாகப் பாடியதும், அவனுடைய வலிமையைப்பற்றியும் படைக்கலங்களைப் பற்றியுமே ஆகும்.

தொண்டையர் வேங்கடமலையிலிருந்து காஞ்சிபுரம் வரையில் வென்று தம் அடிப்படுத்தினர். அகம், 340-ஆம் பாடலில் நக்கீரர், பொலம்பூண் திரையன் என்பான் கடற்கரையையடைந்து 'பவத்திரி' என்ற அழகிய நகரை அமைத்துக்கொண்டதாகப் பாடுகிறார். அவர் அந்நகரின் வளத்தையும் சிறப்பையும் தலைவியின் அழகுக்கு உவமிக்கின்றார். 'பவத்திரி' என்பது தூய தமிழ்ச் சொல்லாகத் தெரியவில்லை. அ.்.து ஆந்திரச் சொல் ஒன்றின் திரிபாகவோ, பிராகிருதச் சொல் ஒன்றின் திரிபாகவோ இருக்கலாம். எ.்.து எவ்வாறேனும், தொண்டையர் என்னும் குடியினர் மற்றத் திசைமொழிகளும் பேசப்படுகிற தமிழக எல்லைப்புறங்களில் வாழ்ந்தனர் என்பதை இப்பெயர் காட்டுகிறது.

## தொண்டை நாட்டின் இன்றைய ஆட்சிப்பகுதிகள்

பல்வேறு சூழல் காரணமாக இன்று எல்லைகள் மாறியுள்ளன. அதன்படி சென்னை, காஞ்சிபுரம், திருவள்ளூர், திருவண்ணாமலை, வேலூர், விழுப்புரம் முதலிய மாவட்டங்கள் தொண்டைநாட்டின் எல்லைகளாகும். எனவே தொண்டைநாட்டின் எல்லையிலடங்கிய, சங்க இலக்கியத்தின்வழி பெறப்படும் ஊர்ப் பெயர்களை அடையாளங்கண்டு விளக்குவதாக இவ்வியல் அமைகிறது.

## ஆமூர்

சிறுபாணாற்றுப்படை, ஐங்குறுநூறு, அகநானூறு, புறநானூறு ஆகிய சங்க இலக்கியங்கள் உணர்த்தும் ஊர்ப்பெயர்களுள் ஆமூர் என்பது ஒன்று. அழகிய குளிர்ந்த கிடங்கினையும், அரிய காவலையும், அகன்ற அகங்களையும், நிறைந்த அந்தணர்களையும் உடையது ஆமூர் என்று சிறுபாணாற்றுப்படை கூறுகிறது.

*மருதஞ் சான்ற மருதத் தண்பணை*
*அந்தண ரருகா வருங்கடி வியனகர்*
*அந்தண கிடங்கின் அவன் ஆமூரெய்தின்* (சிறுபாண். 186-188)

சோழரின் ஆமூர் அன்ன நலமுடையவள் தலைவி எனத் தலைவியின் நலம் பாராட்டுகிறது ஐங்குறுநூறு.

*வெல்போர்ச் சோழர் ஆமூர் அன்ன இவள்*
*நலம் பெறு சுடர்நுதல் தேம்ப* (ஐங்-56: 2-3)

கொடுமுடி என்னும் மன்னனால் பாதுகாக்கப்பெறுவதும் நெடுந்தொலைவிலும் விளங்கித் தோன்றுவதும் ஆகிய சிறப்பினையுடையது ஆமூர் என்று அகநானூறு கூறுகிறது.

*கொடுமுடி காக்கும் குரு உக்கண் நெடுமதில்*
*சேண் விளங்கு சிறப்பின் ஆமூர் எய்தினும்*
*ஆண்டு அமைந்த உறையுநர் அல்லர்* (அகம். 159 : 18-20)

ஆமூரைச் சேர்ந்த மல்லன் ஒருவனைச் சோழன் போர்வைக்கோப்பெருநள்ளி வென்ற பொழுது சாத்தந்தையார் என்ற புலவர் பாடியபாடல் ஒன்று புறநானூற்றில் இடம் பெற்றுள்ளது.

*இன்கடுங் கள்ளின் ஆமூர் ஆங்கண்*
*மைந்துடை மல்லன் மதவலி முருக்கி*
*ஒருகால் மார்பு ஒதுங்கின்றே; ஒருகால்*
*வருதார் தாங்கிப் பின்ஒதுக் கின்றே* (புறம் 80: 1-4)

ஆமூரைப் பற்றியான சங்க இலக்கியப்பாடல் பதிவுகள் இவ்வாறு அமைகின்றன. வேலூரிலிருந்து கிடங்கிலை நோக்கிச் செல்லும் வழியில் ஆமூர் இருப்பதாகச் சிறுபாணாற்றுப்படையில் கூறப்பெற்றுள்ளது. ஆயினும் ஆமூர் என்ற ஊர் திண்டிவனம் வட்டத்தில் இல்லை. எனினும் வேலூருக்கு வடமேற்கில் ஏறத்தாழ எட்டு கிலோமீட்டர் தொலைவில் 'தொண்டாமூர்' என்றும், அதற்கு வடமேற்கில் ஆறுகிலோமீட்டர் தொலைவில் 'சிற்றாமூர்' என்றும், அதற்கு வடமேற்கில் ஐந்து கிலோமீட்டர் தொலைவில் 'நல்லாமூர் என்றும் மூன்று ஊர்கள் உள்ளன.

நல்லாமூருக்குச் சிறிது வடகிழக்கில் பத்து கிலோமீட்டர் தொலைவில் கிடங்கில் அமைந்துள்ளுது. 'ஆமூர்' என்ற பெயருடன் ஊர் இல்லாமையாலும் சிறுபாணன் கூறியபடி இந்த நல்லாமூரே கிடங்கிலுக்கு அண்மையில் இருப்பதாலும், அந்தப்பாணன் கூற்றுப்படி வேலூருக்கும் இந்த நல்லாமூருக்கும் இடையில் மருதவளம் காணப்படுவதாலும் இந்த நல்லாமூரே சங்ககால ஆமூராய் இருந்திருக்கலாம் என்று கொள்வது பொருத்தமாகும். மயிலை சீனி. வேங்கடசாமியும் இதே கருத்தினை வலியுறுத்துகிறார்.

ஆமூர் முதலி என்ற ஒரு வள்ளல் இவ்வூரினர் என்றும், இவரைக் காளமேகப் புலவர் பாடினார் என்றும், அவ்வாறு பாடும்பொழுது பாதிவெண்பா பாடிய உடனேயே அவ்வள்ளல் பரிசளித்தார் என்றும் ஒரு செய்தி கூறப்பெறுகிறது7. அகநானூற்றில் 159-ஆவது பாடலையும், நற்றிணையில் 264-ஆவது பாடலையும் பாடிய கவுதமன் சாதேவனார் என்ற புலவர் இவ்வூரினர். ஆகவே ஆமூர்க்கவுதமன் சாதேவனார் எனப்பெயர் பெற்றார்.




(நன்றி - மயிலை சீனி. வேங்கடசாமி, சிறுபாணன் சென்ற பெருவழி)

## ஆர்க்காடு

ஆர்க்காடு என்பதில் 'ஆர்' என்பது ஆத்தி மரத்தைக் குறிக்கும். ஆத்தி மரங்கள் இப்பகுதியில் நிறைந்திருந்தமையால் இங்குத் தோன்றிய ஊர் ஆர்க்காடு என்னும் பெயர் பெற்றது. ஆர்க்காடு, வேலூர் மாவட்டத்தில் தனியொரு வட்டமாக இன்று விளங்குகின்றது.

ஆர்க்காடு என்னும் பெயரைச் சிலர் ஆற்காடு எனக்கொண்டு, ஆல்+காடு எனப் பிரித்து ஆல மரங்கள் நிறைந்த காடாக இருந்து ஆற்காடு என்று பெயர் பெற்றிருக்க வேண்டுமெனக் கருதுகின்றனர். வேறுசிலர் ஆறுகாடுகள் இங்கு இருந்தன. அதனால் ஆறுகாடு என்பதே ஆற்காடு ஆயிற்று என்பர். ஆறுகாடு என்பது வடமொழியில் 'ஜடாரண்யம்' என்று பொருள்படும். அதனால் இவ்வூரினை ஜடாரண்யம் என்றும் வழங்குவர்.[8]

ஆர்க்காடு என்னும் ஊர் சோழமன்னன் சேந்தன் தந்தையாகிய அழிசி என்பவனுக்கு உரியது என்று நற்றிணையும் குறுந்தொகையும் கூறுகின்றன. அகப்பொருள் பற்றிக் கூறும் இவ் இலக்கியங்கள் தலைவியின் நலம் பற்றிக் கூறும்

பொழுது ஆர்க்காடு அன்ன நலம் எனப் புகழ்ந்து உரைக்கும் நிலையிலேயே ஆர்க்காடு என்ற ஊரைக் குறித்துக் கூறியுள்ளன.

*திதலை யெ.்.கின் சேந்தன் தந்தை*
*தேங்கமழ் விரிதார் இயல்தேர் அழிசி*

*வண்டுமூசு நெய்தல் நெல்லிடை மலரும்*
*அரியலங் கழனி ஆர்க்கா டன்ன* (நற். 190 : 3-6)

*பகுமணி யானைப் பசும்பூட்சோழர்*
*கொடி நுடங்கு மறுகின் ஆர்க்காடாங்கண்* (நற் . 227 : 5-6)

*நிறைய ஒள·வாள் இளையர் பெருமகன்*
*அழிசி ஆர்க்கா டன்ன இவள்*
*பழிதீர் மாணலந் தொலைதல் கண்டே* (குறுந். 258 : 6-8)

அகநானூற்றில் 64- ஆம் பாடலைப்பாடிய வெள்ளைக் கண்ணத்தனார் என்ற புலவரின் தந்தை ஆர்க்காடு கிழார் என்பவர் இவ்வூரினர். இதனால் இப்புலவர் ஆர்க்காடு கிழார் மகனார் வெள்ளைக் கண்ணத்தனார் என்று அழைக்கப்பட்டார்.

ஆர்க்காடு மிகவும் தொன்மைச் சிறப்புடைய ஊர். கி.பி. 1565 முதல் ஆர்க்காட்டில் முகமதியர் ஆட்சி அமைந்தது. 1962-இல் ஔரங்கசீப் கருநாடகத்தைக் கைப்பற்றி, சூல்பிக்கர் அலியைச் சிற்றரசன் ஆக்கினான்; ஆர்க்காட்டையும் தலைநகராக்கினான். ஔரங்கசீப் மறைவுக்குப்பின் சாதத்துல்லாகான் 1710 முதல் 1732 வரை ஆண்டான். பிறகு, தோசுது அலி என்பவன் 1732 முதல் 1740 வரை ஆட்சி நடத்தினான். 1736-ல் மதுரையைக் கைப்பற்றினான். ஆர்க்காடு மதுரைக்கும் தலைநகராயிற்று.

பின்னர்ச் சப்தர் அலி 1740 முதல் 1742 வரையும் முக்த் சையத்கான் 1742 முதல் 1743 வரையும் அன் வருதீன்கான் 1743 முதல் 1749 வரையும் ஆண்டனர். முகமது அன்வருத்தீன் மறைவுக்குப்பின்னர் முகமது அலித்கும் உசேன் தோசுத்துக்காரரும் தலையிட நேர்ந்தது. உமதத்-உல்-உமாரா 1795 முதல் 1801 வரையிலும் அசீம்

உத்தௌலா 1801 மதுல் 1820 வரையிலும் ஆண்டனர். இறுதியில் முக்த்கவுசு ஆட்சிக்கு வந்தான். அவன் வாரிசுயின்றி 1855-இல் மறைந்தான். அவன் மறைவுக்குப்பின் ஆங்கிலேயர் வசமாயிற்று என்பர்.

முகமதியர் ஆட்சியின் சின்னங்களாக இவ்வூரில் பழமையான மசூதிகள் பல இருக்கின்றன. கிளைவ் இருந்த அறை இங்குள்ள டெல்லி வாயிலுக்கு மேலே உள்ளது என்பர்.

## இடைக்கழிநாடு

இடைக்கழி என்பது வீட்டு வாயிலிலிருந்து உட்பகுதிக்குச் செல்லும் நடைபாதையைக் குறிப்பதாகும். ஓய்மான் நாட்டு நல்லியக் கோடன் மீது சிறுபாணாற்றுப்படை என்னும் நூலை இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் பாடியுள்ளார்.

இடைக்கழிநாடு என்பது இப்போது எடக்குநாடு என்று வழங்கப்பெறுகிறது. இடைக்கழிநாடு என்பதன் திரிபே எடக்குநாடு என்பதாகும். இந்த இடைக்கழி நாடாகிய எடக்கு நாடு தற்போது காஞ்சிபுரம் மாவட்டம் மதுராந்தகம் வட்டத்தில் கயப்பாக்கத்திற்கு அருகில் உள்ளது. இந்த எடக்கு (இடைக்கழி) நாட்டில் இப்போதும் நல்லூர் என்னும் சிற்றூர் உள்ளது. நத்தத்தனார் என்ற புலவர் இந்த இடைக்கழிநாட்டு நல்லூரிலே வாழ்ந்தவராதல் வேண்டும். நல்லியக் கோடனுடைய ஓய்மாநாடு இடைக்கழிநாட்டிற்கு அண்மையில் தெற்குப்பக்கத்தில் உள்ளது.

இடைக்கழிநாடு செய்யூருக்குக் கிழக்கிலும் தென்கிழக்கிலும் தெற்கிலும் கடற்கரையோரத்தில் பரவியுள்ளது. இந்நாட்டின் இடையில் கழிவெளிகள் நீண்டு கிடக்கின்றன. இது பற்றியே இந்நாடு இடைக்கழி நாடு எனப் பெயர் பெற்றுள்ளது. இடைக்கழிநாட்டின் பரப்பு 26 ச.கி.மீ. இடைக்கழி என்னும் பெரும்பகுதியில் பல கிராமங்கள் உள்ளன. பனையூர், விளம்பூர், செங்கதேவன் குப்பம், சேம்பிலிவரம், கோவைப்பாக்கம், கம்பிவாக்கம், வேம்பனூர், ஆலம்பறை, கடப்பாக்கம், கரும்பாக்கம், பள்ளப்பாக்கம், தேன்பாக்கம், கொளத்தூர், முதலியார்குப்பம், நைனார்குப்பம், ஒசியூர் எனப் பல சிற்றூர்கள் இருக்கின்றன.

### இடையாறு

ஊர் அமைப்பால் இடை என்ற அடைமொழியுடன் வழங்கும் ஊர்ப்பெயர்களில் இடையாறு என்பதும் ஒன்று.

*செல்குடி நிறுத்த பெரும்பெயர்க் கரிகால்*
*வெல்போர்ச் சோழன் இடையாற்று அன்ன*
*நல்இசை வெறுக்கை தருமார்....* (அகம். 141 : 22-24)

என்ற அகநானூற்றுப்பாடலின் மூலம் இடையாறு என்னும் ஊர்ப்பெயரை அறிய முடிகின்றது. விழுப்புரம் மாவட்டம் திருக்கோயிலூர் வட்டத்தில் இவ்வூர் உள்ளது. இப்பொழுது இடையார் என வழங்கப்பெறுகிறது. கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த பராந்தக வீரநாராயணனின் தளவாய்ப்புரச் செப்பேட்டிலும் 'இடையாறு' என்றே வழங்கி வந்துள்ளது.[9] இதற்கும் பிற்காலத்தில்தான் இடையார் என வழங்க ஆரம்பித்திருக்க வேண்டும்.

### உரோடகம்

கந்தரத்தனார் என்ற சங்ககாலப்புலவர் உரோடகம் என்ற ஊரினர். எனவே உரோடகத்துக் கந்தரத்தனார் எனப்பெயர்பெற்றார். நற்றிணையில் 116, 146, 238 ஆகிய பாடல்களும், குறுந்தொகையில் 155 ஆம் பாடலும் அகநானூற்றில் 23, 69, 95, 191 ஆகிய பாடல்களும் உரோடகத்துக் கந்தரத்தனார் பாடியவை ஆகும்.

உரற்களம் என்பது அறிஞர்கள் கூடும் இடம் என்ற பொருளையுணர்த்தும்[10]. அதுவே காலப்போக்கில் மாற்றமடைந்து உரோடகமாகத்திரிந்து, தற்போது ஒரகடம் என வழங்கப்படுகிறது. காஞ்சிபுரம் மாவட்டத்தில் இவ்வூர் உள்ளது.

### எயிற்பட்டினம்

'மதிலொடு பெயரிய பட்டினம்' என்று ஓர் ஊர்ப்பெயர் சிறுபாணாற்றுப்படையில் இடம்பெற்றிருக்கிறது.

*பாடல் சான்ற நெய்த னெடுவழி*
*மணிநீர் வைப்பு மதிலொடு பெயரிய*
*பனிநீர்ப் படுவிறற் பட்டினம் படரின்* (சிறுபாண். 151-153)

இப்பாடலுக்கு உரை வகுத்த நச்சினார்க்கினியர் அப்பட்டினத்தை ‘எயிற்பட்டினம்’ என்று குறித்துள்ளார். இது ஓய்மாநாட்டு ஊர்களில் ஒன்று. ஓய்மாநாட்டுத் துறைமுக நகரமும் இதுவேயாகும். சிறுபாணாற்றுப்படைத் தலைவன் நல்லியக்கோடன் ‘‘எயிற்பட்டின நாடன்’’என்றே குறிக்கப்பெற்றுள்ளான்.

*இம்மென் முழவின் எயிற்பட்டின நாடன்*
*செம்மல் சிலைபொருத தோள்* (சிறுபாண். தனிப்பாடல். 1 : 3-4)

எனவே, மதிலொடு பெயரி பட்டினம் என்று சிறுபாணாற்றுப்படையில் குறிக்கப் பெற்றுள்ள ஊர் ‘எயிற்பட்டினம்’ என்பது தெளிவு.

விழுப்புரம் மாவட்டத்தில் உள்ள இன்றைய மரக்காணமே எயிற்பட்டினம் என்று மயிலை சீனி. வேங்கடசாமி போன்றோர் கூறுகின்ற கருத்து ஏற்றுக்கொள்ளத்தக்கதாக இல்லை. மரக்காணம் என்பது சோழர் காலத்தில் (கி.பி. 900 -1200) மனக்கானம் எனப் பெயர் பெற்றிருக்கிறது. மணற்காடு எனப் பொருள்படும் மணற்காணம் என்பதன் திரிபே மனக்கானம். இது நாளடைவில் விஜயநகர வேந்தர் ஆட்சிக்காலத்தில் மரக்காணம் என்று ஆயிற்று.

ஓய்மானாட்டுக் கடற்கரைப்பகுதியில் ‘பட்டினர்’ என்னும் ஒரு நகரம் இருந்தது. அதன் பெயரால் கடற்கரைப்பகுதி பட்டினநாடு எனப் பெயர் பெற்றது. ஓய்மானாட்டு உள் நாடுகளுள் பட்டினநாடு என்பது ஒன்று. மரக்காணம் அப்பட்டின நாட்டைச் சேர்ந்தது. முதலாம் இராசராசன் காலத்தில் (கி.பி. 985-1014) மரக்காணம் ஓய்மானாட்டுப் பட்டின நாட்டுத் தேவதான மனக்கானம் எனப் பெற்றது. மனக்கானம் என்ற கண்டராதித்தன் காலத்தில் அவனது பெயரைப் பெற்றிருந்தது எனக் கூறலாம்.[11] ஆகவே மரக்காணம் வேறு, எயிற்பட்டினம் வேறு.

‘சங்ககால வாழ்வியல்’ என்ற நூலில் ந. சுப்ரமணியம் எயிற்பட்டினம் என்பது இன்றைய புதுச்சேரியைக் குறிக்கும் என்கிறார். இதுவும் தவறான கருத்தாகும். பெரிப்ளுஸ், தாலமி போன்றோர் குறித்துள்ள சோப்பட்டினம் என்பது எயிற்பட்டினமேயாகும். சங்க இலக்கியத்தின் வழி பெறப்படும் ஊராகிய இந்த எயிற்பட்டினம் இப்போது மறைந்துவிட்டது.

### ஒய்மா நாடு

*உறுபுலி துப்பின், ஓவியர் பெருமகன்*

*களிற்றுத் தழும்புஇருந்த கழல்தயங்கு திருந்துஅடி*

*பிடிக்கணம் சிதறும் பெயல்மழைத் தடக்கை*

*பல்இயக் கோடியர் புரவலன் பேர்இசை*

*நல்லியக் கோடணை .....* (சிறுபாண். 122-126)

என்று இப்பாடலில் நல்லியக்கோடன் என்ற வள்ளல் கூறப்பெற்றுள்ளான். ஓவியர் குடியில் பிறந்த பெருமகன் ஆகிய ஓவியர் பெருமகன் என்ற பெயர் 'ஒய்மான்' என மருவி, அவன் ஆண்டநாடு ஒய்மாநாடு எனப் பெயர் பெற்றுள்ளது.

ஒய்மாநாடு திண்டிவனத்திற்கு வடக்கிலுள்ள மாவிலங்கையை வடவெல்லையாகவும், கடலைத் தென் எல்லையாகவும், சூணாம்பேடு என்னும் ஊரையடுத்த வில்லிப்பாக்கத்தைக் கிழக்கு எல்லையாகவும் கொண்டது. மேற்கில் ஏறத்தாழ விழுப்புரம் வரையில் பரவியிருந்ததாகவும் தெரிகிறது. இந்நான்கு எல்லைகளுக்குள்ளேயே எயிற்பட்டினம் இருந்தது. இந்நாட்டைச் சேர்ந்தனவாக இலக்கியங்கள் கூறும் வேலூர் ஆமூர், (நல்லாமூர்) என்னும் ஊர்கள் இன்னும் இருக்கின்றன. புறநானூற்றில் 176-ஆம் பாடலில் ஒய்மான் நல்லியக்கோடனை, நன்னாகனார் எனும் புலவர் பாடியுள்ளார். மேலும் சிறுபாணாற்றுப்படையின் பாட்டுடைத்தலைவனாகக் கொண்டு நல்லியக்கோடனை நல்லூர் நத்தத்தனார் பாடியுள்ளார்.

### கச்சி

*அடங்காத் தானையோடு உடன்று மேல்வந்த*

*ஒன்னாத் தெவ்வர் உலைவிடத்து ஆர்த்து*

*கச்சி யோனே, கைவண் தோன்றல்* (பெரும். 418-420)

என்ற பெரும்பாணாற்றுப்படையின் மூலம் கச்சி (காஞ்சிபுரம்) அறியப்பெறுகின்றது. சங்க காலம் தொடங்கி கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டுவரை கச்சி என்ற பெயரே இருந்துள்ளது. பின்பு தான் காஞ்சிபுரம் என்ற பெயர்வழக்கு வந்துள்ளது. கச்சி, காஞ்சி இரண்டும்

தாவரத்தின் அடிப்படையில் வந்த ஊர்ப்பெயராகும். கச்சி என்ற நகரமும் காஞ்சி என்ற நகரமும் ஒன்று என்றும், இரண்டும் வெவ்வேறான தனித்தனி நகரங்கள் என்றும் இருவேறான கருத்து உள்ளது.

இன்று காஞ்சி நகரத்திற்குக் கிழக்கிலுள்ள நிலப்பரப்பிலேயே சங்ககால கச்சிமாநகர் அமைந்திருந்தது. கச்சி மாநகரம், ஏகாம்பரேசுவரர் கோயில், கச்சபேசர் கோயில், உலகளந்த பெருமாள் கோயில் ஆகிய கோயில்களுக்குக் கிழக்கிலும், யதோத்தகாரி கோயிலுள்ள பகுதிக்கும் திருக்காலி மேட்டுக்கு வடக்கிலும் சங்ககால கச்சி மாநகரம் அமைந்திருந்தது. கச்சி மாநகரம் தாமரை போன்ற அமைப்பையுடையதாக இருந்தது. அதனைச் சுற்றிலும் அகழி இருந்தது அகழியைச்சுற்றிக் காவற்காடு இருந்தது. கச்சியில் சோலைகள் இருந்தன.[12]

கச்சிப்பேடு என்பது கச்சியின் புறநகர் என்று பொருள்படும். பெரும்பாணாற்றுப்படை பாடப்பெற்ற சங்ககாலத்திலும் இக்கச்சிப்பேடு இருந்தது என்பதைக் கச்சிப் பேட்டு நன்னாகையார், கச்சிப்பேட்டு இளந்தச்சனார், கச்சிப்பேட்டுப் பெருந்தச்சனார் போன்ற வழக்காறுகளைக் கொண்டு அறியலாம்.

திருவெ·.காக் கோயிலுள்ள இடம் முதற் பராந்தகன் காலத்தில் (கி.பி. 907-953) கச்சிப்பேடு என வழங்கப்பெற்றிருக்கிறது.[13] பேடு என்பது நகரத்தின் வெளிப்பகுதியைக் (புறநகர்ப்பகுதி) குறிப்பதாகும். பேடு என்னும் இச்சொல் பேட்டை எனக் காலப்போக்கில் மாற்றம் பெற்றுள்ளது. சிறிய காஞ்சிபுரத்துக்குக் கிழக்கில் நாசரத்துப்பேட்டை, ஐயன் பேட்டை, நாயக்கன்பேட்டை என்பனவும் பெரிய காஞ்சிபுரத்துக்கு வடக்கிலும் வட மேற்கிலும் பஞ்சுப்பேட்டை, ஒலிமுகமது பேட்டை என்பனவும் ஒப்பு நோக்கத்தக்கன.

## நான்கு பிரிவுகள்

காஞ்சிபுரம் சிவகாஞ்சி, விஷ்ணுகாஞ்சி, ஜீனகாஞ்சி, பௌத்தகாஞ்சி என்னும் நான்கு பிரிவுகளாக விளக்கியது. சிவகாஞ்சி என்பது இன்றைய பெரிய காஞ்சிபுரம். விஷ்ணுகாஞ்சி என்பது இன்றையசின்ன காஞ்சிபுரம். இவை இரண்டும் இன்றைய

நகராட்சி எல்லைக்குட்பட்டவை. இந்த எல்லைக்கு வெளியேயுள்ள திருப்பருத்திக் குன்றம் என்னும் ஊர் சமணக்காஞ்சி. இன்றைய காமாட்சியம்மன் கோயிலைச் சுற்றியுள்ள பகுதி பௌத்த காஞ்சி ஆகும்.

மணிமேகலைக் காலத்தில் தொண்டை நாட்டின் தலைநகரமாகக் காஞ்சிநகர் விளங்கியது. தேவலோகந்தான் மண்ணுலகில் வந்து கிடந்ததோ என்று மதிக்கும்படியாக இருந்தது காஞ்சி என்று மணிமேகலை புகழ்கிறது.

*பொன்னெயிற் காஞ்சி நகர்க்கவினழிய*

(மணி. கந்திற்பாவை வருவதுரைத்த காதை -418)

*ஆங்கவன் தானு நின்னறத்திற் கேதுப்*

*பூங்கொடி கச்சி மாநகராதலின்* (மணி. கச்சி மாநகர் புக்க காதை. 151-152)

*பொன்னேயிற் காஞ்சி நாடுகவினழிந்து*

(மணி. கச்சி மாநகர் புக்க காதை.156)

காஞ்சி என்பது பொன். காஞ்சிநகர் - பொன்னகர், இப்பெயர் காஞ்சியின் அழகையும் வளத்தையும் குறிக்கிறது.

காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு சோழமன்னர்கள் ஆண்டு வந்தனர். அந்த நகரத்தில் தவம்புரிவோர், சமயவாதிகள் பலர் இருந்தனர். இதனால் 'தொண்டை நாடு சான்றோர் 'உடைத்து' என்னும் பெருமை பெற்றது. பதினெட்டு மொழிகளைப்பேசும் பலநாட்டு மக்களும் அந்நகரத்தில் இருந்தனர். அந்நகரின் நடுவில் புத்தர் கோயில் இருந்தது. நகரின் தென்மேற்கில் ஒரு பூஞ்சோலை, குளம். சோலையில் புத்தபீடிகை இவை அமைக்கப்பட்டிருந்தன. இச்செய்திகள் மணிமேகலை நூல் தருவன.[14]

காஞ்சி என்ற ஊர்ப்பெயர் பிற்காலத்தில் புரம் என்ற பின் ஒட்டுடன் இணைந்து காஞ்சிபுரமாயிற்று. இன்று மக்கள் வழக்கில் காஞ்சி என்றும் காஞ்சிபுரம் என்றும் வழங்குகின்றனர். கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவனாகிய இரண்டாம் இராசாதிராசனின் கல்வெட்டு ஒன்றில் காஞ்சி என்றே இவ்வூர் குறிக்கப்பெற்றுள்ளது.

**காஞ்சிப்புலவர்கள்**

நற்றிணையில் 123 ஆம் பாடலைப்பாடிய காஞ்சிப்புலவனார், 144 மற்றும் 213 ஆம் பாடல்கள் பாடிய கச்சிப்பேட்டுப் பெருஞ்சாத்தனார், 266 - ஆம் பாடலைப்பாடிய கச்சிப்பேட்டு இளந்தத்தனார், குறுந்தொகையில் 30, 172, 180, 192, 287 ஆகிய பாடல்கள் பாடிய கச்சிப்பேட்டு நன்னாகையார், 213 மற்றும் 216 ஆகிய பாடல்கள் பாடிய கச்சிப்பேட்டுக் காஞ்சிக்கொற்றன் போன்றோர் இவ்வூரினைச் சேர்ந்த புலவர்கள்.

**கரும்பனூர்**

*இருங்கோள் ஈராப் பூட்கை*
*கரும்பனூரன் காதல் மகனே* (புறம். 381 : 25-26)

*கரும்பனூரன் கிணையேம் பெரும* (புறம். 384 -10)

என்ற புறநானூற்றுப் பாடல் அடிகளின் மூலம் கரும்பனூர் என்ற ஊர்ப்பெயரினை அறிய முடிகின்றது. புறநானூற்றில் 381 மற்றும் 384 ஆகிய இரண்டு பாடல்களிலும் கரும்பனூர்கிழானை நன்னாகனார் பாடியுள்ளார். காஞ்சிபுரம் மாவட்டம் திருக்கழுக்குன்றம் வட்டத்தில் இவ்வூர் தற்போது கரும்பூர் என மருவியுள்ளது.

**கிடங்கில்**

*கிடங்கில் அன்ன இட்டுரைக்கரைக் கான்யாற்றுக்* (நற். 65-2)

*கிணைமலர்ப் படப்பைக் கிடங்கில் கோமான்* (சிறுபாண். 160)

என்கிற பாடல்களின் மூலம் கிடங்கில் என்ற ஊர்ப்பெயரினை அறியமுடிகின்றது. இவ்வூர் ஒய்மாநாட்டு நல்லியக்கோடனின் ஆட்சியிலிருந்த ஊராகும். விழுப்புரம் மாவட்டம் திண்டிவனம் நகரத்தின் அருகில் இவ்வூர் உள்ளது. தற்போது கிடங்கல் என வழங்கப்பெறுகிறது.

கிடங்கல், திண்டிவனம் நகரில் தொடர்வண்டி நிலையத்தை அடுத்துப் பள்ளமான இடத்தில் அமைந்துள்ளது. அங்கே ஒரு சிவன் கோயிலும், சில தெருக்களும் உள்ளன. அதைச்சுற்றிலும் இடிந்த மதிற்சுவர்கள் காணப்படுகின்றன.

அம்மதிற் சுவற்களைச் சுற்றிலும் அகழி இருந்திருக்க வேண்டும். அகழி இருந்தமைக்கான அடையாளங்கள் காணப்படுகின்றன. அவ்வூரிலுள்ள சிவன் கோயிலில், கி.பி. 11 முதல் 15 ஆம் நூற்றாண்டு வரையிலான காலத்துக் கல்வெட்டுகள் சில உள்ளன. அவை சோழர், சம்புவராயர், விசய நகர வேந்தர்களின் கல்வெட்டுகள். "ஒய்மா நாட்டு கிடக்கை நாட்டுக் கிடங்கில்" என்றும் ஊரில் அக்கோயில் இருப்பதாகக் கல்வெட்டுகள் கூறுகின்றன.[15]

இதற்கு ஒரு கிலோமீட்டர் வடக்கில் உள்ள திண்டிவனத்தில் ஒரு சிவன் கோயில் உள்ளது. அது திண்பீசுரம் என்பது. அக்கோயிலுள்ள சோழர்காலத்துக் கல்வெட்டுகள் கி.பி. 1300 காலத்தவை. அக்கல்வெட்டுகள் அக்கோயில் "ஒய்மானாட்டு கிடக்கை நாட்டுக் கிடங்கிலான இராஜேந்திர சோழநல்லூர்த் திண்பீசுரம்" என்று குறித்துள்ளன. ஆகவே அதுவும் கிடங்கில் என்னும் ஊரில் இருந்தது என அறியலாம். இன்றைய திண்டிவனம் நகரத்தின் பெரும்பகுதி பண்டையக் கிடங்கிலே என்று கூறலாம்.[16]

இன்று 'கிடங்கில்' என்ற ஊர் நல்லியக்கோடனின் அரண்மனை இருந்த பகுதியாக இருந்திருக்க வேண்டும். செஞ்சியில் இருந்த நவாபுவின் ஆட்சிக்குட்பட்ட அம்பர்கான் என்பவர் கி.பி. 1677 இல் கிடங்கிற் கோட்டையையும் அகழியையும் சீர்திருத்தி அமைத்தார் என்று தெரிகிறது.[17] முற்காலத்தில் சிறந்து விளங்கிய கிடங்கில் இப்பொழுது திண்டிவனத்தின் ஒரு உட்பகுதியாக அமைந்திருக்கிறது.

நற்றிணையில் 218 ஆம் பாடலைப்பாடிய காவிதி கண்ணளார், 364 ஆம் பாடலைப்பாடிய காவிதிப் பெருங்கொற்றன், குறுந்தொகையில் 252 ஆம் பாடலைப்பாடிய குலபதி நக்கண்ணன் போன்ற புலவர்கள் இவ்வூரினைச் சேர்ந்தவர்களாவர்.

## குறுங்கோழியூர்

புறநானூற்றில் 17, 20, 22 ஆகிய பாடல்கள் பாடிய குறுங்கோழியூர் கிழார் என்ற புலவரின் மூலம் இவ்வூர் அறியப்படுகிறது. குறுங்கோழியூர் குறுங்கோழி என்றாகி இப்பொழுது கருங்குழி என வழங்கப்படுகிறது. காஞ்சிபுரம் மாவட்டம் மதுராந்தகம் வட்டத்தில் இவ்வூர் உள்ளது.

## குறும்பூர்

*புலிநோக் குறழ்நிலை கண்ட*

*கலிகெழு குறும்பூ ரார்ப்பினும் பெரிதே* (குறுந். 328 : 7-8)

என்ற குறுந்தொகைப்பாடலின் மூலம் குறும்பூர் என்னும் ஊரினை அறியமுடிகின்றது. குறும்பூர்-குறும்பலூர் என்று தற்போது மருவி வழங்கப்படுகிறது. இன்றைய பெரம்பலூருக்கு அருகில் இவ்வூர் உள்ளது.

## கோவல் (கோவலூர்)

இவ்வூர் கோவல் என்றும் கோவலூர் என்றும் சங்க இலக்கியத்தில் குறிக்கப்பெற்றுள்ளது. இவ்வூர் சங்க இலக்கியங்களில்

*துஞ்சா முழவிற் கோவல் கோமான்*

*நெடுந்தேர்க் காரி கொடுங்கால் முன்துறை* (அகம். 35 : 14-15)

என்றும்,

*முரண்மிகு கோவலூர் நூறி நின்*

*அரணடு திரி ஏந்திய தோளே* (புறம். 99 : 13-14)

என்றும் பதிவு செய்யப்பெற்றுள்ளது. விழுப்புரம் மாவட்டம் திருக்கோயிலூர் என அழைக்கப்பெறும் இவ்ஊரினை மலையமான் திருமுடிக்காரி ஆண்டு வந்த தன்மையை அகநானூற்றுப்பாடல் குறிப்பிடுகிறது.

*துஞ்சா முழவிற் கோவற் கோமான்*

*நெடுந்தேர்க் காரி கொடுங்கான் மூன்றுரைப்ப*

*பெண்ணையம் பேரியாற்று நுண்ணறல் கடுக்கும்* (அகம். 35 : 14-16)

பெண்ணையாற்றின் தென்கரையில் அமைந்துள்ள இவ்வூர், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசரால் பாடல் பெற்ற திருதலமாக விளங்குகின்றது. இவ்வூர் மேலூர், கீழூர் என்ற இருபகுதிகளாக அமைகிறது. கீழூரில் சிவன் கோயிலும், மேலூரில் திருமால் கோயிலும் உள்ளன. மலையமான் ஆண்ட நிலையில் இந்த நாடு மலையமான் நாடு என்றும் மலாடு என்றும் சுட்டப்படுகிறது.[18]

சைவ அடியார்கள் அறுபத்துமூவரில் ஒருவரான மெய்ப்பொருள் நாயனார் மலாட மன்னர்களில் ஒருவராக இந்நகரிலிருந்து அரசாண்டார் என்று பெரியபுராணம் கூறுகிறது.[19] இந்நகரிலரசாண்ட தெய்வீகன் என்னும் அரசனுக்குப் பாரிமகளிரை ஔவையார் மண முடித்தாரென்றும் கூறுகின்றனர்.[20] இவ்வூர் கீழுரிலுள்ள வீரட்டம் என்னும் கோயிலிருந்து எழுபத்தொன்பது கல்வெட்டுகளின் படிகள் எடுக்கப் பெற்றுள்ளன. அவை, பராந்தகன், இராசராசன், இராசேந்திரன், இராசாதிராஷன், இராசேந்திர தேவன், குலோத்துங்கன் முதலான சோழ மன்னர்களுடையவும், பல்லவர்களுடையவும், இராட்டிரகூடன் கன்னரதேவனுடையவுமான கல்வெட்டு களாகும். இக்கல்வெட்டுகளில் இவ்வூர் "சயங்கொண்ட சோழ மண்டலத்து மலாடான ஜகந்நாத வளநாட்டுக் குறுக்கைக் கூற்றத்துக் திருக்கோவலூர்"[21] என்று குறிப்பிடுகிறது.

## கோவூர்

நற்றிணையில் 393-ஆம் பாடல், குறுந்தொகையில் 65-ஆம் பாடல், புறநானூற்றில் 31,33, 41, 44, 47, 68, 70, 308, 373, 382, 386, 400 ஆகிய பாடல்களைப் பாடிய கோவூர்கிழாரின் மூலம் இவ்வூர் அறியப்படுகிறது.

கோ என்னும் பதத்திற்கு அரசன் என்று பொருள். அரசர்கள் அல்லது இளவரசர்கள் ஆட்சி நடத்திய காரணமாக இவ்வூர் கோவூர் என்று பெயர் பெற்றுள்ளது. காஞ்சிபுரம் மாவட்டம் திருப்பெரும்புதூர் வட்டத்தில் இவ்வூர் உள்ளது.

## செங்கண்மா

'இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் "பெருங்கௌசிகனார் பல்குன்றக் கோட்டத்துச் செங்கண் மாத்து வேள் நன்னன் சேய் நன்னனைப் பாடிய மலைபடுகடாம்" என்ற தொடரால் 'செங்கண்மா' என்னும் ஊர் நன்னனுக்கு உரியது என அறிய முடிகிறது. கொண்கானத்து நன்னன் வேறு. செங்கண்மாவைத் தலைநகராகக் கொண்டு பல்குன்ற நாட்டை ஆண்ட நன்னன் வேறு.[22]

நன்னன் சேய் நன்னனின் தலைநகராகிய இச்செங்கண்மாநகர் தற்போது செங்கம் என வழங்கப்படுகிறது. திருவண்ணாமலை மாவட்டத்தில் ஒரு வட்டத்தின்

தலைநகரமாகச் செங்கம் இன்று விளங்குகிறது. திருவண்ணாமலை மாவட்டத்தில் உள்ள சவ்வாது மலைத்தொடரே நன்னனின் ஆட்சியின் கீழ் இருந்த மலைநாடு. இம்மலையின் தெற்கே செங்கம் அமைந்துள்ளது.

*மலையென மழையென மாமோங்கித்*
*துனிதீர் காதலினினி தமர்ந்து றையும்*
*பனிவார் காவிற்புல் வண்டிமிரும்*
*நனிசேய்த்தன்றவன் பழவிறன் மூதூர்* (மலைபடு. 484-487)

இப்பாடலின் இறுதியில் வருகின்ற மூதூர் என்பது செங்கண்மாவைக் குறிப்பதாகும். தஞ்சைச்சோழர், மதுரைநாயக்கர் என்றாற்போல் செங்கண்மாத்து நன்னன் என்பதில் வரும் 'செங்கண்மா' என்பது நன்னனின் தலைநகரம் எனப்பொருள்படும். 'கண்மாய்' என்பது 'கம்மாய்' என்று மருவி வழங்குவது போலச் 'செங்கண்மா' என்பது 'செங்கம்' என்று காலப்போக்கில் வழங்கலாயிற்று.[23] மேலும் 'செங்கம்மா' என்றும் 'செங்கைமா' என்றும் செங்கம் என்றும் கோயில் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளன.[24] செங்கமா உடையார் திரு இடவத்துறை நாயனார்க்குச் செங்கைமா தென்பிடாகை[25] என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. செங்கம் பகுதியில் ஏராளமான நடுகற்கள் கிடைத்துள்ளன. இவை பல்லவர் காலத்தவை. சங்கக் கல்வெட்டுகளில் சங்க இலக்கியங்கள் கிடைப்பது அரிது. ஆனால் செங்கத்தில் கிடைத்த கல்வெட்டு ஒன்றில் ''மலை படுகடாம்'' என்று சங்க இலக்கிய நூல் பெயராட்சி இடம்பெற்றுள்ளது.[26]

### திருவெஃகா

*காந்தள் அம்சிலம்பில் களிறு படிந்தாங்கு,*
*பாம்பணைப்பள்ளி அமர்ந்தோன் ஆங்கண்*
*வெயில் நுழைபு அறியா, குயில் நுழை பொதும்பர்க்*
*குறுங்காற் காஞ்சி சுற்றிய நெடுங்கொடிப்*
*பாசிலைக் குறுகின் புன்புற வரிப்பூக்*
*கார் அகல் கூவியர் பாகொடு பிடித்த*
*இழைசூழ் வட்டம் பால் கலந்தவைபோல்*

*நிழல் தாழ்வார் மணல் நீர் முகத்து உறைப்பப்*

*புனல்கால் கழீஇய பொழில்தொறும் திரள்கால்*

*சோணிக் கமுகின் சூல் வயிற்றன்ன*

*நீலப்பைங்குடம் தொலைச்சி, நாளும்*

*பெருமகிழ் இருக்கை மரீஇ .......* (பெரும். 372-383)

பெரும்பாணாற்றுப்படையின் 372 முதல் 392 வரையிலான இவ்வடிகள் திருவெ்.காவின் சிறப்புகளைக் குறிப்பிடுவதாக அமைகின்றன. வேகவேது என்ற வடசொல் வேகவணை எனத்தமிழாகி வேகணை ----> வெ்.கனை ----> வெ்.கா என மருவி, காஞ்சிபுரத்தின் அருகில் உள்ள திருவெ்.கா எனும் ஊரைக் குறித்ததென்பர்.[27] 'பாம்பணையாகிய பள்ளியில் துயில் கொண்ட திருமாலின் திருவெ்.கா' என்பது சங்க இலக்கியச் செய்திகளாகும்.[28]

வெ்.கல் என்றால் விருப்பம் என்றும் வெ்.குதல் என்றால் விரும்புதல் என்றும் பொருள் இருப்பதால் "பெருமகிழ் இருக்கையாகிய அவ்விடம் விருப்பம் தருவது, விரும்பி உறைவதற்கேற்ற இடம் என்ற கருத்தில் வெ்.கா எனப் பெயர் பெற்று, திரு என்ற முன் ஒட்டுடன் இணைந்து திருவெ்.கா என நாளடைவில் வழங்கி இருக்கலாம் என்று அறிய முடிகின்றது. காஞ்சிபுரத்திற்குத் தென்கிழக்கில் சுமார் 4 கி.மீ. தொலைவில் திருவெ்.கா அமைந்துள்ளது.

## நல்லூர்

இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் என்ற புலவரின் மூலம் நல்லூர் என்ற ஊர்ப்பெயரினை அறிய முடிகின்றது. இடைக்கழிநாடு என்பது காஞ்சிபுரம் மாவட்டத்தைச் சேர்ந்தது. செய்யூருக்குக் கிழக்கிலும், தென்கிழக்கிலும், தெற்கிலும் கடற்கரையோரத்தில் பரவியுள்ளது. நல்லூர் என்னும் ஊர்ப்பெயர் நன்மை என்ற பண்பையுணர்த்தும் சொல்லை அடிப்படையாகக் கொண்டு பெயர் பெற்றிருக்க வேண்டும். சூழ்ந்துள்ள ஊர்களைவிட நீர்வளம், நிலவளம், மக்கள் மனவளம் போன்றவற்றில் நல்ல ஊர் என்ற குறிப்பில் நல்லூர் எனப்பெயர் பெற்றிருக்கிறது.

நல்லூர் என்னும் சொல்லை முன்ஒட்டாகவும், பின் ஒட்டாகவும் கொண்ட நல்லூர்ப்பெருமணம், கலிகடிந்த சோழநல்லூர், சுந்தரபாண்டிய நல்லூர், வீரபாண்டிய நல்லூர், சோழிங்கநல்லூர் போன்ற பல ஊர்ப்பெயர்கள் தமிழ்நாட்டில் உள்ளன. நத்தத்தனார் பிறந்த நல்லூரில் அவர் நினைவாக உருவச்சிலை ஒன்று 18-06-1958 இல் அன்றைய சென்னை மாநில அமைச்சர் பக்தவத்சலம் தலைமையில் நிறுவப்பெற்றது.

## நீர்ப்பெயற்று

தொண்டை நாட்டில் நீர்ப்பெயற்று பெரிய துறைமுகமாக, பண்டசாலைகள் மற்றும் உயர்ந்த வீடுகளைக் கொண்டிருந்ததைப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது.

*வண்டல் ஆயமொடு உண்துறைத் தலைஇ*
*புனல் ஆடுமகளிர் இட்ட பொலங்குழை*
*இரைத்தேர் மணிச்சிரல் இரை செத்து எறிந்தென,*
*புள் ஆர் பெண்ணைப் புலம்பு மடற் செல்லாது*
*கேள்வி அந்தணர் அருங்கடன் இறுத்த*
*வேள்வித் தூணத்து அசைஇ, யவனர்*
*ஓதிம விளக்கின் உயர் மிசைக்கொண்ட*
*வைகுறு மீனின் பையயத் தோன்றும்*
*நீர்ப்பெயற்று எல்லைப்போகி* (பெரும். 311-319)

நீர்ப்பெயற்று என்பது கடல்நீர் உட்பெய்தலைக் கொண்டதாகிய நிலம் எனப்பொருள்படும். அதாவது உப்பங்கழியையுடைய நிலப்பகுதியாகும். “மாமல்லபுரத்திற்கு இரண்டுகல் தெற்கே அதாவது கடல் நீர் நிலத்துள் நுழைந்து, மாமல்லபுரத்திற்குத் தென் மேற்கில் அரைக்கல் தொலைவுவரை பரவியுள்ளது. மாமல்லபுரத்திற்கு மேற்கில் தொடங்கி வடக்கே மூன்றுகல் தொலைவில் உள்ள சாளுவன்குப்பம் வரையில் மணல் வெளி பரவியுள்ளது. இங்ஙனம் மாமல்லபுரத்திற்கு வடக்கிலும் தெற்கிலும் உள்ள மணல் வெளியை ஊடுருவிக் கொண்டே இன்றைய பக்கிங்ஹாம் கால்வாய் செல்கிறது. இம்மணல் வெளிகள் பண்டைக்காலத்தில் கடல்

நீரைப்பெற்றிருந்தமையால்தான் இன்று மணல்வெளிகளால் உள்ளன. எனவே சங்ககாலத்தில் கடல் நீரைப் பெய்தலையுடைய நிலப்பரப்பாக இப்பகுதி இருந்திருத்தல் வேண்டும் என்பது தெளிவு. ஊரார் இப்பகுதியை இன்று கழிவெளி என்கின்றனர். இத்தகைய பகுதியின் எல்லையில் துறைமுகமும் பட்டினமும் இருந்தன என்று பெரும்பாணன் கூறியுள்ளான். ஆகவே அவன் குறித்தவை பிற்கால மாமல்லபுரம் இருந்த பகுதியேயாகும் என்பர்.[29]

மதுராந்தகம் வட்டத்தின் தென்பகுதியில் 'நீர்ப்பேர்' என்னும் சிற்றூரே நீர்ப்பெயற்றாகலாம் என்றும் கூறுவர்.[30] மேலும், "பாலாற்றின் கிளைநதியான வேகவதியின் கரையில் உள்நாட்டு வணிக மையமாக விளங்கிய காஞ்சிபுரம் பாலாற்றின் முகத்துவாரத்தில் அமைந்திருந்த நீர்ப்பெயற்று துறைமுகத்துடன் கடற்சார் தொடர்பு கொண்டிருந்தது என்பதோடு இத்துறைமுகம் வசவசமுத்திரமாக இருக்கவேண்டும் என ஆர். சம்பகலட்சுமியும், காஞ்சிபுரத்துடன் தொடர்பு கொண்டிருந்த நீர்ப்பெயற்று மாமல்லபுரமாக இருக்க வேண்டும் எனக் கிளாரன்சு மலோனியும் (clarence maloney) கருதுகின்றனர்.[31]

மாமல்லபுரத்தையடுத்த கழிவெளிப்பகுதியே நீர்ப்பெயற்று என்னும் பெயரையுடைய ஊராக இருக்கவேண்டும் என்ற கருத்தே பொருத்தமானதாகும். நீர்ப்பெயற்று என்னும் ஊரின் எல்லையில் துறைமுகமும் அமைந்திருந்தது என்று பெரும்பாணாற்றுப்படை கூறுவதால் இது துறைமுகப்பட்டினமாகவும் கருத இடமளிக்கும் பிற்கால மாமல்லபுரப்பகுதியில் அமைந்த கழிவெளியே நீர்ப்பெயற்று என்னும் ஊர் இருந்த இடம் என்று கொள்வதே பொருத்தமானதாகும்.

நீர்ப்பெயற்று என்பதை 'நீர்ப்பெயர்த்து' எனத்தவறாகக் கொண்டு நீர்ப்பெயரையுடைய நகரம்[32] என்று கூறுவது பொருத்தமற்றதாகும்.

**மாவிலங்கை**

"கடற்கரை ஓரமாக நீரும் நிலமுமாக அமைந்த இடம் இலங்கை என்று பெயர் பெறும். ஆறுகள் கடலில் கலக்கிற இடத்தில் கிளைகளாகப் பிரிந்து இடையிடையே நீரும் திடலுமாக அமைவது உண்டு. இவ்வாறு நீரும் திடலுமாக அமைந்த இடத்தை லங்கா (இலங்கை) என்று ஆந்திர நாட்டவர் இன்றும் வழங்குவர். நீரும் திடலுமாக

அமைந்திருந்த பட்டினநாடு மாவிலங்கை என்று பெயர் பெற்றிருந்தது (லங்கா அல்லது இலங்கை என்பது பழைய திராவிடமொழிச் சொல் எனத் தோன்றுகிறது) இப்போதும் ஓய்மா நாட்டு மாவிலங்கைப் பகுதியில் ஏரிகளும் ஓடைகளும் உப்பளங்களும் காணப்படுகின்றன''.[33]

ஏரிகளும் ஓடைகளும் ஆகிய நீர் நிலைகளை உடைய இடத்தில் அமைந்த ஊர்ப்பகுதி என்ற கருத்தில் இலங்கை எனப்பெயர்பெற்று 'மா' என்ற முன் ஒட்டுடன் மாவிலங்கை என ஆகியிருக்கிறது. ''இது பழம் பெருமையினையுடைய இலங்கையினது பெயரைப்பெற்றது. மிக்க பெருமையுடையது. நறிய பூக்களை உடைய சுரபுன்னையையும் அகிலையும் சந்தனத்தையும் குளிக்கும் துறையிலே பெற்ற பெரிய நீர் நிலையையுடையுது. ஆவியர் பெருமக்கள் மன்னராயிருந்து ஆண்டு வந்தனர். அவருட் கொடையிற் சிறந்தவன் நல்லியக்கோடன்''[34] என்று இலக்கியம் கூறுகிறது.

*ஓரை ஆயத்து ஒண்தொடி மகளிர்*
*கேழல் உழுத இருஞ்சேறு கிளைப்பின்*
*யாமை ஈன்ற புலவுநாறு முட்டையைத்*
*தேன்நாறு ஆம்பல் கிழங்கொண்டு பெறூஉம்*
*இருமென ஒலிக்கும் புனல் அம்புதவின்*
*பெருமாவிலங்கைத் தலைவன், சீறியாழ்*
*இல்லோர் சொல்மலை நல்லியக்கோடன்....* (புறம். 176 : 1-7)

*நறுவீரநாகமும் அகிலும் ஆரமும்*
*துறை ஆடு மகளிர்க்குத் தோட்புனை ஆகிய*
*பொருபுனல் தரூஉம் போக்கு அருமரபின்*
*தொன் மாவிலங்கை .....* (சிறுபாண். 117-120)

*நெல்அரி தொழுவர் கூர்வாள் மழுங்கின்*
*பின்னை மரத்தோடு அரிய, கல்செத்து*
*அள்ளல் யாமைக்கூன் புறத்து உறிஞ்சும்*
*நெல் அமல் புரவின் இலங்கைக்கிழவோன்*
*வில்லியாதன் கிணையேம்! பெரும!* (புறம். 379 : 3-7)

''திண்டிவனத்திற்கு வடக்கில் ஏறத்தாழ ஒரு கல் தொலைவில் தெள்ளாறு செல்லும் வழியில் மேல்மாவிலங்கை என்னும் சிற்றூர் உள்ளது. இதற்குக் கிழக்கில் மூன்று பர்லாங்கு தொலைவில் கீழ்மாவிலங்கை என்னும் சிற்றூர் உள்ளது. மேல் மாவிலங்கை என்பது தெருவையுடைய சிற்றூர். கீழ்மாவிலங்கை என்பது ஆறு தெருக்களையுடைய சிற்றூர்.[35] இந்த இரு சிற்றூர்களும் சேர்ந்ததே சங்க இலக்கியத்தில் சுட்டப்பெறும் மாவிலங்கை என்னும் ஊர். இது ஓய்மானாட்டு உள்நாட்டு ஊர். கிடங்கிலைக் கோட்டையாகக் கொண்டு இந்த மாவிலங்கை நல்லியக்கோடனின் தலைநகராக அமைந்திருந்தது.

ஓய்மான் நல்லியக்கோடனைப் போலவே, ஓய்மான் நல்லியாதன் (புறம். 376) என்பவனும் ஓய்மான் வில்லியாதன் (புறம். 379) என்பவனும் மாவிலங்கை நகரைக் கொண்ட ஓய்மாநாட்டை அரசாண்டுள்ளனர்.

முள்ளூர்

*ஆரியர் துவன்றிய பேர் இசை முள்ளூர்* (நற். 170-6)

*மாவிறு முள்ளூர் மன்னன் மாஊர்ந்து* (நற். 291 : 7)

*முள்ளூர்க் கானம் நாற வந்து*
*நள்ளென் கங்குல் நம்மோரன்னன்* (குறுந். 312 : 3-4)

*முள்ளூர் மன்னன் கழல் தொடிக்காரி*
*செல்லா நல்லிசை நிறுத்த வல்வில்* (அகம். 206 : 12-13)

*பயன்கெழு முள்ளூர் மீமிசைப்*
*பட்டமாரி உறையினும் பலவே* (புறம். 123 : 5-6)

*துயில் மடிந்தன்ன தூங்கிருள் இறும்பின்*
*பறையிசை அருவி முள்ளூர் பொருந* (புறம். 126 : 7-8)

*எள்ளறு சிறப்பின் முள்ளூர் மீமிசை*
*அருவழி இருந்த பெருவிறல் வளவன்* (புறம். 174 : 13-14)

போன்ற சங்க இலக்கியப் பாடல்களிலிருந்து அறியப்பெறும் ஊர் முள்ளூராகும். முள்ளூர், மலையமான் திருமுடிக்காரிக்கு உடையதாய் இருந்திருக்கிறது. இவ்வூரில் ஆரியருக்கும் மலையனுக்கும் போர் நடந்து, அப்போரில் ஆரியர் படை தோற்று ஓடியது[36]. விழுப்புரம் மாவட்டம் திருக்கோயிலூர் வட்டத்தில் இன்று முள்ளூர் உள்ளது.

**வல்லம்**

சங்க இலக்கியத்தில் இரண்டு இடங்களில் வல்லம் எனும் ஊர் சுட்டப்படுகிறது. இக்காலத் தமிழகத்தில் வல்லம் எனும் ஊர் சுட்டப்படுகிறது. இக்காலத் தமிழகத்தில் வல்லம் எனும் பெயரில் பல ஊர்கள் உள்ளன. அங்ஙனமாகில் சங்க இலக்கியத்தில் சுட்டப்படும் வல்லம் யாது என்பதே இவ்வாய்வின் போக்காக அமைகிறது.

*மாரி யம்பின் மழைத்தோற் சோழர்*
*வில்லீண்டு குறும்பின் வல்லத்துப் புறமிளை*
*ஆரியர் படையின் உடைகவென்*
*நேரிசை முன்கை வீங்கிய வளையே* (அகம். 336:20-23)

வெற்றி பொருந்திய வேலினையும் மழைபோன்ற அம்பினையும் மேகம் போன்ற தோற்கிடுகினையுமுடைய சோழரது விற்படை நெருங்கிய அரணையுடைய வல்லத்துப் புறத்தேயுள்ள காவற் காட்டின்கண் வந்தடைந்த ஆரியரது படைபோல எனது நேரிய சந்தினையுடைய முன்கையில் தற்காலத்து வல்லமே என உரையாசிரியர்கள் குறிப்பிடுவர். இக்கருத்தினில் சிறிது மாறுகொள்ள வேண்டியுள்ளது.

வல்லத்துப் புறமிளை எனுமிடத்தில் வேங்கடசாமி நாட்டார் வல்லத்துக் குறுமனை எனும் பாடவேறுபாட்டைக் காட்டுவர். அதுகொண்டு வில்லீண்டு குறும்பின் வல்லத்துக்குறமினை எனக் கொண்டால் குறும்பு எனும் சொல்லுக்கு அரண் எனும் பொருளுண்டு. அரணாவது யாதெனில் மலை, காடு, மதில், நீர் என்பனவாம். இந்நால்வகை அரண்களுள் குறும்பு என்பது சிறப்பாக மலையினையே குறிப்பதாகும். மேலும் குறுமிளை எனும் சொல்லும் மலைக்காட்டையே குறிக்கப் பயன்பட்டதெனலாம். இடைவெளி குறுகிய மரங்கள் நிறைந்த அடர்ந்த காட்டைக் குறிக்கவே குறுமிளை எனும் சொல் பயன்பட்டதெனலாம். ஏனெனில் வயது குறைந்த இளம் பெண்ணைக்

குறிக்க *அசைஇஉள் ஒழிந்த வசைதீர் குறுமகட்கடு* (நற். 206) எனும் அடிகளில் குறுமகள் எனும் சொல் உருவத்தில் சிறிய மகளைக் குறிக்காமல் வயதில் இளம் பெண்ணைக் குறிக்கின்றமை போலக் குறுமிளை என்பதுவும் அடர்வுமிகுந்து மலைக்காட்டைக் குறிக்குமெனலாம். இவ்வாறான மலையும் மலைசூழ்ந்த காடும் தஞ்சையை அடுத்த வல்லம் பகுதியில் இல்லையெனலாம். மேலும் வல்லத்தை ஆரியப்படைகள் அடைந்தபோது சோழர்களது படை தாக்கி அழித்ததாக உரையில் கூறப்பட்டுள்ளமையை ஏற்கவியலாது. ஏனெனில் ஆரியப்படையணிகளுக்கு வளையல் உவமை காட்டப்பட்டுள்ளமையால் வல்லத்தை ஆரியர் வளைத்து முற்றுகையிட்டிருந்தனர் என்பதே பொருந்தும். ஆரியப் படைகளின் முற்றுகை சோழர்களால் உடைத்துச் சிதைக்கப்பட்டமையை மேற்கண்ட பாடலடி உவமையில் விளங்கலாம்.

தஞ்சையை அடுத்த வல்லம் பகுதி சரளை மண்ணினையுடையது. இம்மண்ணில் நெல்விளையாது. ஏனெனில் தண்ணீரைத் தேக்குதலுக்கு இம்மண் ஏற்புடையதல்ல. மேலும், காவிரியாறும் வல்லத்திற்கு 15 கீ.மீ.க்கு அப்பாலேயே ஓடுகின்றது. ஆற்றிலிருந்து இப்பகுதி மேம்பட்டிருப்பதால் இப்பகுதிக்கு நீரினை ஏற்றவும் இயலாது. தஞ்சை வல்லம் இவ்வாறிருக்க, வல்லம் எனும் ஊரிலே நீண்ட கதிர் உடைய நெல் விளைந்ததாகப் பரணர் குறிப்பிடுகிறார்.

*நற்றேர்க்*
*கடும்பகட் டியானைச் சோழர் மருகன்*
*நெடுங்கதிர் நெல்லின் வல்லம் கிழவோன்*
*நல்லடி யுள்ளா னாகவும் ஒன்னார்*
*கதுவ முயறலும் முயல்ப அதா அன்று* (அகம். 356 / 12-15)

எனவே நெல்விளையும் மண்வளமுள்ள வல்லம் தஞ்சை வல்லமாக இருக்க வாய்ப்பில்லை.

சோழர் வில்லீண்டு குறும்பின் வல்லத்து (அகம். 336) எனும் பாடலில் சோழர்களின் வல்லம் என்றே சுட்டப்பட்டுள்ளது. சோழநாட்டில் உள்ள ஊராக வல்லம் சுட்டப்படுகிறது. மருகன் எனும் சொல் ஒரு குடியிலிருந்து தன்குடிக்கு மருவி வந்த

மருமகனைக் குறிப்பதாகும். ஒரே மரபில் தொடர்ந்து வந்தவனைக் குறிப்பதாயும் அமையும். அங்ஙனமாயின் வல்லம் எனும் ஊர் சோழர்களின் மணத்தொடர்போ, மரபுத்தொடர்போ, கொண்ட சோழநாட்டில் அல்லாதோரையும் குறிக்கு மெனலாம். 'வல்லம் கிழவோன்' என்றமையின் வல்லத்து வேளிர் தலைவனைக் குறிப்பதனையும் அவன் சோழர்குடியில் மணத் தொடர்பு கொண்டிருந்தமையையும் கொள்ளலாம்.

இன்றைய தமிழகத்தின் மையப்பகுதியிலும் பண்டைத் தமிழகத்தின் தென்கிழக்குப்பகுதியிலும் உள்ள வல்லம் (தஞ்சை) தமிழகத்தின் வட எல்லையில் இருந்து கனத்தொலைவில் உள்ளது. வடக்கில் கொங்குப் பகுதிகளையும் தொண்டை மண்டலப் பகுதிகளையும் வெற்றி பெறாமல் சோழநாட்டுப் பகுதிகளைக் கைப்பற்றுதல் என்பது வடவருக்கு எளிதான செயலன்று. பிற்காலத்தில் தொண்டை நாட்டில் பல்லவர்களை ஒடுக்கிய பின்தான் சாளுக்கியர்களால் காவிரிக்கரைவரை வரயியன்றது. சங்ககாலத் தமிழக எல்லையில் ஒரு பெரும் வலிமைமிகு படையிருந்த படியாலேயே மௌரியர் முதலாய வடவர்களால் தமிழகம் கைக்கொள்ளப்படவில்லை எனலாம். தமிழகத்தின் வடவெல்லையில் ஒரு பெரும் கூட்டுப்படை இருந்தமையைக் கலிங்க மன்னன் காரவேலனின் ஆதிகும்பா கல்வெட்டுகளின் வழியறியலாம். தமிழகத்தின் வட எல்லையில் பல குறுநில அரசுகள் அமைந்திருந்தன.

*நன்னன் ஏற்றை நறும்பூண் அத்தி*
*துன்னரும் கடுந்திறற் கங்கன் கட்டி* (அகம். 44 / 9-8)

மேற்கண்ட நன்னன் ஏற்றை, அத்தி, கங்கர், கட்டி முதலாயோர் அல்லாமல் பங்களர், அதியர், வாணர், புல்லி முதலாய மரபினரும் மேலைக்கடல் தொட்டுக் கீழைக்கடல் வரையிலான தமிழகயெல்லைப் பகுதியில் காவல் அரண்கள் போல் அரசு ஏற்படுத்திக் கொண்டிருந்தனர். இவ்வரசுகளின் அமைவிடமும் தமிழகத்திற்குப் பெரிதும் பாதுகாப்பை வழங்கிய து எனலாம். கட்டிநாடு காவேரிபுரம் கணவாயைப் பாதுகாக்கும் நிலையிலும் அதியர் நாடு தோப்பூர் கணவாயைப் பாதுகாக்கும் நிலையிலும் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

மேற்கண்ட காவல் அரண்களைக் கடந்து கருவூரையும், உறையூரையும் வெற்றி கொண்ட பின்பே தஞ்சை வல்லத்தை அடையவியலும், உறையூரைத்

தாக்காமல் வல்லத்தை (தஞ்சை) அடையவியலாது. உறையூரை ஆரியர் தாக்கியமைக்கான அகப்புறச் சான்றுகள் ஏதுமில்லை. மேற்கண்டவற்றால் ஆரியர் (தஞ்சை) வல்லத்தைத் தாக்கவில்லை யாகில் தமிழகத்தின் எவ்வல்லத்தைத் தாக்கினர் என்னும் வினா எழும் போது ஆரியர்களது தமிழகப்படையெடுப்புக் குறித்து மற்றொரு செய்தியும் சங்க இலக்கியத்தில் காணப்படுகிறது.

*ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்ப்*

*பலருடன் கழித்த வொள்வாள் மலையன்*

*தொருவேற் கோடி யாங்குநம்*

*பண்மைய தெவனோவிய ணன்மை தலைப்படினே* (நற். 170 / 6-9)

மேற்கண்ட நற்றிணைப் பாடலில் மலையமான்களின் முள்ளூர்ப் பகுதியை ஆரியர்கள் வளைத்துத் தாக்கியதாகவும் அத்தாக்குதலைப் பலருடன் சேர்ந்து மலையமான் வெற்றி கொண்டதாகவும் காணப்படுகின்றன.

திருமுடிக்காரியின் இம்முள்ளூர்நாடு தென்னார்க்காடு மாவட்டத்தைச் (இன்றைய விழுப்புரம்) சேர்ந்ததாகும். இப்போரில் தமிழ்மன்னர்கள் பலரும் ஒருங்கிணைந்து வெற்றி பெற்றமையைக் காணலாம்.

திருமுடிக்காரியின் நாட்டை அடைவதற்கு முன் ஆரியர் பாணர்களின் நாட்டைக் கடந்தாக வேண்டும் அது மலையமான் நாட்டிற்கு வடபால் உள்ளது.

*வடாஅது*

*நல்வேற் பாணன் நன்னாட் டுள்ளதை* (அகம். 325 / 16)

இப்பாணர் எனும் வாணாதிராயர்களின் தலைநகரம் இன்று திருவலம் என அழைக்கப்படும் பழைய வல்லமாகும். எனவே முள்ளூர்ப் படையெடுப்பும் வல்லம் படையெடுப்பும் ஒரே காலத்தில் நிகழ்ந்ததாகக் கருதலாம். வாணர்களுடன் சோழர்கள் மணவுறவும் அரசியல் உறவும் கொண்டிருந்தனர். பாணன் ஆரியப் பொருநனுடன் மற்போர் செய்தமையும் (அகம். 386) பாடலடிகளில் அறியலாம்.

மேலும் சங்க இலக்கியத்தில் சொல்லப்பட்டவாறு இப்பாணர்களின் தலைநகராகிய வல்லம் மலைகள் சூழ அமைந்து உள்ளது. பாலாற்றின்

துணையாறான மியாற்றின் மேற்குக் கரையில் இவ்வல்லம் அமைந்து இன்றும் நல்ல நெல் விளையும் வண்டல்மண் பகுதியாக விளங்குவதும் தமிழகத்தின் எல்லையில் உள்ள நாடாக இருப்பதும் கருத்திற்கு வலுசேர்ப்பதாக அமைகிறது.

இவ்வல்லம் குறித்த பிற்காலச் செய்திகளைச் சதாசிவப் பண்டாரத்தார் பின்வருமாறு குறிப்பிடுகிறார். வாணர் என்பார் பாலாற்றுக்கு வடக்கே சித்தூர் மாவட்டம் வரையில் அமைந்திருந்த நிலப்பரப்பாகிய வாணகப்பாடி நாட்டைப் பண்டைக் காலத்தில் ஆட்சிபுரிந்த ஓர் அரசர் மரபினர் ஆவர். அன்னோர் வல்லவம் வாணபுரம், வல்லம் வாணபுரம் என்ற நகரங்களைத் தம் தலைநகரங்களாகக் கொண்டு இரண்டு நூற்றாண்டுகள் அப்பகுதியில் ஆட்சிபுரிந்தனர். அவர்கள் மாபலியின் வழியில் வந்தவர்கள் என்று தம்மைக்கூறிக் கொள்வதைப் பலகல்வெட்டுகளில் காணலாம். அவர்களது நாடு பெருமாபாணப்பாடி என்றும் வடுகவழிமேற்கு என்றும் முற் காலத்தில் வழங்கப்பட்டது. தொண்டை மண்டலம் பல்லவர் ஆட்சிக்குட்பட்டிருந்த காலத்தில் வாணர்குல வேந்தர் அவர்கட்குத் திரை செலுத்திக் கொண்டு குறுநில மன்னராக இருந்துவந்தனர்.

மேற்கண்ட செய்திகளை யொட்டிப் பாணர்கள் சங்ககாலம் முதற்கொண்டு சோழர்காலம் முடியக் கட்டி மன்னர்களைப் போன்று ஆண்ட மரபினர் என அறியலாம். அவர்களது தலைநகரான வல்லம் வட ஆர்க்காடு மாவட்டத்தில் (இன்றைய வேலூர்) குடியாத்தம் வட்டத்திலுள்ள ஓர் ஊர். இவ்வூர் தீக்காலி வல்லம் என்று பழைய கல்வெட்டுகளில் காணப்படுகிறது. பாடல் பெற்ற தொண்டை நாட்டுத் தலங்களுள் இவ்வூரும் ஒன்று. எனவே திரு அடைகொடுத்துத் திருவல்லம் எனவழங்கி இன்று திருவலம் என அழைக்கப்படுகிறது. இவ்வூரிலுள்ள சிவனுக்குத் திருத்தீக்காலீஸ்வரர் என்று பெயர்.

இப்பாணர் நாடு பிற்காலத்தில் தொண்டை நாட்டின் படுவூர் கோட்டப்பிரிவில் உள்ளது. இதில் உள்ள மற்றைய பிரிவுகளுள் பங்களநாடு என்பதும் ஒன்று. இது சித்தூர் மாவட்டப்பகுதியில் தமிழகயெல்லையில் பாணர் நாட்டின் வடபால் அமைந்திருந்தது. இது சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப்படும் பங்களரின் நாடாகும். இதன்வழி ஒரு பழைமையான ஆட்சியின் தொடர்ச்சியை அறிய இயலுகிறது. இவ்வரசுகள் தமிழகத்தின் வடபகுதியில் இருந்தமையால் சங்ககாலந்தொட்டே வடபுலத் தொடர்புகள் மிகுந்திருந்தன எனலாம்.

தமிழகத்தின் மேல் படையெடுத்து வந்த ஆரியர்கள் பாணர் நாட்டைத் தாக்கி வல்லத்தை முற்றுகையிட்டுவிட்டுப் பின் வல்லத்திற்குத் தெற்கேயுள்ள மலையமான்களின் முள்ளூர்ப் பகுதியையும் தாக்கியிருக்க வேண்டும். 'பேரிசை முள்ளூர்ப் பலருடன் கழித்த' என்றமையால் ஆரியருக்கு எதிரான போரில் பல மன்னர்கள் ஈடுபட்டதாகக் கருதலாம். இதில் வல்லத்துப் பகுதியில் ஆரியரது முற்றுகையைச் சோழர்களது படை தாக்கி உடைத்ததாகக் கொள்ளலாம். எனவே தமிழகத்தின் மீதான ஆரியப்படையெடுப்பை வல்லப்படை யெடுப்பு முள்ளூர்ப்படை யெடுப்பு என இருவேறு காலக் கட்டத்தில் நடைபெற்ற இரு வேறு நிகழ்வாகக் கொள்ளாமல் ஒரே காலத்தில் நிகழ்ந்த ஒரே படையெடுப்பாகக் கொள்ள இடனாகிறது. வல்லம் குறித்தும் முள்ளூர்ப் படையெடுப்புக் குறித்துமான பாடல்களைப் பாடிய கபிலர், பரணர், பாவைக் கொட்டிலார் முதலாயோரில் கபிலரும் பரணரும் சமகாலத்தவர் என்பது தெளிவாதல் இந்நிகழ்வின் சமகால வாய்ப்பிற்கு வலுசேர்க்கும்.

**வீரை**

பாண்டிச்சேரியிலிருந்து தெற்கில் 4 கி.மீ. தொலைவில் அரியாங்குப்பம் ஆறு கிழக்குக் கடலில் கலக்குமிடத்தில் அரிக்கமேடு அமைந்துள்ளது. இதன் தற்போதைய பெயர் வீராம்பட்டினம் என்பதாகும். இத்துறைமுகத்தை ''வீரை வேண்மான் வெளியன் தித்தன்'' (நற். 58-5) என நற்றிணை சுட்டும் சங்ககால வேளிருடன் தொடர்புபடுத்தலாம். வீரை முன்துறை மேற்சுட்டிய வேளிருக்குச் சொந்தமானது என்றும் அங்கு ஏராளமாக உப்பு உற்பத்தி செய்யும் உப்பளங்கள் இருந்தன எனவும் அகநானூறு குறிப்பிடுகின்றது.

*அடு போர் வேளிர் வீரை முன்துறை*
*நெடுவேள் உப்பின் நிரம்பாக் குப்பை*
*பெரும்பெயற்கு உருகியா அங்கு* (அகம். 206 : 13-15)

இவ்வாறு அகநானூறு குறிப்பிடுவதிலிருந்து வீரை ஒரு துறைமுகமாகவும் கடற்கரையில் அமைந்திருந்த ஊராகவும் இருந்தமை தெளிவாகும். வீரை என்ற பெயரை வீராம்பட்டினமாகக் கொண்டால் சங்ககால வீரையே அரிக்கமேடு என்பதில் ஐயமில்லை.

*இத்துறைமுகம் குறித்து மற்றொரு இடத்தில் அகநானூறு,*

*சினம்கெழு தானை, தித்தன் வெளியன்,*

*இரங்குநீர்ப் பரப்பின் கானல் அம்பெருந்துறை* (அகம். 152 : 5-6)

எனக் குறிப்பிடுவதிலிருந்து இது பெரிய துறைமுகமாக இருந்தது எனவும் அத்துறைமுகம் தித்தன் வெளியன் என்பவனுக்கு உரியது எனவும் அறியமுடிகிறது. மேற்சுட்டிய வெளியன் தித்தனும், தித்தன் வெளியனும் தந்தை மகனாகக் கருதப்படுவதோடு சோழ மரபினராகவும் கருதப்படுவது நோக்கத்தக்கது. அகநானூறு இத்துறைமுகத்தை வீரை முன்துறை (அகம். 206-13) எனக் குறிப்பிடுகிறது. இதில் முன்துறை என்பது ஆறு கடலுடன் கலக்கும் முகத்துவராத்தில் அமைந்துள்ள துறைமுகத்தைக் குறிப்பதாகும். கொற்கைத் துறைமுகம் பற்றிச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடும்போது முன்துறை என்றே குறிப்பிடப்படுவதையும் இங்கு நோக்குதல் தகும். முன்துறை என்பதற்குப் பழைய துறைமுகம் எனச் சி.க. சிற்றம்பலல் பொருள்கொள்வது சரியானதன்று.[37]

வீரை பாண்டிச்சேரி - கடலூர் கடற்கரைப்பகுதியில் இருந்திருக்கக்கூடும். காரணம், சிறுபாணாற்றுப்படை (122) இப்பகுதியை ஓய் எனப்படும் வேளிரின் கீழ் இருந்ததைக் குறிப்பிடுகிறது. இதனால் இப்பகுதிப் பின்னர் ஒய்மாநாடு என அழைக்கப்பட்டது. இந்த ஓய்மா நாட்டின் ஓய் வேளிரின் சிறந்த துறைமுகங்களாக மரக்காணம் மற்றும் வீரை அதாவது வீராம்பட்டினம் ஆகியன இருந்திருக்க இவ்வகையில் தற்பொழுது வழங்கப்பட்டு வரும் வீராம்பட்டினம் மேற்சுட்டிய வீரை அல்லு வீரா என்பதிலிருந்து தோன்றியிருக்க வேண்டும் என ஐராவதம் மகாதேவன் கருதுகிறார்.[38] மேலும், சங்க இலக்கியம் குறிப்பிடும் வீரை வேண்மான் தித்தன் வெளியன் என்பதில் வீரை என்பது அவ்வேளிரின் தலைநகரைக் குறிப்பதாகக் கொள்ள வேண்டும் எனவும் அவ்வகையில் அரிக்கமேடு அக்காலத்தில் தலைநகராகவும் விளங்கியது என்றும் குறிப்பிட்டுள்ளார். இப்பெயர் விளக்கத்தையே பாண்டிச்சேரி வட்டார வரலாற்றாய்வாளர் பி.எல்.சாமி[39] போன்றவர்களும் கொண்டுள்ளனர். மேலும், பொதுகே என்பதையும் பொதிகை என்ற சொல்லோடு தொடர்புபடுத்திக்காட்டிப் பொதிகை என்னும் பெயரே கிரேக்கர்களால் பொதுகே என

உச்சரிக்கப்பட்டிருக்க வேண்டும் என்றும் மகாதேவன் கருதுகிறார். இக்கூற்று முற்றிலுமாக ஏற்றுக்கொள்ளக் கூடியதாக இல்லாமல் மேலும் ஆராயப்பட வேண்டியுள்ளது.

### வேலூர்

*திறல்வேல் நுழியிற் பூத்தகேணி*

*விறல்வேல் வென்றி வேலூரெய்தின்* (சிறுபாண்.172-173)

என்று சிறுபாணாற்றுப்படையில் குறிக்கப்பெறும் வேலூர் என்ற இவ்வூர் விழுப்புரம் மாவட்டம் திண்டிவனம் வட்டத்தில் கிளியனூருக்கு அருகில் உள்ளது. ஓய்மாநாட்டு வேலூர் என்று குறிக்கப்பெற்ற இவ்வூர் இப்பொழுது உப்பு வேலூர் என வழங்கப்பெறுகிறது.

இந்த வேலூரை, வடஆர்க்காடு மாவட்டத்தில் (தற்போது வேலூர் மாவட்டம்), காட்பாடி ரயில் நிலையத்துக்கு அருகில் உள்ள வேலூர் என்று இலக்கண விளக்கப்பரம்பரை சோமசுந்தர தேசிகர் அவர்கள் கருதுகிறார்.[40] இது தவறு. தேசிகர் கூறும் வேலூர், வடஆர்க்காடு மாவட்டத்தில் வேறோர் இடத்தில் இருக்கிறது. விழுப்புரம் மாவட்டத்தில் உள்ள நத்தத்தனார் கூறும் வேலூர் அக்காலத்தில் சிறப்புற்றிருந்து, இப்போது குக்கிராமமாக இருக்கிறது. இந்த வேலூரின் தலைவன் ‘ஓய்மா நாட்டு வேலூருடையான்’ என்று ஒரு கல்வெட்டில்[41] கூறப்படுகின்றான்.

### தொண்டைநாட்டுப் புலவர்கள் (9)

1. இளந்திரையன் -நற். 94, 99, 106, புறம். 185

2. கச்சிப்பேட்டு இளந்தச்சன் - நற். 266

3. கச்சிப்பேட்டுக் காஞ்சிக் கொற்றனார் - குறு. 213, 216

4. கச்சிப்பேட்டுப் பெருந்தச்சனார் - நற். 144, 213

5. கந்தரத்தனார் - அகம். 23, 95, 191 குறு. 155 நற். 116, 146, 238, 306

6. கள்ளில் ஆத்திரையனார் - குறு. 293, புறம். 175, 389

7. கிடங்கில் காவிதிக் கண்ணனர் - நற். 218

8. கிடங்கில் காவிதிப்பெருங் கொற்றன் - நற். 364

9. கிடங்கில் குலபதி நக்கண்ணன் - குறுந். 252

10. கோவூர் கிழார் - நற். 393, புறம். 31, 33, 41, 44, 47, 69, 70, 308, 373, 386, 400, குறுந். 65

11. தாமப்பல் கண்ணனார் - புறம். 43

12. பாரதம் பாடிய பெருந்தேவனார் - கடவுள் வாழ்த்து அகம், ஐங், குறு, நற், புறம்

13. பெருங்கௌசிகனார் - நற். 44, 139

14. வீரை வெளியனார் - புறம். 320

## தமிழக எல்லைக்கு அப்பாற்பட்ட ஊர்கள்

நான்காவது இயலின் ஒரு பகுதியாக, தமிழக எல்லைக்கு அப்பாற்பட்ட ஊர்கள் எனும் இப்பகுதி அமைகிறது. ஒரு நாட்டின் வரலாறு அந்நாட்டை அரசாண்ட அரசர்களுடைய வரலாறு மட்டும் அன்று. அந்நாட்டில் வாழ்ந்த குடிமக்களின் வாழ்க்கை வரலாறும் சேர்ந்ததே முழுமையான வரலாறு ஆகும். சங்க காலத்தில் வாழ்ந்த தமிழர்களின் வாழ்க்கை வரலாற்றில் ஒரு பகுதி வணிகத்தைச் சார்ந்திருந்தது. தமிழ்நாட்டின் மூன்று பக்கங்களிலும் கடல் சூழ்ந்திருந்தபடியால் இயற்கையாகவே கடற்பயணம் செய்வதிலும் கப்பல் வணிகம் செய்வதிலும் தொன்று தொட்டு ஈடுபட்டிருந்தார்கள். மேலும் சங்க காலத்தில் வாழ்ந்த தமிழர் அன்றாடத் தேவையான அரிசி, பருப்பு, உப்பு, பால், தயிர், மீன், இறைச்சி, அகில், இலவங்கம், ஏலம், மிளகு, இஞ்சி, முதலான பொருட்களைக் காசு கொடுத்து வாங்காமல் பண்டமாற்று செய்து கொண்டார்கள். இதன் காரணமாகத் தமிழர்கள் கடற்கடந்து வணிகம் செய்தும் வேற்று நாட்டார்கள் தமிழகம் வந்து வணிகம் செய்வதற்கும் தமிழகக் கடற்கரைத்துறை முகங்கள் வணிகச் சந்தைகளாக மாறின. இதன் காரணமான வேற்று நாட்டவர்களான அரேபியர்கள், யவனர்கள் (கிரேக்கர், ரோமர்), சீனர்கள் எனப் பல்வேறு நாட்டைச் சார்ந்தவர்கள் வணிகம் செய்ததன் காரணமாக அவர்களின் பதிவு சங்க இலக்கியத்தில் முடிகிறது.

இந்தியாவில் 1956-இல் மொழிவாரி மாநிலங்கள் பிரிக்கப்படுவதற்கு முன் தமிழ்நாட்டின் எல்லை ஆந்திராவில் சித்தூர் மாவட்டம் வரையிலும், கேரளாவில் திருவனந்தபுரம் வரையிலும் கர்நாடகாவில் வடகர்நாடகம், தென்கர்நாடகம் என மாநிலத்தில் பாதி ஆட்சிப்பகுதி தமிழ்நாட்டோடு இணைந்திருந்தது. இன்று இவை தனித்தனி மாநிலங்களாக உள்ளன. எனவே இத்தகைய எல்லைகளில் சங்கப் பாடல்களில் காணலாகும். ஊர்ப்பெயர்களையும், மேற்குறிப்பிட்ட வேற்றுநாட்டு ஊர்ப்பெயர்களையும் அடையாளங்கண்டு விளக்கம் காணும் முறையில் இப்பகுதி அமைகின்றது.

**எருமையூர்**

எருமையூரையும் அதனை யரசாண்ட எருமையூரனையும் சங்க இலக்கியச் செய்யுள்கள் கூறுகின்றன.

*போர்வல் யானைப் பொலம்பூண் எழினி*
*நார்அரி நறவின் எருமையூரன்* (அகம். 36:16-17)

என்றும்,

*நேரா வன்தோள் வடுகர் பெருமகன்*
*பேர் இசை எருமை நல்நாட்டு உள்ளதை* (மேலது. 253:18-19)

என்றும் குறிப்பிடுவதைக் காண முடிகின்றது. இது கொங்கு நாட்டின் வடவெல்லையில் இருந்தது. எருமையூரன் குடநாட்டையும் (குடகுநாடு) அரசாண்டான் என்பதை,

*நுண்பூண் எருமைகுட நாட்டன்ன என்*
*ஆய்நலம் தொலையினும் தொலைக...* (மேலது. 115:5-6)

என்ற பாடலடிகளின் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது. ஒருமை நாட்டில் அயிரி ஆறு பாய்ந்தது என்பதையும் அகநானூறு குறிப்பிடுகின்றது.

*பேர்இசை எருமை நள்நாட்டு உள்ளதை*
*அயிரியாறு இறந்தனர் ஆயினும் மயர்இறந்து* (மேலது. 253:19-20)

என்றும்,

*கான மஞ்ஞைக் கமஞ்சூல் மாப்பெடை*

*அயிர்யாற்று அடைகரை வயிரின் நரலும்* (மேலது. 177:10-11)

என்றும் குறிப்பிடப்படுகின்றது. இந்த அயிரி ஆறு சேரநாட்டில் தோன்றுகிற அயிரி ஆறு (பெரியாறு) அன்று.

தலையாலங்கானம் என்னும் ஊரில் பாண்டியன் நெடுஞ்செழியனுடன் சோழனும் சேரனும் போர் செய்தபோது சோழ அரசர்களுக்குத் துணையாக இருந்த ஐந்து வேள் அரசர்களில் எருமையூரனும் ஒருவன் (அகம். 36:13-20). எருமையூரன் வடுகர் பெருமகன் என்று கூறப்படுகின்றான்.[42] ஹொய்சன அரசர் காலத்திலும் எருமை என்னும் பெயர் இவ்வூருக்கு வழங்கப்பட்டிருந்ததென்பதை அவ்வரசர்களுடைய சாசன எழுத்திலும் காண்கிறோம்.[43]

எருமையூர் என்னும் பெயர் பிற்காலத்திலே மைசூர் என்று வழங்கப்பட்டது. எருமை என்பதற்குச் சமஸ்கிருதச் சொல் மகிஷம் என்பது. எருமை ஊர் மகிஷ ஊர் என்றாகிப் பிறகு மைசூர் என்றாயிற்று. மைசூர் (எருமையூர்) என்னும் இவ்வூரின் பெயர் மிகமிகப் பிற்காலத்தில் கன்னட தேசம் முழுவதுக்கும் பெயராக மைசூர் என்று அமைந்து, தற்போது கர்நாடாக என்று அழைக்கப்படுகிற மாநிலத்தின் ஒரு பகுதியாக உள்ளது.

## ஏழிற்குன்றம்

நன்னன் என்பவன் எழில் குன்றத்திலிருந்து ஆட்சி புரிந்ததாகச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன.

*பொன்படு கொண்கான நன்னன் நல்நாட்டு*

*ஏழிற்குன்றம் பெறினும், பொருள்வயின்*

*யாரோ பிரிகிற்பவரே...* (நற். 391:6-8)

என்றும்,

*எம்மில் அயலது ஏழில் உம்பர்* (குறுந். 138-2)

என்றும்,

*ஏழில் நெடுவரைப் பாழிச் சிலம்பில்*
*களி மயிற் கலாவத்தன்ன தோளே* (அகம். 152: 13-14)

என்றும்,

*நுணங்கு நுண் பனுவற்புலவன் பாடிய*
*இனமழை தவழும் ஏழிற் குன்றத்து* (அகம். 345:6-7)

என்றும்,

*அருங் குறும்பு எறிந்த பெருங்கல் வெறுக்கை*
*சூழாது சுரக்கும் நன்னன் நல்நாட்டு*
*ஏழிற் குன்றத்துக் கவாஅன்...* (அகம். 349:7-9)

என்றும் இது கூறப்பட்டுள்ளது. சங்க காலத்தில் துளுநாட்டைச் சேர்ந்திருந்த இந்த ஏழில்மலை இப்போது கேரள மாநிலத்தில் மலபார் மாவட்டத்துச் சிறைக்கல் வட்டத்தில் சேர்ந்திருக்கிறது. ஆனால், இது முன்பு துளுநாட்டைச் சேர்ந்திருந்தது. பிற்காலத்தில் மலையாளிகள் இதனை 'ஏழிமல' என்று அழைத்தனர். ழகரத்தை உச்சரிக்கத் தெரியாத மேல்நாட்டார் முதலியோர் இதனை 'யய் முல்லை' (yai mullay) என்று கூறினார்கள். சிலர், ஏழில் மலையை எலிமலை என்று வழங்கினார்கள். வடமொழியாளர், எலிமலை என்பதை மூஷிகமலை என்று மொழிபெயர்த்துக் கொண்டு தங்கள் வழக்கம்போல் 'மூஷிக வம்சம்' என்னும் பெயருள்ள நூலை எழுதினார்கள். மூஷிக வம்சத்தில் ஏழில்மலையை யரசாண்ட பிற்கால அரசர்களைப் பற்றியும் அது சம்பந்தமான புராணக்கதைகளையும் எழுதி வைத்தனர்.[44]

பிற்காலத்தில் வாணிகத்துக்காக வந்த போர்ச்சுகீசியர் இந்த மலையை எலிமலை என்றே கூறினார்கள். அவர்கள் 'மவுண்ட்-டி-எலி (monteDEle) என்று கூறினார்கள். அப்பெயர் பிற்காலத்தில் 'டெல்லி' (Delli) என்று குறுகிற்று.[45] ஏழில்மலை, அரபிக்கடலில் 30 கி.மீ. தூரம் வரையில் தெரிந்தது. வாஸ்கோடகாமா

என்னும் போர்ச்சுகீசியர் முதன் முதலாக இந்தியாவுக்கு வந்தபோது அவருக்குக் கடலில் முதன்முதலாகக் காணப்பட்ட இடம் இந்த மலையே. 1498இல், ஏழில்மலையைக் கடலில் இருந்து கண்ட அவர் தன் கப்பலைக் கண்ணனூருக்கு அருகில் செலுத்திக் கரை இறங்கினார்.

### கடம்பின் பெருவாயில்

ஏழிற் குன்றத்தையடுத்து கடம்பின் பெருவாயில் அமைந்திருந்தது. இப்பகுதியில் கடம்பு மரங்கள் மிகுதியாகயிருந்ததனால் இப்பெயர்ப்பெற்றுள்ளது. பதிற்றுப்பத்து நான்காம் பத்தின் பதிகத்தில் இவ்வூர்ப் பெயர் சுட்டப்பட்டுள்ளது. சேரமன்னன் நார்முடிச்சேரல் என்பவன் இவ்வூரில் நன்னனை வென்று, அவன் காவல் மரமாகிய வாகையைத் தடிந்து வெற்றி கொண்டான் என்பது இப்பாட்டில் வரும் செய்தியாகும்.

*பூழிநாட்டைப் படையெடுத்துத் தழீஇ*
*உருள் பூங் கடம்பின் பெருவாயில் நன்னனை*
*நிலைச் செருவின் ஆற்றலை அறுத்து, அவன்*
*பொன்படு வாகை முழுமுதல் தடிந்து* (பதிற்று. நான்காம்பத்து, பதிகம், 6-9)

### குன்றுகுட்பாலி

புறநானூற்றில் 387-ஆவது பாடலைப்பாடிய குன்றுகட்பாலியாதனார் என்ற புலவரின் மூலம் இவ்வூரினை அறியமுடிகின்றது. குன்றின்கட் பாலியாதனார் என்பது இவரது பெயர். நாளடைவில் குன்றுகட்பாலியாதனாரெனச் சுருங்கிப் பின் குண்டுகட் பாலியாதனார் எனத்திரிந்துவிட்டது.[46] குன்றுகட் பாலி என்பது இப்போது பாலிக்குன்று என்ற பெயருடன் கேரளமாநிலத்தில் கோழிக்கோடு (calicut) பகுதியில் உள்ளது.

### சாலியூர்

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் 'நெல்லின் ஊர் கொண்ட உயர் கொற்ற' (மதுரைக். 88) என்று சங்க இலக்கியத்தில் கூறப்பட்டுள்ளான். இதற்குப் பொருள் எழுதிய நச்சினார்க்கினியர் 'நெல்லின்

பெயரைப்' பெற்ற சாலியூரைக் கொண்ட உயர்ந்த வெற்றியையுடையவன் என்று கூறியுள்ளார். மேலும் அவரே 'நெல்லின்' என்பதிலுள்ள 'இன்'னை அசையாக்கி 'நெல்லூர்' என்பாரும் உளர் என்றார்.[47]

நெல்லூர் அல்லது சாலியூர் என்று சங்க இலக்கியத்தில் கூறப்பெற்ற இன்றைய ஆந்திரநாட்டைச் சேர்ந்த நெல்லூர்தான் என்பதில் ஐயமில்லை. ஆந்திரநாட்டு அப்பகுதிவரை அன்றைய தொண்டைமண்டலம் அதாவது தமிழகம் பரவி இருந்தது என்பதை அறியமுடிகின்றது. மேலும், சாலி என்பது ஒருவகை நெல்லின் பெயர் என்பதைச் 'சாலி நெல்லின்' (பொருந. 246) என்ற சங்க இலக்கியத்தொடர் மூலம் உணரமுடிகிறது. ஆகவே 'நெல்லின் ஊர்' என்ற தொடர் சாலியூர் என்ற பெயரையே குறிப்பதாகும்.

### நாவல் (நாவலந்தீவு)

இந்தியாவிற்கு வழங்கும் பழம்பெயர்களில் ஒன்று நாவலந்தீவு. சங்க இலக்கியத்தில் இரண்டு இடங்களில் நாவலந்தீவினை 'நாவல்' என்ற சொல்லினால் குறிக்கப்பட்டுள்ளது.

*நாவலந் தண்பொழில் வடபொழில் ஆயிடைக்*
*குருகொடு பெயர் பெற்ற மால்வரை உடைத்து* (பட். 5:8-9)

என்றும்,

*நாவலந் தண்பொழில் வீவுஇன்று விளங்க*
*நில்லா உலகத்து நிலைமை தூக்கி* (பெரும். 465-466)

என்றும் சங்க காலத்தில் இந்தியப்பெயரை 'நாவலந்தீவு' என்றே குறித்துள்ளதை இப்பாடல்களின் மூலம் அறிய முடிகின்றது. சிலப்பதிகாரமும் 'நாவலந் தண்பொழில் என்று ஒரு நில வரையறையை இரு இடங்களில் சுட்டுகிறது.[48] பெருங்கதையிலும்[49] இத்தொடர் வழக்கு உள்ளது. முப்புறமும் கடலும் வடக்கில் மலையும் சூழ்ந்து இருக்கும் இன்றைய இந்தியப் பரப்பு 'நாவலந் தண்பொழில்' என்று பெயர்பெற்றது.

வடதிசை நோக்கிப் போருக்கெழும் சேரன் செங்குட்டுவன் தென்றமிழ் நன்னாட்டுச் செழுவிற் கயற்புலி பொறித்து ஒரு மடல் வரையச் சொல்லுங்கால்,

*நாவலந் தண்பொழில் நண்ணார் ஒற்றுநம்*

*காவல் வேந்தன் கடைமுகம் பிரியா* (சிலப். காட்சிக். அடி. 173-174)

என்று அழும்பில்வேள் கூறுகிறான். இங்கு வடதிசை மன்னர்கள் அனைவரையும் ஒருங்கு அகப்படுத்திப் பேசுவதால் நாவலந்தீவுதண்பொழில் என்பது இன்றைய இந்தியாவைக் குறிப்பது கண்கூடு. பொ.வே. சோமசுந்தரனாரும் இமயம் முதல் குமரி ஈறாகக் கிடக்கும் பெருநிலப் பரப்பு என்றே பொருள் கூறுகிறார்.[50]

நாவலந்தண்பொழில் என்ற தொடருக்கு மாறாக 'நாவலந்தீவு' என்ற வழக்கினை மணிமேகலையில் காணமுடிகின்றது.

*நாவலொடு பெயரிய மாபெருந் தீவத்து* (மணி. பவத்திரம். அடி. 107)

என்ற பாடலடியில் உள்ள 'தீவு' என்னும் பின்னடை இப்பகுதி நாற்புறமும் கடலால் சூழப்பட்டது என்பதைக் காட்டுகின்றது. அத்துடன் 'சம்புத் தீவினுட் டமிழக மருங்கில்' (மணி. உலக. அறவி. அடி. 62) என்ற மணிமேகலை அடி ஒப்பு நோக்கத்தக்கதாகிறது. இது நாவலந்தீவு என்ற தமிழ்த் தொடருக்கு நேரான சமஸ்கிருதத் தொடர் என்று என். மகாலிங்கம் கூறுகின்றார்.[51]

சம்பு அல்லது நாவலம் என்று அழைக்கப்பட்ட தீவினில் தமிழகம் ஒரு பகுதி என்று மணிமேகலை எடுத்துக்கூறுவதால் முற்காலத்தில் தமிழகம் இன்றிருப்பது போல் தீபகற்பத்தின் ஒரு பகுதியாக இல்லாமல் தீவின் ஒருபகுதியாக இருந்தமை பெறப்படுகிறது. நிலவியல் வல்லுநர் மக்கள் நாகரிகம் முதன்முதலில் தோன்றி வளர்ந்த தென்னிந்தியப் பகுதி ஒரு பெருங்கண்டத்தின் சிறுகூறே என்று கூறுவதை ஆய்வாளர்கள் எடுத்துக்காட்டுகின்றனர்.[52] அப்பெருங்கண்டம் மேற்கில் தென்னாப்பிரிக்காவில் கிழக்குக்கரை வரையிலும் கிழக்கில் ஆஸ்திரேலியா வரையிலும் பரவியிருந்து இடையில் தெற்கு சீனா, பர்மா, அஸ்ஸாம் பகுதிகளை உள்ளடக்கியதாக இருந்தது. வடக்கிலும் வடமேற்கிலும் விந்திய மலைக்கு அப்பால் அஸ்ஸாமில் இருந்து சிந்து நதியின் தென்னெல்லை வரை மத்திய தரைக்கடல்

இருந்தது என்கின்றனர்.[53] பின்னர்ப் பல்வேறு காலக்கட்டங்களில் நிகழ்ந்த ஐந்து கடல்கோள்களுக்குப் பின் இன்றைய தமிழகத்திற்குத் தெற்கில் இருந்த நிலப்பரப்பில் இலங்கை நீங்கலாக எஞ்சிய பகுதி கடலில் அழிய ஆப்ரிக்கா, அரேபியா, ஆஸ்திரேலியா போன்ற நாடுகள் தனித்தனியாகப் பிரிந்துவிட தமிழகத்தின் வடக்கில் இருந்த கடல் வற்றியது. இமயமலை மேலெழுந்தது. இதுவே இன்றைய பாரதம் (இந்தியா) ஆகும்.

மேற்கூறிய நிலவியல் வரலாற்றை நோக்குங்கால் நாவலந்தீவாக இருந்த பாரதத்தின் தென்பகுதியே தீபகற்பமாக மாறியதென்றும் அவ்வாறு மாறுங்கால் இமயம் முதல் குமரிவரை உள்ள நம்நாடு தோன்றியது என்பதும் தெளிவாகிறது. தீபகற்பமாக மாறியதால் 'நாவலந் தண்பொழில்' என்ற பெயர் வழக்கிற்கு வந்தது. எனினும் பண்டைய தீவு நிலையின் நினைவெச்சமாக நாவலந்தீவு என்ற பெயர் மக்களிடையே நிலைபெற்றது. இதனால்தான் 'நாவலந் தண்பொழில்' என்ற தொடருக்கு 'நாவலந் தீவு' என்று பொருள் கூறுகின்றனர்.

## பவத்திரி

பவத்திரி என்ற ஊர்ப்பெயர், சங்க இலக்கியத்தில் அகநானூற்றில் மட்டுமே கூறப்பட்டுள்ளது.

*செல்லா நல்லிசைப் பொலம்பூட் டிரையன்*
*பல்பூங் கானற் பவத்திரியன இவள்* (அகம். 340:7-8)

அகப்பொருள் பற்றிய பாடல்களில் ஊர்ப்பெயர் இடம்பெறும் மரபையொட்டி, தலைவியின் நலம் பாராட்டும் காலை பவத்திரி போன்ற நலமுடையாள் எனக்கூறப்படும் நிலையில் பவத்திரி என்ற ஊர்ப்பெயர் இடம்பெற்றுள்ளது. பவ்வம் - கடல்; தரம்-நிலம் (தரம்சிட்டா - நிலங்களின் விலை அல்லது உத்தேச மதிப்பு; தரம்தீர்வை - நிலவகைக் கேற்ப விதிகப்பட்டதீர்வை) தரி-நன்செய்நிலம். திரம்-நிலம்.

மேற்காணும் சொற்களின் பொருளை ஆராயும்பொழுது கடலையொட்டி அமைந்த பவத்திரி என்னும் ஊர், கடலையொட்டிய நிலப்பகுதியூர் அல்லது கடலையொட்டி நன்செய் நிலங்கள் அமைந்த ஊர் என்ற பொருளில் பவ்வத்தரம்

அல்லது பவ்வத்தரி என்று பெயர் தோன்றி நாளடைவில் பவ்வத்திரி என்று ஆகிப் பவத்திரி எனவோ, அல்லது பவ்வத்திரம் என முதலில் பெயர் பெற்று நாளடைவில் பவ்வத்திரி என்று ஆகி பவத்திரி என நிலைத்ததோ என்ற எண்ணம் தோன்றுகிறது.[54]

ஆந்திர மாநிலம் நெல்லூர் மாவட்டத்துக் கூடுர் வடத்து ரெட்டிப்பாளையமே சங்க காலப் பவத்திரியாகும். திரையர் எனப் பெயர்பெற்ற தொண்டையர்கள் ஆண்ட நாட்டில் பவத்திரி என்பது சிறந்த நகரமாகத் திகழ்ந்துள்ளது. பவத்திரி என்ற ஊர்ப்பெயர் அவ்வூர் உள்ளடக்கியிருந்த ஒரு கோட்டத்தின் பெயராகவும் இருந்திருக்கிறது. சிறந்த நகரமாகத் திகழ்ந்த பவத்திரி இன்று தன் நலம் இழந்து, பெயர் இழந்து வேற்றுப்பெயரில் ஒரு சிற்றூராய் உள்ளது.

*''பவத்திரிக் கோட்டத்துப் பேரூர் நாட்டுப் பண்டரங்கம் உடைய நாயனார்''*
*''கடல் கொண்ட பவ்வத்திரி கோட்டத்துக் காகந்தி நகரில் பண்டரங்கீசுவரம்''*
*''இராஜேந்திர சோழ மண்டலத்துப் பவ்வத்திரி''*

ஆகியவை கல்வெட்டுத் தொடர்கள்.[55] முதல் கல்வெட்டில் கடலுக்கு இரையாகாதிருந்த பவ்வத்திரி கோட்டம், அடுத்த கல்வெட்டுக் காலத்தில் கடலுக்கு இரையானமை தெரிகிறது. எனவே அக்கோட்டம் கடலை அடுத்து இருந்தமை தெளிவு. நெல்லூர் மாவட்டத்துக் கூடுர் வட்டத்தில் கடலுக்கருகில் 'ரெட்டி பாளையம்' என்னும் சிற்றூர் உள்ளது. அதனைச் சேர்ந்து 'பண்டரங்கம்' என்னும் மிகச்சிறிய ஊர் உள்ளது. அங்குள்ள சிவன் கோயில் கல்வெட்டுகளே மேற்கூறப்பட்டவை.

இக்கல்வெட்டுத்தொடர்களை ஆதாரம் காட்டிப் 'பவத்திரி' என்ற சங்க கால ஊர்ப்பெயர் பிற்காலத்தில் 'பவ்வத்திரி' என மாறியிருக்க வேண்டும் என்பர்.[56] 'பவ்வத்திரி' என்றே தோற்றத்தில் பெயர்பெற்ற நகரம் சங்ககாலத்தில் 'பவத்திரி' ஆகி, பிற்காலத்தில் கல்வெட்டில் 'பவ்வத்திரி' எனக் கூறப்பட்டிருக்கிறது. 25.02.1976 ஆம் நாளிட்ட தேசிய தினமணிச்சுடரில் வந்த 'ப்ரளய காவேரி' என்ற கட்டுரையில் பழவேற்காடே 'பவத்திரி' என்னும் காகந்தி என்னும் அழைக்கப்பட்டதாகக் கூறிய செவிவழிச் செய்திகள் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. இவை வரலாறு, இலக்கிய அடிப்படையற்றவையாகும்.[57]

### பாடலி

*வெண் கோட்டி யானை சோணை படியும்*

*பொன்மலி பாடலி பெறீ இயர்* (குறுந். 75:3-4)

*பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்*

*சீர்மிகு பாடலிக் குழிஇக் கங்கை* (அகம். 265:4-5)

போன்ற பாடலடிகளின் மூலம் பாடலி என்ற பாடலிபுரத்தினை அறியமுடிகின்றது. பாடலி, நந்தர் என்னும் சிறப்புமிக்க அரச மரபினருக்குரியது. இந்நகரில் நிதியம் ஓரிடத்தில் குழுமிக்கிடந்து பின்னர்க் கங்கை நீராலே முழுதும் மறைந்து போயிற்று என்பதை மேற்காணும் அகநானூற்றுப் பாடலால் அறியமுடிகின்றது. மகத தேசத்தின் தலைநகர் பாடலிபுரம், கங்கை சோணை நதிகளின் சங்கமத்தில் அமைந்தது. சோணையின் வடரையில் அமைந்தது பாடலி எனச் சங்க இலக்கியப்பாடல்களில் பதிவுச்செய்யப் பட்டுள்ள இவ்வூர் இன்று பாட்னா (பீகார் தலைநகர்) என்று அழைக்கப்படுகிறது.

### வடமோதம்

அகநானூற்றில் 317-ஆம் பாடலும் புறநானூற்றில் 260-ஆம்பாடலும் பாடிய வடமோதங்கிழார் என்ற புலவரின் மூலம் வடமோதம் என்ற ஊர்ப்பெயரினை அறியமுடிகின்றது. ஆந்திர மாநிலம் சித்தூர் மாவட்டத்தில் சீகாளத்தி வட்டத்தில் இன்று இவ்வூர் மாதம் என மருவியுள்ளது.

### வாரணவாசி

வாரணவாசிப் பதம்பெயர்த்தல், ஏதில (கலி. 60-13) என்ற கலித்தொகைப் பாடலின் மூலம் இவ்வூரினை அறிய முடிகின்றது. இன்று உத்திரப்பிரதேச மாநிலத்தில் இவ்வூர் வாரணாசி என்று வழங்கப்பெறுகிறது.

### வேங்கடம்

*வடவேங்கடம் தென்குமரி*

*ஆயிடைத்*

*தமிழ் கூறும் நல்லுலகம்* (தொல். எழுத்து. சிறப்புப்பாயிரம், 1-3)

*வேங்கடம் பயந்தவெண் கோட்டு யானை* (அகம். 27-7)

*மழபுலம் வணக்கிய மாவண் புல்லி*
*விழவுடை விழுச்சீர் வேங்கடம் பெறினும்* (அகம். 61:12-13)

*வியன்தலை நல்நாட்டு வேங்கடம் கழியினும்* (அகம். 83-10)

*முற்றா மூங்கில் முளை தருபு ஊட்டும்*
*வென்வேல் திரையன் வேங்கட நெடுவரை* (அகம். 85:8-9)

*வேங்கட வைப்பிற் சுரன்இறந் தோரே* (அகம். 141-29)

*மாஅல் யானை மறப்போர்ப்புல்லி*
*காம்புடை நெடுவரை வேங்கடத்து உம்பர்* (அகம். 209:8-9)

*பனிபடு சோலை வேங்கடத்து உம்பர்* (அகம். 211-7)

*ஓங்கு வெள்ளருவி வேங்கடத்து உம்பர்* (அகம்.213-3)

*செந்நுதல் யானை வேங்கடம் தழீஇ* (அகம்.265-21)

*வேங்கடம் இறந்தனர் ஆயினும்* (அகம்.393-20)

*ஒலி வெள்ளருவி வேங்கட நாடன்* (புறம். 381-22)

*வேங்கட விறல் வரைப்பட்ட* (புறம். 385-11)

*கல்லிழி அருவி வேங்கடங் கிழவோன்* (புறம். 389-11)

*வேங்கட வரைப்பின் வடபுலம் பசித்தென* (புறம். 389-7)

போன்ற பாடல்களின் மூலம் வேங்கடம் அறியப்படுகிறது. தமிழ்நாட்டின் வடஎல்லையாக அமைந்திருந்த வேங்கடம் இன்று திருப்பதி என வழங்கப்படுகிறது. தொண்டை நாட்டை ஆண்ட சங்ககாலப் புல்லி என்ற தலைவனின் மலையாக வேங்கடத்தைச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. திரையன் என்பவனின் ஆட்சியிலும் இருந்திருக்கிறது.

## வியலூர்

*இறுகுரல் நெய்தல் வியலூர் நூறி* (பதிற்று. ஐந்தாம் பத்து, பதிகம். 11)

*நறவு மகிழிருக்கை நன்னன் வேண்மான்*

*வயலைவேலி வியலூர் அன்ன* (அகம். 97:12-13)

போன்ற அகநானூறு, பதிற்றுப்பத்துப் பாடலடிகளிலிருந்து வியலூர் என்ற ஊரினை அறியமுடிகின்றது. செங்குட்டுவனின் வெற்றிகளில் வியலூர் வெற்றியும் ஒன்று. அகநானூற்றில் இவ்வூர் நன்னன் வேண்மானின் தலைநகர் என்று குறிக்கப்படுகிறது. இது மருத வளமும், நெய்தல் வளமும் பொருந்தியதாகும். இன்று கர்நாடக மாநிலத்தில் பேளூர் என்று வழங்கும் பெய்லூரே சங்க இலக்கியம் சுட்டும் வியலூர் ஆகும்.

*கறிவளர் சிலம்பில் துஞ்சும் யானையின்*

*சிறுகுரல் நெய்தல் வியலூர்* (சிலப். 28:114-115)

என்று இளங்கோவடிகளும் பாடியுள்ளமையால் மிளகும், யானையும் மிகுந்த மலைப்பகுதியும் கடற்கரை வளமும் ஒருங்கு பொருந்தியது வியலூர் என்று அறிய முடிகிறது. திராவிட மொழிகளில் மொழிமுதல் ல் > வ் ஆதல் இயல்பு. அத்துடன் மொழி முதல் இ > எ ஆதலும் இயல்பு. இதன் காரணமாகக் கன்னடத்தில் வியலூர் > பெயிலூர் ஆனது. இன்று பேச்சு வழக்கில் பேளூர் என்று வழங்கப்படுகிறது. மொழி முதல் எகர உயிர் நீண்டு ல் > ள் என மாறி வழங்குகிறது.

## நிறைவாக

தொண்டைநாட்டின் சங்ககால எல்லையான, வேங்கட மலையிலிருந்து ஆட்சி செலுத்திய திரையரே தொண்டையர். தொண்டைநாட்டின் இன்றை ஆட்சிப்பகுதிகள், தொண்டை நாட்டின் எல்லையிலிருந்த சங்ககால ஊர்களான ஆமூர், ஆர்க்காடு, இடைக்கழிநாடு, இடையாறு, உரோடகம், எயிற்பட்டினம், ஓய்மாநாடு, கச்சி, கரும்பனூர், கிடங்கில், குறுங்கோழியூர், குறும்பூர், கோவல், கோவூர், செங்கண்மா, திருவெ.்கா, நல்லூர், நீர்ப்பெயற்று மாவிலங்கை, முள்ளூர், வல்லம், வீரை, வேலூர், தொண்டைநாட்டுப்புலவர்கள் மற்றும் தமிழக எல்லைக்கு

அப்பாற்பட்ட ஊர்களாக அறியப்பெறும் எருமையூர், ஏழிற்குன்றம், கடம்பின் பெருவாயில், குன்றுகட்பாலி, சாலியூர், நாவல், பவத்திரி, பாடலி, வடமோதம், வாரணவாசி, வேங்கடம், வயலூர் போன்ற ஊர்ப்பெயர்கள் இவ்வியலில் விளக்கப்படுகின்றன.

## அடிக்குறிப்புகள்

1. வாழ்வியில் களஞ்சியம், தொகுதி பத்து, ப. 919
2. மீனாட்சி சுந்தரனார், தொ.பொ. சங்ககால இலக்கியச் சிறப்புப்பெயர்கள், ப. 342
3. இராசமாணிக்கனார், மா., அற்றங்கரை நாகரிகம், ப. 10
4. Poornalingam pillai, M.S. Tamil Literature, p. 12
5. பெரும். அடி. 37
6. புறம். 90
7. S.I.I. Vol.V. No. 244
8. ஆளவந்தார், ஆர்., இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், ப. 70
9. மேலது, ப. 76
10. மதுரைத் தமிழ்ப்பேரகராதி, ப. 348
11. இராசமாணிக்கனார், மா., பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 151
12. ஆளவந்தார், ஆர். மு.கு.நூ. ப. 95
13. மேலது, ப. 96
14. நாராயணவேலுப்பிள்ளை, எம்., சிலம்பும் மேகலையும், ப. 111
15. S.I.I. Vol.VII No. 159
16. ஆளவந்தார், ஆர். மு.கு.நூ. ப. 108
17. South Arcot District Gezettear p. 368
18. பகவதி, கே., இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் (தொகுதி-இரண்டு) ப. 126
19. ஆளவந்தார், ஆர். கல்வெட்டில் ஊர்ப்பெயர்கள் ப. 172
20. மேலது, ப. 172
21. மேலது, ப. 173
22. Samy, P.L., Nannan of North Malabar (Quarterly Research Journal of the Tamil University, Thanjavur) Vol. I. No. 1
23. இராசமாணிக்கனார், மா. மு.கு.நூ. ப. 128

